# ஸ்ரீராமாநுஜன் 147

148

P. B. ANNANGARACHARYA, L. Kancheepuram

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச்சந்தா ரூ. 5.

25



சார்வரிஷு பங்குனிமீ

1961ஷு மார்ச்சுமீ

ஸ்ரீராமாநுஜன் 147

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும்பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 13 | 1961ளு மார்ச்சுமீ<br>சார்வரிளு பங்குனிமீ | ஸஞ்சிகை 3 |
|---|---|---|

## திருவாய்மொழி நூற்றந்தாதி—38

ஏறு திருவுடைய ஈச னுகப்புக்கு*
வேறுபடி லென்னுடைமை மிக்கவுயிர்—தேறுங்கால்*
என்றனக்கும் வேண்டா வெனுமாறன் தாளை நெஞ்சே*
நந்தமக்குப் பேருக நண்ணு.

| | | | |
|---|---|---|---|
| ஏறு திருஉடைய | தனது திருமார்பில் ஏறி வீற்றிருக்கின்ற பெரிய பிராட்டியாரை யுடையனான | தேறுங்கால் | ஆராயுமிடத்து |
| ஈசன் | எம்பெருமானுடைய | என் தனக்கும் வேண்டா எனும் | எனக்கும் வேண்டியதில்லை யென்று வெறுத்துரைத்த |
| உகப்புக்கு | வேண்டுதலுக்கு | மாறன் | ஆழ்வாருடைய |
| வேறுபடில் | விபரீதமானல் | தாளை | திருவடிகளை |
| என் உடைமை | மணிமாமை முதலிய ஆத்மீயங்களும் | நெஞ்சே | மனமே! |
| | | நம் தமக்கு | நமக்கு |
| மிக்க | இவற்றினும் உயர்ந்த | பேறு ஆக | ப்ராப்யமாக |
| உயிர் | ஆத்மாவும் | நண்ணு | விரும்புவாயாக. |

*சீலமில்லாச் சிறியனேனு மென்கிற கீழ்த் திருவாய்மொழியில் *கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனி சோர நின்று *எப்பொழுதும் கண்ணநீர் கொண்டு ஆவி துவர்ந்து துவர்ந்து *நள்ளிராவும் நன்பகலும் ஓலமிட்டழைத்துக் கதறின விடத்திலும் எம்பெருமான் வந்து முகம் காட்டாமையாலே ப்ராப்தனுய் சீலவானுய் விரோதிகளைக் கிழங்கெடுக்க வல்லனு யிருக்கின்ற அவன் இந்த நிலைமையிலும் வந்து முகங் காட்டாதது இத்தலையை வேண்டாமை யாலன்றோ; அவனுக்கு வேண்டாத ஆத்மாத்மீயங்கள் எனக்குத்தான் எதுக்கு? என்று வெறுத்து அவற்றில் நசையற்றபடியை *ஏருளு மிறையோனில் பேசின பராங்குசனுடைய பதவிணையே நமக்குப் பரம புருஷார்த்த மென்றதாயிற்று.

கேட்டாரெல்லாரும் நீராம்படியாகக் கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வார் கூப்பிடச் செய்தேயும் எம்பெருமான் வந்து முகங் காட்டிற்றிலன். அதனுல் எம்பெருமான் தம்மை வேண்டாவென்று வெறுத்திருப்பதாக நிச்சயித்தார். அவனுடைய வெறுப்புக்கு இலக்கான இந்த ஆத்மாவும் ஆத்மீயங்களும் நமக்கு எதுக்கு? அவனுக்கு வேண்டாதவை நமக்குத்தான் வேணுமோவென்று ஆத்மாத்மீயங்களை யெல்லாம் உபேக்ஷிக்கிருர் *ஏருளு மிறையோனும் திருவாய்மொழியில்.

ஆழ்வார் ஜநககுல ஸுந்தரியோடே யொத்திருப்பர் என்றுயிற்று நம்முதலிகள் அறுதி யிட்டிருக்கும்படி. அப்பிராட்டி அசோகவனத்திலிருந்தபோது *ந ஹி மே ஜீவிதேநார்த்த: நைவார்த்தைர் ந ச பூஷணை: | வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம் || ந ஹி மே ஜீவிதேநார்த்த: நைவார்த்தைர் ந ச பூஷணை:, வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம்.” என்று ஆத்மாத்மீயங்களை யெல்லாம் வெறுத்தாள். பெருமாள் விரும்பாதே ராக்ஷஸிகள் நடுவே சிறையிருக்கின்ற வெனக்கு உயிர் உடைமை முதலியவற்றால் என்ன பலன்? என்றாள். அந்த நிலைமைதானே இப்போது ஆழ்வார்க்கு முண்டாயது.

இத்திருவாய்மொழியைப் பரிபூர்ணமாகத் தமது ஸ்தோத்ரரத்நத்தில்—“ந தேஹம் ந ப்ராணாந் ந ச ஸுகமசேஷாபிலஷிதம் ந சாத்மாநம் நாந்யத் கிமபி தவ சேஷத்வவிபவாத்! பஹிர்பூதம் நாத! க்ஷணமபி ஸஹே, யாது சததா விநாசம் தத்ஸத்யம் மதுமத! விஜ்ஞாபநமிதம்!—ந தேஹம் ந ப்ராணாந் ந ச ஸுகமசேஷாபிலஷிதம் ந சாத்மாநம் நாந்யத் கிமபி தவ சேஷத்வவிபவாத். பஹிர்ப்பூதம் நாத! க்ஷணமபி ஸஹே, யாது சததா விநாசம் தத் ஸத்யம் மதுமத! விஜ்ஞாபநமிதம்.” என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. (இதன் கருத்து:— மதுஸூதநனே! திருமுன்பே ஸத்யமாக ஒரு விண்ணப்பம் செய்கிறேன், கேட்டருளவேணும்: அஃது என்னென்னில்; “சரீரமாத்யம் கலு தர்மஸாதநம்” என்கிறபடியே தர்மாநுஷ்டானங்களுக்கு முதல் ஸாதனமான சரீரமும் அதற்குத் தாரகங்களான பிராணன்களும், பிராணிகளெல்லாரும் மிகவிரும்பும் ஸுகமும், இவை யெல்லாவற்றிற்கும் ஆச்ரயமாக நிற்கும் ஆத்மாவும், மற்றும் புத்ர மித்ர களத்ராதிகள் எதுவாகிலும் உன்னுடைய சேஷத்வத்திற்கு உபயுக்தமாகில் வேண்டும்; அதற்குப் புறம்பாகில் வேண்டா; இவை யெல்லாம் உருமாய்ந்து போகட்டும், இது கழுத்துக்கு மேலே சொல்லுகிற வார்த்தையன்று; இது பொய் சொன்னதாகில் உன்னிடத்தில் மது என்னும் அசுரன் பட்டபாடு படுவேனாக்கடவேன—என்பதாம்.

பகவத் கைங்கர்யத்திற்கு உறுப்பல்லாதவை த்யாஜ்யம் என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியிடப்பட்டதாகும். ஆண்டாளும் “கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும், அள்ளிப் பறித்திட்டு அவன் மார்விலெறிந்து என்னழலைத் தீர்வேனே” என்றருளிச் செய்தது இங்கே நினைக்கத்தகும்.

இந்தத்திருவாய்மொழி ஆழ்வார் தாமான தன்மையிலே நின்று அருளிச்செய்வதன்று; நாயகீ ஸமாதியாலே அருளிச்செய்கதென்னுமிடம் “மணிமாமை குறைவிலமே” “மேகலையால் குறைவிலமே” “வரிவளையால் குறைவிலமே” என்பவற்றால் விளங்கும். திருமங்கையாழ்வாரும் பெரிய திருமடலில் “கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின், நன்னறு வாசம் மற்றாரானு மெய்தாமே, மன்னும் வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோல், என்னுடைய பெண்மையும் என்னலனு மென்முலையும், மன்னுமவர் மங்கைமைந்தன், கணபுரத்துப் பொன் மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம் தோயாவேல், என்னிவைதான் வாளாவெனக்கே பொறையாகி, முன்னிருந்து மூக்கின்று மூவாமைக்காப்பதோர் மன்னுமருந்தறிவீரில்லையே” என்றருளிச்செய்தது காண்க. ... .... .... .... (38)

# வதந்தியில் செவிப்பட்ட வானமாமலைச் செய்தி

ஸ்ரீமதஹோபில ஜீயர் சென்ற மாதத்தில் வானமாமலைக்குச் சென்றிருந்தாராம் அங்கு ஏதோ ப்ரஸங்க மேடையில், பகவத் விஷய மெனப்படுகிற ஈடுமுப்பத்தாறாயிரப் படியைப் பற்றின ப்ரஸங்கத்தை வருவித்துக்கொண்டு பேசினாராம்—

“தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்திற்கு அஸாதாரணமான ஈட்டை தேசிக ஸம்ப்ரதாய ப்ரதாநமான மடம் எப்படி ப்ரவசநம் செய்து வருகிறதென்று சிலர் கேட்கிறார்கள். அவர்களுக்குத் தெரிவிக்கிறேன்; ஈடு தென்னாசார்ய ஸம்பிரதாயத்திற்கு அஸாதாரணமென்று சொல்லுவது ஸரியல்ல; அந்த க்ரந்தம் முற்றிலும் வடகலை ஸம்பிரதாயத்திற்குத்தான் பொருத்தமானது; தேசிக ஸம்பிரதாயத்திற்கு முரண்பட்டதன்று என்பதை நான் உபபாதிக்கிறேன். பிராட்டிக்கு உபாயத்வமில்லையென்று தென்னாசாரியர்கள் வாதிக்கிறார்கள்; ஈட்டில் பிராட்டிக்கு உபாயத்வம் ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கின்றது. அப்படியுள்ள விடங்களை இதோ காட்டுகிறேன் [என்று சொல்லிச் சிலவிடங்களைக் காட்டி] இங்கே யிருக்கின்ற வித்வான்களில் யாராவது இதற்கு மறுப்புச் சொல்லுவதானால் சொல்லலாம்.” என்றாராம். மடவித்வான்கள் சிலர் அங்கு வந்திருந்தும் வாய் திறவாமலே யிருந்து விட்டார்களாம். இதனால் அஹோஜீயர் அநாயாஸமாக வெற்றி பெற்றுவிட்டாராம்.

இப்படியாக ஒரு ப்ரவாதம் நமது காதில் விழுகிறது. இதன் உண்மை நமக்கு நேராகத் தெரியாது. ஒருவ ரிருவரன்றிக்கே பலர் சொல்லக் கேட்டோம். வஸ்துத: இது அஸத்தான வார்த்தையாயிருந்தால் மேலே நாம் எழுதுவதை யாரும் குறிக்கொள்ள வேண்டா. யதார்த்தமாயிருந்தால் நம் மறுப்புரைகளை உலகமெல்லாம் குறிக்கொள்க.

அஹோபிலமடம் தென்கலை ஸம்ப்ரதாயமாக விளங்கிவந்த காலத்தில் மடத்தார்க்கு ஈட்டில் ப்ராவண்யமும் தத்ப்ரவசநாநுஷ்டாநமும் இருந்து வந்ததாகக் கேள்வியுண்டு. ஸம்ப்ரதாயம் மாறி, தனியன்களையும் முற்றிலும் மாற்றியான பின்பு ஈட்டில் த்வேஷமும் தோஷோத்பாவநங்களும் மல்கி வருமதொழிய தத்ப்ரவசநப்ரஸக்தி லேசமும் கிடையாது. ஈட்டை தூஷித்த வியாஸங்கள் பலவற்றுக்கு ந்ருஸிம்ஹப்ரியா இடமளித்து வருகின்றதென்பது அபலபிக்க முடியாத விஷயம். ஆகவே ஈட்டு ப்ரவசநம் மடத்தில் நடந்து வருவதாக வாசாப்ரதாரணம் செய்யவே இந்த ப்ரஸங்கோத்பாவநமென்பதை நுண்ணறிவினுணர்க.

தேசிகன் தம்முடைய க்ரந்தங்களில் ஸ்தாபித்தருளியிருக்கிற அர்த்தங்களை முநித்ரயத்தாரும் தழுவினவர்களல்லர், மடத்தாரும் தழுவினவர்களல்லர் என்பதை நாம் பல நூல்களில் பரக்க நிரூபித்திருக்கிறோம். ஸமீப காலத்தில் நாம் வெளியிட்ட தேசிகஹ்ருதயமென்கிற நூல் அவற்றுள் சிகரமானது. அதிலுள்ள நமது நிரூபணங்கள் அசைக்கவும் முடியாதவையென்பதை நாமே சொல்லிக் கொள்ள வேணுமோ? தாராளமாகச் சொல்லிக்கொள்ளலாம்.

ஈட்டில் பிராட்டிக்கு உபாயத்வம் ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கின்றதென்று இவர் தாம் உபபாதிக்க ப்ரஸங்க மேடையில் ஸந்நிஹிதர்களாயிருந்த மடவித்வான்கள் மறுக்க முன்வரவில்லையென்று சொல்லப்படுவது உண்மையாயிருந்தாலும் ஆரோபிதமாயிருந்தாலும் அதனாலென்னாகும்? இங்கு முக்கியமாக இரண்டு விஷயம் உலகம் தெரிந்துகொள்ள வேண்டும்;—(1) எம்பெருமானும் உபாயம், பிராட்டியு முபாயம் என்றால் இதற்கு என்ன அர்த்தம்? மோக்ஷ ஸாம்ராஜ்ய மளிப்பதில் எம்பெருமானுக்குப்போலே பிராட்டிக்கும் ஸ்வதந்த்ரமான ஶக்தி உண்டு—என்பதுதானே அர்த்தம். பிராட்டிக்குப் புருஷகாரத்வ முண்டு என்றிசைந்தான பின்பு அவளுக்கு உபாயத்வமுமுண்டென்று வாய் திறக்க வழியே

கிடையாது. உபாயத்வமாவது—தானே கொடுக்க ஶக்தியுடைத்தாகை. அஃதிருக்குமாகில் "அசரண்ய சரண்யாம் அநந்ய சரணச் சரண மஹம் ப்ரபத்யே" என்று சொல்லித் தன்னடி பணிந்தார்க்குத் தான் உடனே கொடுத்துக் காத்தருள வேண்டியிருக்க ஸ்வதந்த்ரனும் ஸர்வஶக்தனுமான எம்பெருமான் பக்கலிலே மன்றாட வேண்டிய அவசியமென்கொல்? ஆகவே பிராட்டிக்கும் உபாயத்வ முண்டென்கிற வார்த்தை ஸர்வாத்மநா வ்யாஹதமாயிற்று. இது முதல் விஷயம்;

2. இனி இரண்டாவது விஷயமாவது, வேதாந்தவாசிரியர் பிராட்டிக்கு உபாயத்வ முரைப்பவரென்னில், மேலே நாம் உபபாதித்த சிறு விஷயத்தைக்கூட அவர் தெளிந்திலர் என்று அவர்க்குக் குறைகூறினதாகவே தலைக்கட்டும். உண்மையில் அவ்வாசிரியர் பிராட்டி விஷயத்தில் விபூதிபத்திலேஶமு மின்றிக்கே ஸகல பூர்வாசார்ய ஸம்மதமான பொருளையே பலவிடங்களிலும் பரக்கப் பேசியுள்ளார். சில காட்டுவோமிங்கு.

ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸார பரிபூர்ண ப்ரஹ்மாநுபவாதிகாரத்தில் "ஈச்வரனுக்குச் சத்ரசாமராதிகளைப்போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ—மோக்ஷப்ரதத்வ—ஸர்வாதாரத்வ—ஸர்வநியந்த்ருத்வ—ஸர்வசேஷித்வ – ஸர்வசரீரத்வ – ஸர்வசப்தவாச்யத்வ – ஸர்வ வேதவேத்யத்வ–ஸர்வலோக சரண்யத்வ–ஸர்வபல ப்ரதத்வ–லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிநியதங்கள்" என்றருளிச் செய்யப்பட்டது. இந்த மஹா வாக்கியத்தில் மோக்ஷப்ரதத்வத்தை முந்துறச் சொல்லி முடிவில் லக்ஷ்மீ ஸஹாயத்வத்தைச் சொல்லியிருக்கையாலே, லக்ஷ்மியினிடத்தில் லக்ஷ்மீ ஸஹாயத்வம் எப்படி அஸம்பாவிதமோ அப்படியே மோக்ஷப்ரதத்வமும் அவளுக்கு அஸம்பாவிதமென்றும் இவையெல்லாம் பரப்ரஹ்மத்திற்கே பொருந்துமென்றும் காட்டப்பட்டதாயிற்று. முனிவாஹந போகத்தில் ஆதி என்றவிடத்தும இப்படியேதானுள்ளது. ந்யாயஸித்தாஞ்ஜந ஜீவபரிச்சேதத்திலு மிப்படியேதான். தேசிகன் சில்லரை ரஹஸ்யங்களென்றும் சில ரஹஸ்யங்கள் ஸாதித்திருக்கிறார். அவற்றை ஸேவித்தால் நல்ல தெளிவு உண்டாகும். ரஹஸ்யரத்நாவளி யென்று ஒரு சிறு ரஹஸ்யம். அதில்,

"ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்......ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்."

என்றருளிச் செய்து இதை ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்தில் தாமே விவரித்தருளினார். உண்மையில் விவரணாபேக்ஷையேயில்லாத வாக்யமன்றோவிது. இப்படி நிஸ்ஸந்தேஹமாக வருளிச் செய்த விடங்கள் ஒன்றிரண்டல்ல: பல பல விடங்களுண்டு. சதுச்ச்லோகியில் மூன்றாவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் "மோக்ஷப்ரதே ஹி பகவதி முமுக்ஷூணாம் புருஷகாரதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்–[மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் புருஷகாரதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்]" என்றருளிச் செய்ததொன்று போதுமே. "எம்பெருமான்தான் மோக்ஷ மளிப்பவன்; அதனைப் பெறுவிப்பவளாக மாத்திரம் பிராட்டி இராநின்றாள்" என்பது இந்த ஸம்ஸ்க்ருத ஸ்ரீஸூக்தியின் பொருள். மேலுள்ள ஸூக்திகளும் பிராட்டிக்கு உபாயத்வமில்லை யென்பதையே நிலைநாட்டுவன.

ஆக, உபபத்திக்கு மிணங்காதே தேசிகோக்திகளுக்கும் பொருந்தாதேயுள்ள அர்த்தம் ஈட்டிலுள்ளதென்றால், இதைக் கேட்டுக்கொண்டு வித்வான்கள் வாய்திறவாதே யிருந்தார்களென்றால் அது "ந தே நிரஸநீயா:, கிந்து ஸோடநீயா:" என்று பட்டரருளிச் செய்த கணக்கிலேயாமத்தனை. தத்வஜ்ஞானமும் தத்வவிஷயணவாடவமு முண்டாகில் "ஈட்டில் எமக்கு அநுகூலமாகவுள்ள அர்த்த விசேஷங்கள்" என மகுடமிட்டு இவர் தாமே ப்ரியாவில் விஷயநிவேதநம் செய்தருளட்டுமே. ருஜுவானமார்க்கமேது இவர்களிடத்தில்?

---

ஆழ்வா ரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸப்ததிரத்நம்.

ஸப்ததிவய:பூர்திஸ்மாரகசிஹ்நம் த்விதீயக்ருதிரேஷா ।
ஸப்ததிரத்நஸமாக்யா ப்ராதுர்ப்பவதி ப்ரஹர்ஷதா விதுஷாம் ॥

## — முன்னுரை —

*சீலமில்லாச் சிறியேன் செய்யும் விண்ணப்பம். அடியேனுடைய எழுபதாமாண்டு நிறைவுக்கு நினைவு மலராக முன்னிதழில் எழுபது நல்வார்த்தைத் திரள் வெளியிடப் பெற்றது. ஸப்ததி ரத்னமென்கிற விதுவும் இரண்டாவது நூலாக வெளியிடப் பெறுகின்றது. இது நான்கு பகுதிகள் கொண்டது. நான்கு பகுதிகளும் சேர்ந்தே ஸப்ததி ரத்நஸமாக்யை பெறுகின்றது. முதலிரண்டு பகுதிகள் ந்ருஸிம்ஹ ப்ரியா நிரீக்ஷணமாகும். மூன்ருவது பகுதி லோகாபி ராமமாயிருக்கும். நான்காவது பகுதி "உத்தம க்ராமஜர்க்கு உத்தமோப தேசம்" என்று மகுடம் புனைந்திருக்கும். இவற்றைச் சிறிது விவரிக்கிறேன்.

ந்ருஸிம்ஹ ப்ரியா நிரீக்ஷணம். ஸ்ரீராமஜயந்தி மலராக ஸமீப காலத்தில் வெளிவந்த ந்ருஸிம்ஹ ப்ரியா பத்ரிகையிலுள்ள பலவகையான அவத்யங்களை ஆராய்ச்சி செய்வன முதலிரண்டு பகுதிகள். முதற் பகுதியானது கருணாகுத்ஸ்தனைப் பற்றி யெழுதிய ஒரு நபரைப் பற்றியது. இரண்டாம் பகுதியானது, "கிம் கநிஷ்டா: கிமு ஜ்யேஷ்டா:" என்று அவரோடு விகல்பிக்கலாம்படியுள்ள மற்றுஞ் சில வ்யக்திகளின் வியாஸங்களை விமர்சிப்பது. மூன்றும் பகுதி லோகாபிராமமாசையாலே விவரண நிரபேக்ஷம். நான்காவது பகுதியைப் பற்றி இங்குச் சுருக்கமாகத் தெரிவிக்கலாகிறது. உத்தம க்ராமஜனென்றால் அறியாதாரில்லை. இவர்க்கு திவ்ய ஶப்தத்தில் மிக வெறுப்புப் போலும்; அதனால் திவ்ய பதத்தை விலக்கிவிட்டு ப்ரபந்தமென்றே பேசுவர். அதை ரக்ஷிக்கிறவராமிவர். தத்ப்ரவர்த்தகர்களும் தத்வ்யாக்யாதாக்களுமான ஆசார்யவர்யர்களை தூஷிப்பதையே தொழிலாகக் கொண்டவிவர் *ஸ்வயமவிஶ்விதம் ஸ்வயம் நஜாநாதி* என்ற கணக்கிலே சில அநந்வித வாக்ய ராஶிகளை யெழுதிவிட்டு ப்ரபந்த ரக்ஷணம் பண்ணி விட்டதாகப் பாவிக்கிறுர். இவர் இப்போது திருவாய்மொழிக்கு உரையிடுகிறுர். மூலம் அடியோடு அறியாதவர். வியாக்கியானமு மறியாதவர். அறியாமை மட்டுமன்று; நாபி நிரம்பிய த்வேஷமு முள்ளவர். பூருவாசாரியர்களை தூஷிப்பதற்கென்றே இவர் இவ்வுரையிடும் பணியில் கைவைத்தவர் நமது ஸ்ரீராமாநுஜன் முத்ரணமாகு மிடத்திலேயே இவருடைய அவலக்ஷண ரசைஷயும். அச்சிடப்பட்டு வருவதால் கதாசித் அது கண்ணிற்பட்டாலும் நாம் காணுக் கண்ணிட்டு வருவது நெடுநாளாக. இப்போது *கேசவன் தமர் உரை அச்சாகி வருகிறதென்றும், அதில் *விட்டிலங்கு செஞ்சோதிப் பாசுரத்தி னுரையில் ஆசார்யாபசாரம் கனத்திருக்கிற தென்றும் ஒரு பெரியார் தெரிவிக்கவே அதை நாம் உபேக்ஷித் திருக்ககில்லாமல் உற்று நோக்க நேர்ந்தது. நோய் கண்டால் சிகித்ஸை செய்து தீரவேண்டியது கடமையாதலால் அந்த சிகித்ஸையே இதில் நான்காவது பகுதியாக வடிவெடுக்கின்றது. இந்நான்கு பகுதிகளும் ஸப்ததி ரத்ந ஸமாக்யாதம். நான்காவது பகுதியில் மட்டும் ஸப்ததி ரத்னங்களிழைக்க வேண்டுமென்று நமக்கு ஆவலுண்டு. ஆனால் அது ஸமயாந்தரத்திலாகும். "தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந்। க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு॥" என்ற கணக்கிலே ஆசார்ய தூஷகர்களை நாம் உபேக்ஷித்திருப்போமல்லோ மென்பதை அறியு முலகெல்லாம். ... .... *

# 1. கருணையும் காருண்யமும்.

1. வடமொழியில் கருணை யென்கிற சொல்லும் காருண்யமென்கிற சொல்லும் பரியாயமானவை. கருணைவ காருண்யம்; ஸ்வார்த்தே ஷ்யஞ். என்பது வியாகரண ப்ரக்ரியை. இச் சொற்களின் உண்மைப் பொருளை யுணர்வார் மிகச் சிலரே. தேசிகன் தசாவதார ஸ்தோத்ரத்தில் "இச்சாமீந! விஹாரகச்சப!" என்று தொடங்கி யருளிச் செய்து வரும் சுலோகத்தில் இராமபிரானை ஸம்போதிக்குமிடத்தில் 'கருணா காகுத்ஸ்த' என்றருளிச் செய்துள்ளார். இங்குக் கருணையாவது என்ன? என்பதை விவரிக்கின்றவொரு பண்டிதர் "தான் ஒரு பிரதிபலனை எதிர்பாராது இதரர்களது கஷ்டத்தைப் போக்குவது என்னலாம்" என்றெழுதியுள்ளார். (ந்ருஸிம்ஹ ப்ரியா ஸ்ரீ ராம ஜயந்தி மலரில் இது காணலாம்.) இவர்க்கு நல்ல தெளிவு பிறப்பிக்க வேண்டி இந்த வியாஸம் எழுத வெழுகின்றோம்.

2. பிறருடைய கஷ்டத்தைப் போக்குகை கருணையன்று; போக்குவதற்கு ஹேது வானவொரு மனோவிகாரம் கருணையாகும். இவருடைய கொள்கையின்படி "பரது:க்க நிராகரணம் தயா" என்று வடமொழியில் வியவஹரிக்க வேண்டியதாகும். அப்படி ஒருவரும் வியவஹரித்ததில்லை. "பரது:க்க நிராசிகீர்ஷா தயா" என்று சொல்லி வைத்தாருளர். நிராசிகீர்ஷை யென்பது நிராகரணேச்சை. அதுவும் நிராகரணமும் ஒன்றாகாது. "தான் ஒரு பிரதிபலனை எதிர்பாராது" என்றெழுதியுள்ள விவர் "ஸ்வார்த்தநிரபேக்ஷா பரது:க்காஸஹிஷ்ணுதா" என்கிற ஸ்ரீ பாஷ்யகாரருடைய திவ்ய ஸ்ரீஸூக்தியைக் கண்டவர் போலும். அதன் பொருள் இவர் நினைக்கிறபடியல்ல வென்பதை மேலே உபபாதிப்போம். வருந்திக் கிடக்கிற வொரு வ்யக்தியின்மீது ஒரு மஹாபுருஷனுக்குக் கருணையுண்டானால் அவனுக்குப் பரதுக்க நிராகரண சக்தியிருந்தால் தந்நிராகரணத்தில் ப்ரவர்த்திக்கிறான். சக்தியில்லையானால் ஐயோவென்று வருந்திக் கிடக்குமளவிலே நிற்கிறான். சக்தனாயிருந்தாலுங்கூட துக்க நிராகரணத்திற்கு அவகாசமில்லையானால் [சக்தனுக்குங்கூட] பரதுக்க தர்சனத்தாலே வருந்திக் கிடக்குமளவிலேதான் நிற்கவேண்டியதாகும். இவற்றுக்கு ப்ரசுரம் பர்யாப்தமான உதாஹரணங்களைக் காட்டுவோம்.

3. ஸ்ரீராமாயணம் பாலகாண்டத்தில் இரண்டாவது ஸர்கத்தில் வால்மீகி மஹர்ஷி அநுஷ்டானத்திற்குச் சென்றபோது ஒரு வேடன் செய்த பக்ஷி வதத்தைப் பேசிவிட்டு உடனே (ச்லோ. 13.) "[illegible] காருண்யம் ஸமபத்யத—ருஷேர் தர்மாத்மனஸ் தஸ்ய காருண்யம் ஸமபத்யத" என்று கூறப்பட்டுள்ளது. வேடனால் கொன்று வீழ்த்தப்பட்ட பறவையைப் பார்த்த தர்மாத்மாவான மஹர்ஷிக்குக் காருண்ய முண்டானதாகச் சொல்லிற்று. இங்கே காருண்யமாவது என்ன? என்பதை நிரூபகர்கள் நன்கு ஆராயவேண்டும். "இதரர்களது கஷ்டத்தைப் போக்குகை" என்கிற பொருளுக்கு இங்கு ப்ரஸக்தி லேசமாவது உண்டோ? அங்கு சேர்ந்ததாகத் தெரிவிக்கப்பட்டுள்ள கஷ்டமானது ஸர்வ சக்தனான ஸர்வேச்வரனாலும் போக்கக் கூடியதன்றே. ருஷிக்குக் காருண்ய முண்டாயிற்றென்றால் பரது:க்க நிராகரண முண்டாயிற்றென்பதும் பொருளன்று; நிராகரணேச்சை யுண்டாயிற் றென்பதும் பொருளன்று. துக்க முண்டாயிற் றென்பதுதான் பொருள். இது பொருளன்று என்னில்; தாம் கொண்ட பொருளை உபபாதிக்கலாமே.

4. கருணா காகுத்ஸ்த! என்கிற தேசிக ஸ்ரீஸூக்தியானது ஸ்ரீ சக்ரவர்த்தி திருமகனை நோக்கி யவதரித்ததாதலால் அப்பெருமான் தன்னுடைய கருணையை ஸ்ரீராமாயணத்தில் எவ்வாறு வெளியிட்டிருக்கிறு னென்பதைச் சிறிது பார்ப்போம். இது பார்ப்பதற்கு முன் எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருளினது எதற்காக வென்பதை முக்கியமாகப் பார்க்கவேணும். "குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்—குண பரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்று பட்டர் அருளிச் செய்திருக்கையாலே தன்னிடத்தில் நிரம்பியுள்ள சிறந்த திருக் குணங்களை வெளியிடுவதற்காகவே திருவவதாரங்கள் அமைந்தன வென்பது திண்ணமாகும்.

5. உத்தர ராம சரிதத்தில் "பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா" என்று பவபூதி மஹாகவி சொன்னதைக்கொண்டும், ஸ்தோத்ரரத்னத்தில் "ஸ்வாபாவிகாநவதிகாதிசயேசித்ருத்வம் பரிவாஹஸம்பவஹேதவோஹி:" என்று ஆளவந்தார் அருளிச் செய்ததைக் கொண்டும் பரீவாஹ்ப்தார்த்தம் தெளியக்கடவது. பரீவாஹ க்ரியை இல்லையானல் தரிப்பு ஏற்படாதென்பது உலகமறிந்த இயல்வு. எம்பெருமான் அவதாரங்களைச் செய்து அவற்றில் திருக்குணங்களை விளங்கச் செய்தருளாவிடில் அவனல் தரிக்க முடியாதென்பது தேறிற்றாகும். ஸாது பரித்ராணமும் துஷ்க்ருத் விநாசநமும் தர்ம ஸம்ஸ்தாபனமும் அவதார ப்ரயோஜநமாக அவன்றன்னாலே சொல்லப்பட்டிருந்தாலும் ஸ்வரூப குணாவிஷ்காரமே பரம ப்ரயோஜநமாகும்.

6 சாரீரக மீமாம்ஸையில் *ஸ்ருஷ்டிஸ்த்வதாவஸேஷாத்* என்கிற ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் "பரித்ராணாய ஸாதூநாம்" இத்யாதி கீதா ச்லோகத்தை விவரித்தருளுமிடத்து "அவதாரத்திற்கு ப்ரதாந ப்ரயோஜநம் ஸாது பரித்ராணமே; துஷ்க்ருத் விநாசநம் ஆநுஷங்கிகம்; ஸங்கல்ப மாத்ரத்தைக் கொண்டும் அது செய்து தலைக்கட்டலாகுமன்றோ" என்றருளிச் செய்துள்ளார். இதனல் ஸாது பரித்ராணம் ஸங்கல்ப ஸாத்யமாகாதென்றும் அவதரித்தே அது செய்து தீரவேண்டுமென்றும் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

7. "ஏன்? துஷ்ட சிக்ஷைக்கு உபயோகப்படுகிற ஸங்கல்பம் ஸஜ்ஜந ரக்ஷைக்கும் உபயோகப்படாதோ? என்று கேள்வி பிறக்கும். "து:ஷ்டா விநஷ்டா பவந்து" என்று ஸங்கல்பிப்பதுபோல "ஸாதவ: பரித்ராதா பவந்து" என்று ஸங்கல்பிக்க முடியாதா? அத்தகைய ஸங்கல்பத்தினல் ஸாது பரித்ராணம் ஸித்திக்க மாட்டாதா?" என்று சங்கை தோன்றினல் இதற்குப் பரிஹாரம் செய்ய ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாவரும் முற்பட வேண்டும். ஆழ்வார் திருவாய்மொழியில் (3—1—9) *மழுங்காத ஞானமே படையாக மலருலகில் தொழும்பாயார்க் களித்தால் உன் சுடர்ச் சோதி மறையாதே* என்றருளிச் செய்த பாசுரத்தையடியொற்றி ஸ்ரீ பாஷ்யகாரர் ஸ்ருஷ்ட்யதிகரண பாஷ்யத்திலிருந்து நாம் மேலே உதாஹரித்த விஷயத்தை அருளிச் செய்தாராயினும் 'ஸாது பரித்ராணம் ஏன் ஸங்கல்ப ஸாத்யமாகாது?' என்கிற கேள்விக்கு ஸ்ரீபாஷ்யாபிமானிகள் விடையிறுத்தேயாக வேண்டுமன்றோ.

8. *பரித்ராணாயேத்யாதி ச்லோக பாஷ்ய தாத்பர்ய சந்திரிகையில் தேசிகனும் அந்த ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியை உதாஹரித் தருள்வதோடு நில்லாமல் "நஹி ஸ்வவபுஷ்வாதிவத் ஸ்வதாரசநைரேண ஸம்ஸ்பர்ஸ்ஸாதனேந ஸாதவ: ப்ரத்யக்ஷீக்ருதம் ஸக்யம்" என்று ஸ்வஸூக்தியாலு மருளிச் செய்கிறர். இவ்விடங்களை ப்ரவசநம் செய்பவர்கள் ஏடு தள்ளிக் கொண்டும் கனைத்துக்கொண்டும் போமவர்களே யல்லது நெஞ்சுருகிக் கண் பனிப்ப நின்று பேசும் பாக்யவரிவாக முடையால்லர். அன்னவர்கள் கிடக்க.

9. கேண்மின்; ஸாது பரித்ராணமாவது என்ன? என்பதை நிஷ்கர்ஷித்தாலொழிய மேற்குறித்த கேள்விக்கு விடையிறுக்க இயலாது. அதற்குறுப்பாக ஸாதுக்களாவார் இன்னாரென்பதை முந்துற முன்னம் அறுதியிட வேண்டும். இவற்றில் நமக்கு ஆயாஸமில்லாதபடி ஸ்வாமி தாமே கீதா பாஷ்யத்தில் விவரித்தருளினர்; எங்ஙனே யென்னில்; (கீதை 4—8 பாஷ்யத்தில்) "ஸாதவ: — உக்தலக்ஷண தர்மசீலா வைஷ்ணவாக்ரேஸரா:............" இத்யாதி வாக்யத்தாலே ஸாதுக்கள் இன்னாரென்று காட்டியருளினர். அவர்களுடைய பரித்ராண ப்ரகாரம் எப்படிப்பட்டதென்பதை உடனே விவரித்தருளினர். "மத்ஸ்வரூப சேஷ்டிதாவலோகந - ஆலாபாதிதாநேந தேஷாம் பரித்ராணாய" என்கிற ஸ்ரீஸூக்தியினால். இந்த ஸ்ரீ ஸூக்தியின் பொருளை உட்புகாமல் மேலெழப் பார்த்தாலும் போதும். இதில் (மத்ஸ்வரூப) என்றதில் ஸ்வரூப சப்தார்த்தம் திவ்ய மங்கள விக்ரஹமென்று தேசிகன் உரைத்தருளினர். அதற்கு மேல் சேஷ்டிதாவலோகநதாநமும் ஆலாபதாநமும் அருளிச் செய்யப்பட்டிருக்கிறதல்லவா? *வாய் திறந்தொன்று பணித்ததுண்டு* என்று திருமங்கை யாழ்வாரருளிச் செய்தபடியே சோதி வாய் திறந்து வார்த்தையாடுவது ஆலாபதாநம்.

10. இனி சேஷ்டிதாவலோகநதாநமாவது என்னவென்று பார்க்கவேணும். விராத வதம் வாலி வதம் கபந்த வதம் முதலான சேஷ்டிதங்களின் அவலோகந தாநமா இங்கு ஸ்வாமிக்கு விவக்ஷிதம்? "யா கோஸலேந்த்ர வதநாவகீடிநீ பஹுதோத்தா ஸா நிர்ஜிதத்ரிஜகதி தஸ்யைவ தைநவகீர்த்தி:" (அதிமாநுஷஸ்தவே) என்னு மாசிரியர்கள் அவற்றை ஒன்றாக மதிப்பர்களோ?

11. கருணாகாகுத்ஸ்த! என்கிற ஸ்ரீஸூக்தியானது இராமபிரான் திறத்ததாகை யாலே அவனுடைய சேஷ்டித விசேஷங்களில் ஒன்று காட்டுவோம்; வாலி மாண்ட பின்பு பெருமாள் திருவுள்ள முடைகுலைப்பட்ட படியைப் பேசுகின்ற வான்மீகி முனிவர் *ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீரஹந்தா ராகவ: ஸஹோதரம் விமநா பபூவ = ஸஞ்ஜாத பாஷ்ப: பர வீர ஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ.* என்று பேசியுள்ளார். இதில் முன்னம் "ஸஞ்ஜாத பாஷ்ப:" என்று ஸுக்ரீவ துக்க தர்சனத்தாலே பெருமாள் கண்ணீர் விட்டழுத படியைக் கூறினான் ரிஷி. அது மேலுக்கு அழுதபடியோ? அன்றி உள்ளிலும் வெதுப் புண்டோ? என்ன; "முஹூர்த்தம் விமநா பபூவ" என்று உடனே சொல்லிற்று. விக்ருதம் மநோ யஸ்ய ஸ: — விமநா:; வெறுமனே அழுதவளவே யன்றிக்கே மனமும் விகாரமடையப் பெற்றானென்கை.

12. தசரத சக்ரவர்த்தியிடம் ஸ்ரீராம குணங்களை யெடுத்துக் கூறுகின்ற நகரவாஸி ஜனங்கள் *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:கித: — வ்யஸநேஷு மநுஷ்யாணும் ப்ருசம் பவதி து:க்கித:* என்றது ஸாமாந்யமான வார்த்தை; அத்தகைய ஸ்ரீராம குண விசேஷம் காணப்பட்ட விடம் கூறினது இங்கே. துக்கப்படுவ தென்பது ஹேயமாகையாலே அகில ஹேய ப்ரத்யநீகனான ஸர்வேச்வரன் ஒருபோதும் துக்கப்பட மாட்டான் என்றும், துக்கப்பட்டதாகக் கண்டால் அது வெறும் அபிநய மாத்ரமே யென்றும் சொல்லப் பிறந்தவர்களே மலிந்துள்ளார்கள்.

13. இத்தகைய பகவத்குணாஸஹிஷ்ணுக்கள் எம்பெருமானார் கூரத்தாழ்வான் பட்டர் முதலானோர் காலத்திலேயே தலைகாட்டி மடிந்தமை பகவத்குண தூஷணாதி ப்ரஸங்கமா யிருக்கையாலே இவர்களை கிரஸிக்க நாம் ஆயாஸங் கொள்ளத் தேவையில்லை.

14. "ஸ்வார்த்தநிரபேக்ஷா பரதுஃகாஸஹிஷ்ணுதா தயா" என்கிற ஸ்ரீ பாஷ்யகார ஸூக்தியைச் சிறிது விமர்ஶிப்போம். துக்கமுண்டாகும்போது அதனை ஸஹிப்பதும் ஸஹிக்க முடியாமையுமாகிற இரண்டு நிலைமைகள் எங்குமுள்ளன. துக்கத்தை ஸஹித்துக் கொள்ளுகையாவது அதைப் பாராட்டாமலிருந்து விடுகை. இனி, ஸஹிக்கமாட்டாமை யாவது என்ன? என்று விமர்ஶிக்க வேணும். "சைத்ரன் பத்நீவியோகத்தை ஸஹிக்க மாட்டிற்றிலன்; மைத்ரன் ப்ராத்ருவியோகத்தை ஸஹிக்க மாட்டிற்றிலன்" என்று சொல்லுவோமாயின் இதற்குப் பொருளென்ன? துக்கத்தை அதிகமாக வெளிக் காட்டுகிறுனென்பது தவிர வேறு அர்த்தமில்லையன்றே. உண்டாகில் உரைக்கலாம். ஏவஞ்ச, "பரதுஃகாஸஹிஷ்ணுதா தயா" என்றருளிச் செய்த எம்பெருமானாருடைய திருவுள்ளம் பரதுஃக்க துஃக்கித்வம் தயா என்பதேயாம். துஃக்கித்வமென்பதிற் காட்டிலும் அஸஹிஷ்ணுதா என்பது மிக மேம்பட்ட சொல். துக்கத்தின் எல்லையில் நிற்பதைக் காட்டுமிது.

15. ஆளவந்தார் "க்ஷுத்துத்ருஷ்ணாதவோஷ்ணம் ஸஹாமி கிம்வா ஸ்வதுஃஸஹோ ந ஸஹஜம் ஹி துஃஸஹம்"—எந்த துக்கத்தையும் நான் ஸஹித்துக் கொண்டிருக்கிறேனென்ருர். ஸம்பவிக்கின்ற துக்கங்களுக்காக நான் சிறிதும் கவலை கொள்ளவில்லை யென்பதுதான் இவ்விடத்திற் பொருள். இவ்வாசிரியர் தாமே மேலே "மஹாத்மபிர்மாமவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதிதுஃஸஹஃ" என்றருளிச் செய்கிருர். மஹாத்மாக்களான பாகவதோத்தமர்களின் க்ஷண கால விச்லேஷமும் எம்பெருமானுக்கு அத்யந்த மஸஹ்யம் என்றது இங்கு. அஸஹநத்வத்தை எங்ஙனே காட்டுகிறுனென்று கேட்டால் ஆர்ஜவத்துடன் விடையளிக்க வேணும். அளவுகடந்த மநோவிகாரத்தாலன்றி வேறு எதனுலும் அஸஹிஷ்ணுதையை உபபாதிக்க முடியாது. "வேதநா நவிவக்ஷிதஃ" என்பது விசார ஸஹமன்று.

16. அடியார்களிடத்தில் அநுகம்பையே வடிவெடுத்த எம்பெருமானுக்கு மநோவிகாரம் கிடையாதென்று வேதாந்திகளால் சொல்ல முடியாது. ஸஹஸ்ரநாமத்தில் விகர்த்தா என்றே ஒரு திருநாமமுள்ளது. அதற்கு பட்டருடைய பாஷ்யத்தை யெடுத்து ஸேவித்தால் மனம் தெளிவுபெறும். அடியார்களோடு கலந்து பரிமாறும்போது ஹர்ஷப்ரகர்ஷமும், அடியாருடைய விச்லேஷத்தில் ஆற்ருமையும் அவனுக்கு இல்லையென்ருல் அவனைப் பரமசேதநனென்று இசைந்து பயனில்லை. குணநுபவம் செய்பவர்களும் குண ஸம்ருத்தியை எழுதி வைப்பவர்களும் இல்லாத குணங்களையா அநுபவித்தார்கள்? எழுதிவைத்தார்கள்? இப்படிச் சொல்லுவதைவிட மாயாவாதிகளின் மதத்தில் உட்புகலாமே.

17. ஹர்ஷ ஶோகங்களை ஸ்வாதீனமென்றும், பராதீனமென்றும் இரு பகுதியாகப் பிரித்து பகவத்குணதர்ப்பணத்திலே பட்டர் ஸமர்த்தநம் செய்தருளியிருந்தும் அதைக் காணமலும், காட்டினுலும் காணகில்லாமலும் சுஷ்கவாதங்களையே ப்ரபஞ்சநம் செய்பவர்கள் *ஹர்ஷ பாவ ஸம்ப்ருக்த பாவபந்தமயம் ப்ரக்ஷித ப்ரணய ஸார ஸௌஹார்த்த வைலக்ஷண்ய ப்ரகாஶ ப்ரபவயோகியின் அருகும் வாராமே நிற்பது அழகிது. *கண்கள் சிவந்து திருவாய்மொழியின் ப்ரமேய மறியீரந்தோ!

18. "அடியார்க்கு ஆவா வென்றிரங்கி" என்றும், "ஆவாவென்று அடியேற்கு இறையிரங்காய்" என்றும் "ஆவாவென விரங்கார் அந்தோ! வலிதேகொல்! மாவாய் பிளந்தார் மனம்" என்றும் இங்ஙனே யுள்ள அருளிச் செயல்களை நிர்வஹிப்பது எப்படி? ஹா ஹா என்கிற வடசொல்லேயன்றே தமிழில் ஆவாவென்ருயிற்று. ஹாஹாகார மில்லாதவனைப்

பரமகாருணிகனென்பது எங்ஙனே? உலகிலுள்ள மருத்துவர்கள், நோயாளிகளாய் அஸஹ்ய துக்கமநுபவிக்கின்றவர்களைக் கண்டு சிறிதும் மனோவிகாரமடையாமல் சிகித்ஸை செய்வதுண்டு. அன்னவர்களுங்கூட தங்களுடைய உறவினர்க்கு சிகித்ஸை செய்ய நேருங் காலங்களில் மனோவிகார மடையாதிருக்க கில்லார்கள்.

19. "ஸுஹிதாய ஶாஸநாய" இத்யாதிகளான பல ப்ரமாணங்களை யெடுத்துக்கொண்டு ஒரு குறையுமின்றிக்கே பொருந்தவிட்டிருக்கும் பரிசுகள் நம் ஆசாரியர்களின் திவ்ய க்ரந்தங்களில் ஸுவிஶதம் பொலிந்து விளங்கா நிற்கவும் மருள் நீராதார்க்கு மொழிவதெல்லாம் *ஊமையரோடு செவிடர் வார்த்தையா மத்தனை.

20. *ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி: । ஜீவே து:காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே* என்ற ச்லோகத்தை யடியொற்றி பட்டர் ஸாதித்தது "அஸ்திவிரோதிதாநு ப்ரஸ்யவதி ஸம்ஸ்ருத: கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநா:" என்று. இதில் "தயமாநமநா:" என்றதை நன்கு விளக்கப்புகுந்த தேசிகன் தயாஶதகத்தில் "அநிதிவிஶிஷ்டாநுரூபயே ஜந்தூநவதீர்ய ஜாதநிர்வேதா" என்றருளிச் செய்தார். இந்த ஶதகத்தில் தயாரூபவான பகவானுடைய செயல்களை யெல்லாம் தயையின் மேலேற்றி அருளிச்செய்து வருவதால் து:காகுலர்களான ஜந்துக்களைப் பார்த்து ஜாதநிர்வேதத்வமேதான் தயமாநமநஸ்த்வமென்று சிலாஶாஸனம் செய்ததாயிற்று.

— உபஸம்ஹாரம். —

21. நிர்குண ப்ரஹ்மவாதிகளைக் கண்டித்து ஸகுணப்ரஹ்மஸ்தாபநம் பண்ணிப் போருவார் திரளிலே சேர்ந்தவர்கள் வேதோபப்ரும்ஹணார்த்தமான ஸ்ரீராமாயணத்திலே "பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே" என்ற மகுடத்தின் கீழ்ப் படிக்கப்பட்ட இந்த மஹாகுணத்தை இல்லை செய்யவும் தூஷிக்கவும் முற்படுவது ஶோசநீயேஷ்வபி ஶோசநீயம். "கருணையாவது இதரர்களுடைய கஷ்டத்தைப் போக்குவது என்னலாம்" என்று ஒரு பிரமாணத்தோடும் பொருந்தாதபடி யெழுதியது பிசகு. (போக்குவது) என்ற தமிழ்ச் சொல்லுக்கு நிவர்த்தநம் என்கிற அர்த்தம் போலவே நிவர்த்தகமென்கிற அர்த்தமும் சொல்ல இடமுண்டு. அப்படி அர்த்தமானால் ஒருவாறு பொருந்தும். அப்போது (கருணையாவது) என்றிருக்கக் கூடாது, 'கருணையானது' என்றிருக்க வேண்டும். எழுதினவர்க்கு அவ்வபிப்ராயம் சிறிதுமில்லை. கருணாலக்ஷணம் கூறுகின்ற விவர் அஸங்கதமாகவே கூறினாரென்று முடிந்தது.

22. ஸர்வஶக்தனோடு அஶக்தர்களோடு வாசியற எல்லார்க்கும் பொதுவான ரீதியிலே கருணாலக்ஷணம் கூறவேண்டும். பரது:காஸஹிஷ்ணுத்வமென்பதே யாகுமது. இதுதான் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்த லக்ஷணம். த்ரௌபதி, கஜேந்திராழ்வான்போல்வார் விஷயத்திலே எம்பெருமான் துயர் தீர்த்தவனாயிருந்தும் ஸம்ஸார து:க விஷயமான துக்கத்திற்குப் பரிஹாரம் கண்டதுண்டோ? "நாதிஸ்வஸ்தமநா யயௌ" என்றவிடத்து நிர்வாஹ ஸௌரஸ்யத்தை நினைப்பூட்டி நிற்கிறோம். நினைப்பூட்டுவது இவர்களுக்கன்று; மஹா ரஸிகர்களுக்கு. .... .... .... *

ந்ருஸிம்ஹ ப்ரியா நிரீக்ஷணத்தில் முதல் விஷயம் முற்றிற்று.

**இனி இரண்டாவது விஷயம். (ந்ருஸிம்ஹப்ரியாத:)**

23. பேசுவது எழுதுவது என்கிற இரண்டு காரியங்களும் விலக்ஷண பண்டிதர்களுக்குப் ப்ராப்தமானவை. ஆனால் வாயுடையாரெல்லாரும் பேசத் தொடங்குகிறார்கள்; எழுத்துக் கருவியுள்ளவர்களெல்லாரும் எழுதத் தொடங்குகிறார்கள். "வெண்பா இயற்றுவது கஷ்டம்; அதிலும் குறள் இயற்றுவது மிகவும் கஷ்டம்" என்னக் கேட்டவொருவர் அதன் இலக்கணத்தைச் சுருக்கமாகத் தெரிந்துகொண்டு "சிறப்புடன் பூனை இறப்பிலிருந்தால், புறப்பட மாட்டாதெலி" என்று குறளொன்று பாடிவிட்டுப் பெருமிதம் கொண்டாராம். இப்படி எவ்வளவும் பாடிவிடலாம், எவ்வளவும் பேசிவிடலாம். எழுதிவிடலாம்.

24. "ஸுநா[illegible]தாவஶ்யம் பஹுகுணவரீணாஹி" என்று பட்டர் அருளிச்செய்தபடியே வாணீ விலஸிதம் இக்காலத்தவர்களில் ஒருவர்க்கும் அமையாதெனினும் ஸுநா[illegible]தாவஶ்யமென்ற ஒரு விசேஷணமாவது அமையவேண்டுவது அவசியமாம். பேசுவதைப் பற்றிப் பிறகு சொல்வோம்; எழுதுவதைப் பற்றிச் சொல்லாதிருக்க முடியவில்லை. ஒரு பெரிய ஸ்தானத்திலிருந்து வெளிவருகின்ற பத்திரிகை யென்றால் சல்லடை போட்டுச் சலித்தாலும் ஒரு பிழைகூட காண்பதற்கு இடமின்றியே யிருக்கவேண்டுமல்லவா? அச்சுப் பிழை நேர்ந்துவிடுவது நிற்க. அதற்குக்கூட இடமின்றியே வெளிவருமவை ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநாதிகள் காணுகின்றோம். அச்சுப் பிழையாயிருந்தால் அதை எளிதாக யாவரும் தெரிந்து கொள்வர். அதைப்பற்றி நாம் ப்ரஸ்தாவிக்க மாட்டோம். மாலோல அச்சுக்கூடத்தில் வேலை செய்பவர்களெல்லாரும் சிரோமணிகளாம், காலக்ஷேபமெல்லாம் செய்து முடித்தவர்களாம். பண்டிதம்மந்யர்களான லேகர்களின் பிழைகளை அச்சுக்கோப்பவர்களான அவர்களின் தலையில் ஏற்ற நினைப்பது ஏலாது.

25. அச்சுப் பிழையென்பது தவிர மற்றைப்படியான பிழையில் இரண்டு வகையுண்டு; (1) அநந்விதமாக எழுதுவதொன்று. (2) பர்யாப்தமான படிப்பு இல்லாமையினால் பதஸ்வரூபமருமங்களை உள்ளபடி தெரிந்துகொள்ளாமல் கைபோனபடி எழுதிவிடுவது மற்றொன்று. இவ்விருவகையான பிழைகளும் மலிந்த பத்திரிகையைப் பிரசுரம் செய்வதனால் யாருக்கு என்ன உதவி செய்ததாகும். இக்காலத்தில் ப்ராஹ்மணேதரர்களும் மாதர்களும் எவ்வளவு அழகாக எழுதக் கற்றிருக்கிறார்கள் தெரியுமோ? அவ்வளவு அழகாக எழுதவேண்டாமிவர்கள். "மொட்டை சாத்தானி குட்டையில் விழுந்தான்" என்று எழுதினாலுங்கூட அதை ஒரு பிழையில்லாமல் எழுதவேண்டாமா? "ஸ்ரீமதே ராமாநுஜாய நமஹா" என்று எழுதிக் கொண்டிருந்தவர்களை யெல்லாம் கிளப்பி 'பணம் காசு தருகிறோம், எழுதுங்கள்' என்றால் அவர்கள் என்ன எழுதக்கூடும்? நிர்ப்பந்தம் பொறுக்கமாட்டாமல் எதையோ எழுதியனுப்பிவிட்டால் அதை ஒழுங்குபடுத்தி அச்சுக்குக் கொடுக்கவும், அச்சிட்டபின் நன்கு திருத்தவும் ஒரு சிறந்த பண்டிதர் வேண்டாவா? 'செய்வன திருந்தச் செய்' என்றதையு மறியாமல் ஏதோ காரியம் நடத்திவருகிறார்களந்தோ!

26. "ஸஞ்சார க்ரமம்" என்று மகுடம் புனைந்த வியாஸம் அடிக்கடி வெளிவருகிறதே; இதை யெழுதுபவர் யார்? என்று கேட்டதற்கு 'முதலாளியேதான் எழுதியனுப்புகிறார்' என்கிறாரொருவர். 'காஸாகாரர்தாம் எழுதியனுப்புகிறார்' என்கிறார் மற்றொருவர். நாம் அஜ்ஞாத ப்ரச்நம் பண்ணவில்லை. ஜ்ஞாதாஜ்ஞாதீகரணம் ஆயிற்றத்தனை. ப்ரஸ்துத

ஜயந்தி மலரில் உபக்ரமத்தில் "மானமதுரையில் பந்தல்குடி வக்கீல் அய்யங்காரால் பெருமாளுக்கு திருமஞ்சனம் பண்ணிவைத்து ததியாராதனமும் பண்ணிவைத்தார்" என்றுள்ளது. பண்ணிவைத்தாரென்ற வினைமுற்றுக்கு எழுவாய் தெரியவில்லை? யார் பண்ணிவைத்தாரென்று கேட்டால் மானம் பார்க்கவேண்டியதே. அய்யங்காரால் என்கிற த்ருதீயைக்கு எங்கே அந்வயமென்று கேட்டால் அதற்கும அதுவே கதி. (பண்ணி வைத்தார்கள்) என்றிருந்தாலாவது 'மானமதுரையார்கள் அய்யங்காரைக் கொண்டு பண்ணிவைத்தார்கள்' என்று ஒருவாறு கருத்து அமைத்துக் கொள்ளலாம். 'இப்போதுள்ள ரீதியில் என்ன குறை?' என்பரேல் ஒரு குறையுமில்லையென்று விட்டிடுவோம். இவர்களுக்கு எதிலும் குறையில்லை.

27. மேலே "விசிஷ்டாத்வைதத்தைப் பற்றி ஸ்ரீ அழகியசிங்கரால் விசேஷமாக உபந்யாஸம் செய்துவைக்கப்பட்டது" என்றுள்ளது. (செய்யப்பட்டது) என்றோ, (செய்தருளப்பட்டது) என்றோ (செய்தருளியாச்சுது) என்றோ எழுதுவதை விட்டு [செய்து வைக்கப்பட்டது] என்றதிலுள்ள சுவையை யுணரமாட்டார்? சுவைமிக்க சொற்றொடை இது போலும். இங்கு நமக்கு முக்ய விவக்ஷிதம் இதுவன்று; மேலே கேளீர்.

28. காஞ்சீபுரியில் சின்னி வீராதாசாரியரென்று ஒருவரிருந்தார். இவர் வ்யாகரணந்தம் ந்யாயம் வாசித்தவராம். வ்யாகரணம் வாசித்ததாகச் சொல்லிக் கொள்வதோடு நில்லாமல் புதுக்கோட்டை, கத்வால், வநபர்த்தி முதலானவிடங்களில் நடக்கும் ஸதஸ்ஸுக்களுக்கும் சென்று வாக்யார்த்தம் சொல்லி உத்தம ஸம்மானம் பெற்று வந்ததாகவும் சொல்லிக் கொள்வாராம். "சதுர்தஶ லக்ஷணியில் நான் ஒரு பெரிய விஷயம் சொன்னேன்; அதற்குமேல் ஆஸ்தான வித்வான் ஒரு கோடி சொன்னார்; அதை உடனே பக்ஷதையில் ஒரு விஷயத்தை யெடுத்துச் சொல்லிக் கண்டித்துவிட்டேன்; அதற்குமேல் அவன் ஒன்றும் சொல்லமுடியாமல் நிற்க, வேறொரு வித்வான் ஏதோ பூர்வபக்ஷம் பண்ணினார்; உடனே நான் ஸித்தாந்த லக்ஷணத்திலிருந்து விஷயம் சொல்லி அதைக் கண்டித்துவிட்டேன்"………. என்று இப்படியே ஓயாமல் தன்னுடைய வாதவைஷ்ணவத்தைச் சொல்லிக் கொண்டிருப்பராம். இடையிலே ஒருவர் வந்து "நீர் சொன்ன விஷயமென்ன? அதன்மேல் பூர்வபக்ஷம் வந்த வ்யாகாரங்கள் என்ன? பிறகு நீர் ஸ்தாபித்த ஸித்தாந்தமென்ன?" என்று கேட்பாராம். அதற்கு பதில் சொல்லச் சரக்கில்லாமையாலே அதை விட்டுவிட்டு முன்சொன்ன வகையிலேயே பேசிக்கொண்டிருப்பாராம். இது சின்னி வீராதாதம் வாக்யார்த்தமென்று ப்ரஸித்தம.

29. இதேபோல "அழகசிங்கர் ஆச்சரியமாக விஷயம் ஸாதிச்சாச்சுது; பண்டிதர்களெல்லாரும் திக்ப்ரமம் பிடித்து நிற்கும்படி ஸ்ரீபாஷ்யத்தில் இதுவரை ஒருவரும் சொல்லக் கேட்டிராத அபூர்வ விஷயங்களை சொரிந்தாச்சுது" என்று சொல்லித் திரியவும், இவ்வண்ணமாகவே பத்ரிகையில் எழுதிப் ப்ரசுரம் செய்யவும் பொருட்செலவு அபரிமிதமாகச் செய்யப்பட்டு வருகிறது. ஸ்தானத்திற்கு இது மிகவும் ஆவச்யகம் என்பதை நாம் மறுப்போமல்லோம். நெடுந்தெருவில் "ஜஜ்ஞாஸத்கஸ்ரீ நகவம கஷாயெண வியெபதெ" என்கிற ஒரு வாக்யத்தை யெடுத்துக்கொண்டு ஐந்தாறு மணிகாலம் ஆச்சரியமாக உபந்யஸிச்சாச்சுது என்கிறார் ஒருவர். திருப்பாவையில் தூப்பல் என்கிற சொல்லை ஆண்டாள் ஸர்வஜ்ஞானத்தாலே ஒரு பாசுரத்தில் அமைத்திருக்கிறாளென்று ஸாதித்து *தூமணி மாடத்துப் பாசுரத்தில் அதைக் காட்டியாச்சுது என்கிறார் ஒருவர். எப்படியென்றால், பாட்டின் முதலெழுத்து (தூ); மாமீர் அவளை யெழுப்பீரோ என்றவிடத்தில் (ப்) உள்ளது; ஆக (தூப்) என்றாயிற்று;

'மந்திரப்பட்டாளோ' என்றவிடத்தில் (ப) உள்ளது. ஆக, (தூப்ப) என்றாயிற்று; 'எம்பெருந்துயில்' என்றவிடத்தில் (ல்) உள்ளது; ஆக (தூப்பல்) தேறிவிட்டதல்லவா? என்று நிரூபணம் செய்தருளியாச்சுதாம். இதைக் கேட்டவர்கள் யாவரும் 'இது என்ன விலக்ஷண மேதா விலாஸம்!' என்று உகந்து வியந்து கரைந்து மூக்கிலே விரலை வைத்தார்களாம்.

30. ஸ்ரீ பாஷ்ய ஶாந்தி செய்தவன்று வித்வான்களெல்லாரும் திகைத்துப் பிடித்து நிற்கும்படி ஆச்சரியமாக ஸாதிச்சாச்சுது என்கிறார்களே, அந்த அர்த்த விசேஷம் உமக்குத் தெரியுமோ? என்று *சாரியரைக் கேட்க, ஹா ஹா! அது எவ்வளவோ ஆச்சரியமான விஷயமல்லவா? என்று அவர் கண்ணீர் மல்க நின்று சொன்னார். மூன்று மணி காலம் ஸாதித்தும் ஸூத்ரார்த்தமே முடியவில்லையே; பாஷ்யத்தைத் தொடவே அவகாசப்படவில்லையே! என்றார். அதைக் கொஞ்சம் சொல்லலாகாதோ? என்ன, "சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேளும்; புங்காநுபுங்கமாக ஸாதித்தாச்சுது; ஸாரமாகச் சொல்லுகிறேன் கேளும்" என்று தொடங்கிச் சொன்னார். *அநாவ்ருத்தி: ஶப்தாத்* என்பது ஸூத்ரம். 'ஸூத்ரேஷ்வத்ருஷ்டபதம் ஸூத்ராந்தராதநுவர்த்தநீயம்' என்று நியாயமாகையாலே பூர்வ மீமாம்ஸையிலிருந்தும் அஷ்டாத்யாயியிலிருந்தும் பல பல பதங்களை அநுவ்ருத்தி செய்துகொண்டு ஸாதிச்சாச்சுது. அநாவ்ருத்தி. என்று பிரித்துக்கொண்டு (அ) அத்வைத மதமானது; (ந) அஸங்கதம். ஏனென்றால் (அவ்ருத்தி) இவர்களின் பக்ஷத்தில் வ்ருத்தி க்ரந்தம் அநுகூலமாக இல்லாமையாலே. இது எப்படி தெரிகிறதென்றால் (ஶப்தாத்) வ்ருத்தி க்ரந்தத்தை தூஷித்து அவதீர்கள் எழுதிக் கொண்டிருக்கிற ஶப்தங்களாலே நன்கு தெரிகிறது. இங்கே ஶகாரஷிகவும் எப்படி வந்ததென்று பரிசாரகர் கேட்டுவிட்டார்; அர்த்த ஸ்வாரஸ்ய மறியாமல் இது என்ன கூஷ்மாண்டம்! என்று அவரை வெருட்டித் தள்ளியாச்சுது. ஒரு ஶாஸ்த்ரத்திலுள்ள ஸூத்ரத்தை நிர்வஹிக்க வேறொரு ஶாஸ்த்ரத்திலிருந்து வசங்களைக் கொண்டு கூட்டலாமோ? என்று கண்ணன் கேட்க, ஓய்! நீர் வியாகரண வாஸனையே அறியீர் போலும்; *ஜநிகர்த்து: ப்ரக்ருதி:* என்கிற பாணினிஸூத்ரத்தை நிர்வஹிக்க ப்ரஹ்மஸூத்ரத்தில் 'ஜந்மாத்யஸ்ய யத:' என்றதிலிருந்து ஜந்ம என்று கொணர்ந்து 'ஜநிகர்த்து ஜந்மந:' என்று அர்த்தம் சொல்லுவதில்லையோ? என்ன, அவரும் திகைத்துப் போனார். என்றித்தகைய விசேஷங்கள் நமது செவியில் க்ஷணே க்ஷணே விழுகின்றன. "யதிஶ்ருங்கம் விஷயேத ஹாஸ: ஸஜ்ஜ தைவஹி' என்பர் பலர்.

31. ப்ரக்ருத விஷயத்தில் ஒன்றே சொல்லி முடிக்கிறோம். நிகழும் சார்வரி வருடத்தில் நடந்த எம்பெருமானார் மஹோத்ஸவத்தில் ஸ்ரீபெரும்பூதூரில் விஶிஷ்டாத்வைத வித்வத் பரிஷத்தை ஐந்து நாள் நாம் முன்னின்று நடத்தினோம். அதில் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் மேன்மைகளைப் பலமுகமாக உபந்யஸித்தோம். உபந்யஸித்த விஷயங்களை உடனே ஸம்ஸ்க்ருதம், தமிழ், ஹிந்தி, தெலுங்கு ஆகிய நான்கு பாஷைகளிலும் விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம் என்னும் பெயரால் அச்சிட்டுத் திசைதோறும் பரவச் செய்துள்ளோம் புஸ்தகரூபேண. அபேக்ஷகர்களுக்கு அமூல்யமாக உதவி வருகிறோம், உதவுவோம். "விசிஷ்டாத்வைதத்தைப் பற்றி விசேஷமாக உபந்யாஸம் செய்து வைக்கப்பட்டது" என்றெழுதியுள்ளவர்கள் அப்படி வைக்கப்பட்டிருக்கிற வதனைப் பெருநாடு காணப் பிரசுரம் செய்து வைக்கட்டுமே. உபயோகமற்ற வியாஸங்களால் வஸ்துவரணம் செய்வதைவிட்டு இத்தகைய

உபாவ்ருதி ஸூக்திகளாலேயே நாடுகளையும் நகரங்களையும் நன்கு அநுக்ரஹிக்கலாமே. ஆச்சர்யமும் அத்புதமும் ஸௌந்தர்யமுமான ஸ்ரீஸூக்தி ஸாதிக்கும் வல்லமையை யாவரு மறிந்து உகக்க வழியுண்டாகுமே. இனி அடுத்த வியாஸத்திற் செல்லுவோம்.

32. "கலியனையடியோற்றிய கவிகளிற்சிலர்" என்று மகுடமிட்டு ஒருவர் வியாஸ மெழுதியுள்ளார். இவர்க்கும் கலியனுக்கும் காலிகஸம்பந்தங்கூடகிடையாது. யார் எதைப் பற்றி யெழுதுவதென்கிற நியதியில்லையா? கலியனுக்கும் கம்பனுக்கும் ஏதோ வொரு பொருத்தங்காட்ட வெழுகின்றாரிவர். தமிழில் வாக்குண்டாமென்று ஒரு சிறுநூலுண்டு; அதற்கும் ரகுவம்சத்திற்கும் பொருத்தங்காட்டவெழுந்த வொரு பண்டிதர், ஹா ஹா! பாருங்கள்! என்ன ஒற்றுமை நயம்! என்ன ஐக கண்டியம்! வாக்குண்டாமென்று வாக்கைத் தொடங்கினது இங்கு; அங்கும் * வாகர்தாவிவ * என்று வாக்கையே தொடங்கியுள்ளது. இன்னமும் ஒரு விசேஷமுண்டு; வாக்குண்டாமில் வாக்கு ஒருவிசையே சொல்லப்பட்டது; ரகுவம்சத்தில் அது இருவிசை சொல்லப்பட்டதல்லவா? * வாகர்த்தப்ரதிபத்தயே * என் றன்றோ இரண்டாவது பாதம். இப்படி யாரால் அமைக்க முடியும்? இத்தகைய பொருத் தத்தையும் வாசியையும் வேறு யாரால் எடுத்துக்காட்ட முடியும்?" என்று அட்டஹாஸம் செய்தாராம். மற்றொருவர் "அப்பா! அதைவிட ஸ்வாரஸ்யமாகச் சொல்லுகிறேன் கேள்; வாக்குண்டாமில் வகாரம் ஒருமுறையே ப்ரயோகிக்கப்பட்டது; இதில் அசட்டுத்தனங் கண்ட தேசிகன் *வந்தே வ்ருந்தாவநசரம் வல்லவீஜநவல்லபம் । ஜயந்தீஸம்பவம் தாம வைஜயந்தீ விபூஷணம் * என்று எட்டுவிசை வகாரத்தை நுழைத்து ச்லோக மியற்றினார்; இது அநு ப்ராஸமுமாகும், அதிசயமுமாகும்" என்றாராம். இப்படிப்பட்ட விமர்சகுசலர்களிலே இவர் தலைவரென்று உகக்கிறோம். நல்ல விருதுகளு மளிப்போம்.

33. அர்த்தத்தை எப்படியாவது அநர்த்தமாக்கட்டும். சப்தங்களை இவர்கள் பாழ் படுத்துவதுதான் மிக்க பரிதாபகரம். அதையே முக்கியமாக விவரிக்கிறேன். இவர் தொடங்கும்போதே 'முன்னோர் மொழிப்பொருளைப் பொன்னேபோல்போற்றுவர்' என்றார். இவர் காதில் 'மாறன் திருவாய்மொழிப்பொருளை' என்னும் ஸூக்தி பலகால் விழுந்திருப்ப தால் 'மொழி பொருளை' என்கிற நன்னூல் வாசகத்தை மொழிப்பொருளையென்று மாற்றி விட்டார். (திருவாய்மொழிப்பொருளை) என்றவிடத்திற்கும் மொழிபொருளை யென்ற விடத்திற்கும் வாசிகண்டிலராந்தோ! இது பரிஹஸிக்கத்தக்க பிழையல்லவா? * முன்னோர் மொழிபொருளேயன்றி அவர்மொழியும் பொன்னேபோல்* என்ற நமது நூல்களில் நாமெடுத் துக் காட்டுவதைக் கையாள ஆசைப்பட்டவர் அதன் பொருளைக் கேட்டறிய வேண்டாவோ? இதற்கடுத்த வாக்கியத்தில் "அவர்க் கிரந்தங்களிலும்" என்றுள்ளது. இது என்ன பாஷை? இதற்கு எப்படி பதவிபாகம்? என்ன பொருள்? என்பதே புரியவில்லை. 'அவர்க்கு— இரந்தங்களிலும்' என்றல்லது வேறுவகையாகப் பதம் பிரியாது. இரந்த மென்பதற்கு என்ன பொருளென்பதை இவரையே கேட்டுணர வேணும். தமிழ் விஷயமிவை கிடக்க. அடுத்த வாக்கியத்தில் தாம் ஒரு விருந்து வழங்குவதாகக் கூறி "அதன் தாரதம்யத்திற்கு பெரியோர் தீர்ப்பே ப்ரமாணம்" என்கிறார். தாரதம்யமென்கிற வடசொல்லுக்கு என்ன பொருள்? அதை எங்கு ப்ரயோகிப்பது? என்பதைச் சிறிது மறிந்திலராந்தோ! இரண்டு விஷயங்களை (அல்லது) பல விஷயங்களை யெடுத்துக் கூறி யிருந்தால் அங்கே தாரதம்ய பரீக்ஷண ப்ரார்த்தகம் ப்ராப்தமாகும். இங்கே தாம் வழங்கப் போகிற விருந்து ஒன்றுதான்

ப்ரஸ்தாவத்திலுள்ளது. "அதன் குணதோஷ நிரூபணத்தில் பெரியோர்களே ப்ரமாணம்" என்றெழுதலாம். அதை விட்டுத் தாரதம்யத்திற்கு என்பது ஶாஸ்த்ரஜ்ஞலேகநமாகாது. தரமெது? தமமெது? என்று கேட்டால், வில்லியென்பது தரம்; வலமென்பது தமம்; (அல்லது) நாரமென்பது தரம்; அயநமென்பது தமம் என்பர்போலும். *உக்ஷாக்ஷீரஞ்சாஹீநாம ஆயுஷேஷு உஹ்யதாம்। ததா உய்யூஷ ஜிஹ்வேவ தாரதம்யவிசக்ஷிணி* *ஜொகெவநவ்திஸ்ய ஹவ்வதி தாரதம்ய* இத்யாதிகளைக் கண்டு தெளியக்கடவர்.

34. இதற்குமேல் "வ்யதிரேக இலக்கண முறை" என்று ஒரு அபூர்வ ப்ரயோகம் செய்கிறார். வ்யதிரேக இலக்கணமென்றால் என்ன? இது யாரால் எங்குக் கூறப்பட்டுள்ளது. என்ன பொருளிதற்கு? ஏதேனு முதாஹரணம் காட்ட முடியுமோ? அடுத்த, படியாக இவரெழுதியுள்ள வாக்ய ராஶியே உதாஹரணமாகலாம் போலும். அதாவது, "கயவர் சிலர் கவிகளின் காவியங்களிலிருந்து பலவற்றைக் களவு செய்து அசட்டுத்தனமாக அகப்பட்டுக் கொள்வதுமுண்டு." என்றன்றோ எழுதியுள்ளார். அப்படி அசட்டுத்தனமாக அகப்பட்டுக் கொண்டவிடம் இதற்கு மேற்பட வொன்றுளதோ? அடுத்தபடியாக மற்றொன்று மெழுதியுள்ளார்—"வியாபாரியிடம் வைரமிருந்தால் விகல்பமாக நினைக்கமாட்டார்கள்; வேலையாளிடம் விலைமிக்க மாணிக்கமிருக்கக் கண்டால் ஸம்ஶய முதிப்பது ஸரியேயல்லவா" என்று. மிகவும் ஸரிதானிது. 'வ்யதிரேக இலக்கண'மென்கிற சொல் ஒரு வ்யபதிஷ்டரொருவருடைய வியாஸத்தில் காணப்பட்டால் 'இதற்கு ஏதோ பொருளிருக்கும் போலும்' என்று சற்று மயங்கலாம். அகப்பட்டுக் கொள்வதற்கென்றே அவதரித்தவருடைய கையினின்றும் வெளிவந்த விது கண்டார்க்கு ஸம்ஶயமில்லை, நிச்சயந்தான். வ்யதிரேக இலக்கணமென்பது ஸர்வாத்மநா அர்த்தஶூந்யமே. எதையோ எழுத நினைத்து எதையோ எழுதிற்றுமிது. லக்ஷ்யத்துக்கும் லக்ஷணத்திற்கும் வாசியறியாத வாவதூகரிவர். லக்ஷண லக்ஷ்யங்களிரண்டுக்கு மிங்கு ப்ரஸக்தியில்லை.

35. பேச்சுக்கள் ஸம்ப்ரதாய ஸரணியில் நடையாடுமவையல்ல; தமிழர் திரளில் பயிலுமவையுமல்ல. உலகமறிந்த ஆச்சரியம் இவர்க்கு ஆச்சிரியமாயிருக்கிறது. தவிற, மனமாற, கோர்த்து என்றித்தகைய சொல்லழகுகள் இவர்க்கே அஸாதாரணம். இவருடைய ஸொந்தமான சொற்கள் எப்படி விழுந்தாலும் கேள்வியில்லை. உதாஹரிக்கும் பாசுரத்தை உயிர்க்கொலை செய்கிறார். "ஏழை யேதலன் கீழ்மக னென்னாது" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தை உயிராகக் கொண்டது இவருடைய வியாஸம். அந்தப் பாசுரத்தை இவர் மனப்பாடம் கொண்டவரல்லர், கற்றவருமல்லர். நம்முடைய உபந்யாஸ பாலைகளிலிருந்து கையாண்டவர். பாசுரத்தை யெழுதும்போது புத்தகத்தைப் பார்த்து எழுதமிவர் புத்தகத்திலுள்ளபடியே எழுதிக் கொடுத்திருந்தால் அகப்பட்டு அலமர வேண்டியிராது. "திருக்கோட்டியூர் நரகநாசனை நாவில் கொண்டழையாத மானிட சாதியர், பருகு நீரு முடுக்குங் கூறையும் பாவஞ் செய்தன தான்கொலோ" என்கிறார் பெரியாழ்வார். அப்படி "இவர் கையிலகப்படும் திவ்யஸூக்திகள் என்ன பாவம் செய்தனவோ" வென்று வயிறு பிடிக்க வேண்டியிரா நின்றது. 'என்பி' என்று பாசுரத்திலில்லை; எம்பி என்றுள்ளது. அஸக்ருத் என்பி, என்பி என்கிறாரிவர். ஒழிந்தலை என்றொரு சொல் ஸ்ருஷ்டிக்கிறார். "மற்றவர்க்கின்னருள் சுரந்து" என்றவிடத்தில் அபத்தத்தை அறிவித்தாலு மடியகில்லாரிவர். ஆழ்வாரருளிய சொல்வடிவம் இதுவன்று. 'மற்றவற்கு' என்பதற்கும் 'மற்றவர்க்கு' என்பதற்கும் வாசியறிய இவரிடம் சரக்கு ஏது? குறையைத் தெரிவிக்கும் சொல்லன்றோ இது.

அவன் இங்கு ஏகவசந நிர்திஷ்டனே யொழிய பஹு வசந நிர்திஷ்டனல்லன். கீழும் மேலும் ஏகவசன நிர்தேசமே ஸுஸ்பஷ்டமாகப் பல்கானுமுள்ளது. அப்படியிருக்க இங்குப் பன்மை வந்து புக ப்ரஸக்தியில்லை இதை இங்கு நாம் விவரிப்பது *ஊமையரோடு செவிடர் வார்த்தையாமத்தனை. நமது *தானே யெழுதிய தன் சரிதையில் இரண்டாம் பகுதித் தொடக்கத்திலுள்ள சில பங்க்திகளை இங்கு எடுத்துக் காட்டுகிறோம். எதற்காக வென்னில் மேன்மேலு மெழுத ஆவல் கொண்டிருக்கு மிவர்க்கு க்ஷேமகரமான தெளிவு பிறப்பிப்பதற்காகவே. அந்தப் பங்க்திகள் வருமாறு.

* திருவல்லிக்கேணியில் வேத வேதாந்தவர்த்திநீஸபை ஏற்பட்டு ஏறக்குறைய எழுபது வருஷமாகிறது. 40 வருஷங்களுக்கு முன்வரையில் இந்த ஸபையின் காரியங்கள் வெகு உன்னதமான நிலையில் நடந்துவந்தன. வருஷந்தோறும் ஆவணி மாதத்தில் ஸாமாந்ய சாஸ்த்ரங்களிலும் உபய வேதங்களிலும் உபய வேதாந்தங்களிலும் பரீக்ஷைகள் நடத்தி ஸன்மானமளிப்பதென்று நடந்துவந்தது. வருஷந்தோறும் 50 60 வித்யார்த்திகளுக்குமேல் பரீக்ஷைக்கு வருவார்கள். ப்ரஸித்தர்களான வித்வான்கள் பரீக்ஷகர்களாக எழுந்தருள்வார்கள் நியாயத்தில் வாக்யார்த்த சர்ச்சைகளும் நடைபெறும் அக்காலத்தில், வானமாமலை பர்யந்தமான தென்னாடுகளிலிருந்தும் ஸமலூர் பர்யந்தமான மேல்நாடுகளிலிருந்தும் வித்யார்த்திகள் பரீக்ஷைக்கு பரீக்ஷ்யர்களாக வந்துகொண்டேயிருப்பர்கள். அக்காலத்தில் அடியேன் திவ்யப் பிரபந்தங்களை வியாக்கியானங்களோடும் அதிகரித்து "மூலத்திலும் வியாக்கியானங்களிலும் ஸர்க்கத்திப் பரீக்ஷை கொடுக்க ஸித்தமாயிருக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டிருந்தவன். ஸர்க்கத்திப் பரீக்ஷையாவது, 'கத்தியைத் தீட்டி எதிரே வைத்திட்டுப் பரீக்ஷை செய்யுங்கள்; பரீக்ஷையில் தப்பினால் அந்தக் கத்தியினாலே காக்கை யறுத்திடுங்கள்' என்று சொல்லிப் பரீக்ஷை கொடுப்பது, இத்தகைய பரீக்ஷையை 19-ஆம் பிராயத்தில் அந்த ஸபையில் கொடுக்கச் சென்றேன். மூலத்தில் மட்டுமன்று, வியாக்கியானங்களிலும் அப்போது அந்த ஸபாவித்வான்கள் செய்த பரீக்ஷையில் சிலவற்றை இங்குத் தெரிவிக்கிறேன் [ஸ்ரீமதுபயவே மஹாவித்வான்—திருமழிசை வரதாசார்யர் ஸ்வாமியும், மற்றொரு தமிழ் வித்வானும் எனக்குப் பரீக்ஷகர்கள்]

(1) நாச்சியார் திருமொழியில் முதற் பதிகத்தில் ஒன்பதாம் பாட்டை [*தொழுது முப்போது முன்னடி வணங்கி யென்கிற செய்யுளை] எழுதிக் காட்டு என்றார்கள். உடனே அவர்களது கருத்தை யறிந்த அடியேன் அப்பாட்டின் இரண்டாமடியின் முற்கூற்றை மட்டும் எழுதிக் காட்டினேன்—"பழுதின்றிப் பார்க்கடல் வண்ணனுக்கே" என்று எழுதிக் காட்டினேன் இங்கு புத்தகங்களில் 'பாற்கடல்' என்றே பலரும் பதிப்பித்திருக்கின்றார்கள்; 'பால் - கடல்' என்று கருதி அங்ஙனம் பதிப்பித்தார்கள். அது பூருவாசாரியர்களின் வியாக்கியானத்திற்குச் சேராது; பார் - கடல் [பார் சூழ்ந்த கடல்] என்று ஸ்பஷ்டமாகக் காட்டிப் பெரியவாச்சான் பிள்ளை உரைவகுத்துள்ளார். அதை நான் கவனித்திருக்கிறேனா என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவே அவர்கள் இப்பாட்டை யெழுதிக் காட்டும்படி கட்டளையிட்டார்கள். அதைத் தெரிந்துகொண்ட வடியேன் 'பாட்டை முழுவதும் எழுதுவது எதற்கு? அப்பகுதியை மட்டும் எழுதினால் அவ்வித்துவான்கள் உகப்பர்கள்' என்றறுதியிட்டு அவ்வளவே யெழுதிக் காட்டினேன்.

(2) பெரியாழ்வார் திருமொழியில் (4–9–1) *மரவடியைத் தம்பிக்கு* என்னுஞ் செய்யுளை யெழுதக் கட்டளையிட்டார்கள். அச் செய்யுளில் மூன்றாமடியின் பிற்கூற்றை மட்டும் எழுதிக் காட்டினேன்—'திருமங்கை மலர் கண்ணும்' என்றெழுதிக் காட்டினேன். இங்கும் புத்தகங்களில் "மலர்க்கண்ணும்" என்றே பலரும் பதிப்பித்துள்ளார்கள். மலர்போன்ற கண் என்னும் பொருளில்தான் அங்ஙனே சந்தியாகும்; பூருவர்களின் வியாக்கியானம் அங்ஙனமில்லை; மலர்கின்ற கண் என்றுள்ளதனால் [உவமைத் தொகையன்றிக்கே வினைத்தொகை யாதலால்] 'மலர்கண்' என்று இயல்பாக எழுதினேன். மலர்போன்ற கண் என்கிற பொருள் அங்குப் பொருந்தமாட்டாது. திவ்யப்ரபந்த மூலப் பதிப்புகளிலும் வியாக்கியானப் பதிப்புகளிலும் (மலர்க்கண்) என்றே பதிப்பித்துள்ளார்கள். பரீக்ஷகர்கள் இந்த மருமத்தை யுத்தேசித்தே பரீக்ஷை செய்திருந்தார்கள். இரண்டிலும் அடியேன் எழுதிக் காட்டியவற்றைக் கண்ட பரீக்ஷக வித்வான்கள் "இவனை நாம் பரீக்ஷை செய்து பிழைக்க முடியாது" என்று பேசிக்கொண்டார்கள். ஆக இந்தப் பங்க்திகளை இங்கு நாம் எடுத்துக் காட்டியது தற்புகழ்ச்சிக்காகவல்ல; தமிழில் வெகு நுட்பமாக நோக்கவேண்டிய விஷயங்கள் இப்படிப்பட்டவை யுள்ளனவென்றும், அவை இவருடைய புத்திக்கு ஸுதராம்வைதேசிகங்களென்றும் காட்டுதற்காக வென்க.

36. இவர்க்கு முடிவாகவொன்று உணர்த்தி நிற்போம்; கம்பராமாயணத்திலும் பிள்ளைப்பெருமாளையங்காருடைய அஷ்டப் பிரபந்தத்திலும் ப்ரக்ஷேப வசையிற் பிற்காலத்தவர்களால் சேர்க்கப்பட்டுள்ள செய்யுள்களைக் குறிப்பிடுமிடத்து 'ஆழநீர்க் கங்கை' என்கிற இச்செய்யுளையும் குறிப்பிட்டுள்ளார்கள் ஆராய்ச்சிவல்லவர்கள். ஆகவே இச்செய்யுளைக் கொண்டு ஒரு விவக்ஷிதமும் ஸாதிக்கப் பாங்கில்லை. ஆனால், இச்செய்யுள் ப்ரக்ஷிப்தந்தானா? அன்றா? என்கிற ஆராய்ச்சியில் நாம் இறங்கினதில்லை. பல ஏட்டுப் பிரதிகளை வைத்துக் கொண்டு சோதிக்க வேண்டும். அதற்கு அவகாசம் கிளைத்ததில்லை. குஹப் பெருமாளிடத்தில் காட்டப்பட்ட இத்தகைய ப்ரேமவிசேஷம் ஸ்ரீராமாயணத்தில் காணக்கிடையாதிருக்க, எந்த ஆதாரங் கொண்டு ஆழ்வாரா லருளிச் செய்யப்பட்டதென்கிற விமர்சத்திலே புக்கு மருமங் கண்டுணர்த்தினுல் அதுவன்றோ மாண்புடைத்தாம். .... .... (*)

37. இனி அடுத்த வியாஸத்திற்குச் செல்வோம். ஸ்ரீராம குண ஸமந்வயம் என்பது இந்த வியாஸம். எல்லா வியாஸங்களுக்கும் பொதுவாக ஒரு முக்கிய விஷயமுரைப்போம். * கர்த்தவ்யம் பாவ்யா ஸம்பாதநம் * என்கிற நியமம் யாவரு மறிந்தது. இன்னது எழுதக்கடவோமென்று முன்னம் மனத்தில் ஒரு ரேகையிட்டுப் பின்னையன்றோ எழுதத் தொடங்க வேணும். அந்த பத்ததி இவர்களில் யாரிடமுமில்லை. வடமொழியில் ஒரு சுலோகமும், தென்மொழியில் ஒரு பாட்டும் காட்டுகிறோ மிங்கு; (சுலோகம்.) * வீரக்ஷத்ரியவைஸ்ய ஸூத்ரவநிதா வைராக்ய வாராங்கியி: வைஸம்வாய ந வை நவை தய லிஷஜோ ஹைஷஜ்ய வாரம்பதா:। வைதேஷாம் க்ஷமஸம்க்ஷயம் கஷயதாம் க்ஷோஷவாதாதிபி: கௌபிரூத்யம் க்ஷிப்ராக்ருதிக்ஷயஅணம் தொதொரஷ்டிமிதம் வய:॥ * (பாட்டு.) *காடுறையுங் காவலோன் காடுறைய வேண்டிற்றே? விடுறைய வீம்பதனுல் வேணிலத்தில்—சூடுமலர்க், கூந்தலார் குற்றலக் கோவலனுர் கோதைதனை, வேந்தனுய் விண்ணுளும் வீறு. * இந்தப் பாட்டையும், மேலேயுள்ள சுலோகத்தையும் ஒருவர் பல பண்டிதர்களிடம் சொல்லிப் பொருள் கேட்பராம். இதில் ஏதோ விசேஷார்த்த மிருக்கிறதென்று மருண்டவர்கள் எப்படியாவது பொருள் கண்டுபிடித்துப் புகல வேண்டுமென்று ஊக்கங் கொண்டு ஊன்றி யூன்றிப் பார்த்தும் பலரைக் கேட்டும் போதுபோக்கித் திரிவர்களாம். காட்டிய சுலோகமும் பாட்டும் வீண்வம்பன் இயற்றியவை யென்பதை ஒரு நொடிப்பொழுதில் தெரிந்துகொண்டு சிரிக்கவேண்டியிருக்க, இவற்றில் ஏதோ விஷயமிருப்பதாக மருண்டு கிடப்பாரு முளரன்றோ. இந்த சுலோகமும் பாட்டும் போன்றவையே மலரில் காணும் வியாஸங்கள் பெரும்பாலும். வ்யாக்ஷ விநிவேச உபக்ஷிதசந்நர்களுக்கு இது தெரிய வழியில்லைதான்.

38. இந்த குணஸமந்வய வியாஸத்தில் சுவையென்பது லவலேசமேனு முண்டோ வென்று யாரும் பார்க்கலாம். சையா விலாஸம் விளங்கும்படியான அபூர்வ விஷய விந்யாஸமொன்று மில்லையானுலும் அசட்டுத்தனம் மிக்க சொற்களும் பொருளும் புகாமலிருந்தால் விசேஷமல்லவா? ஐயோ! அதுதானுமில்லையே. குணவான் என்பதை விவரிக்குமிடத்து எழுதுகிறாரிவர்—"குஹன் என்பவன் ஒரு வேடன்.........காடுகளில் தனது தொழிலை நடத்தி ஜீவிப்பவன்" என்று. ஆயிரம் ஓடங்களுக்குத் தலைவரான குஹப் பெருமாளைக் குறித்து "காடுகளில் தனது தொழிலை நடத்தி ஜீவிப்பவன்" என்றெழுதத் தோன்றிற்றே ஒருவர்க்கு. குஹன் காடுகளில் நடத்திய ஜீவனத் தொழில் யாதோ? மரங்கள் வெட்டினுரா? விறகு சுமை கட்டினுரா? கொக்குகள் சுட்டாரா? வழி பறித்தல் செய்தாரா? என்று வினவினுல் 'எல்லாந்தான் செய்திருப்பர்' என்றே விடை கூறுவரிவர். நீர்க்கரையிலேயே

நிச்சலும் வாழ்ந்த விவரைக் காடுகளில் திரிந்து தொழில் நடத்தி ஜீவித்தவராக எழுதுபவர் மஹாவிவேகியாயிருக்க வேண்டும். இதற்கு "ஸுஹ்ருஹோ மஹநமொ அஸ:" என்று வால்மீகி சொல்லியிருக்க வில்லையோ? என்று உறுமுவர். ஸத்குரு ஸேவை பண்ணி ஸாஹித்யம் கேட்கப் பெறாத பாவமன்றோ விது.

39. மேலே வீர்யவானுக்கு அர்த்தமெழுதுகிறார்—"விபீஷணன் ராமனிடம் வந்து சரணமடைந்தபோது ஸுக்ரீவாதிகள் அவனைச் சேர்த்துக்கொள்ளக் கூடாதென்று எவ்வளவோ மன்றாடினார்கள்; அஃதெல்லாம் ராமனிடத்தில் பலிக்கவில்லை; அவனை யழைத்து வர ஊர்ஜிதமான உத்தரவு கொடுத்தார்; அவ்வளவு வீர்யமுள்ளவர் ராமன்" என்று. இப்படிப் பட்ட விசேஷார்த்தம் யாருக்குஸ்புரிக்கும்? விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாதென்று மன்றாடின வானர விரர்கள் நால்வரைவர்; சித்திரகூடத்திற்கு வந்து மகுடம் புனைய மீண்டு வரவேணுமென்று மன்றாடினவர்கள் எண்ணிறந்தவர்கள்; அவர்களோ மஹாஜ்ஞான நிதிகள். அவர்களுக்கும் வசப்படாமல் 'கண்டிப்பாக வரமாட்டேன்' என்று மறுத்தது மஹாவீர்யமல்லவா? சூர்ப்பணகை வந்து தன்னை மணந்துகொள்ள வேணுமென்று வேண்ட, அது முடியவே முடியாதென்று உறுதியாகக் கூறின ராமனுடைய வீர்யமே வீர்யம். ஸுதீக்ஷ்ணனென்கிற மஹர்ஷி தன்னாச்ரமத்தில் ஒரு நாள் தங்கிப் போக வேணுமென்று வேண்ட அது மாட்டேனென்று மறுத்த ராமனன்றோ உண்மையான வீர்யவான்! இப்படி யெழுதிக்கொண்டே போகலாமிவர். நமது அபூர்வ ராமாயணத்தை ஸேவித்து வாழ பாக்யமில்லையே யிவர்க்கு! கடைவீதிப் புராணக்காரர்களென்று சிலருண்டே; அவர்களுக்குங்கூட ஸ்புரியாத அர்த்த விசேஷங்கள் இவர்க்கு ஸ்புரிப்பது அப்ரமேய மாச்சர்யம். வ்யாக்யாதாக்கள் தமது உக்திகளைத் தாமே விவரிப்பதென்றொரு புடையுண்டு; அதுவும் இவரிடத்தில் வீர்யவத்தரம். "அஸத்யவாதியாக" என்றெழுதிவிட்டு, ப்ரியா வாசகர்களுக்கு இது பொருள்படாதென்று தாமே யுணர்ந்துகொண்டு, உடனே "அதாவது பொய் சொன்னவராக" என்று உரையிடுகிறார். கண்ணபிரான் கம்ஸவதத்திற்காகத் திருவாய்ப் பாடியிலிருந்து மதுரைக்கு எழுந்தருளும் வட்டத்தை உபந்யஸிக்கு மொருவர் "அங்கே ரஜகன் ரஜகன் என்கிற வொரு வண்ணான். வஸ்த்ரம் வஸ்த்ரமென்கிற துணிகளை மூட்டையாகக் கட்டி யெடுத்துக்கொண்டு வந்தான்—அதாவது க்ஷாளநம் செய்தான்" என்று சொல்லிப்போவராம். அதேகதைதானிது. அல்பஸாரமுமற்ற விதனை விட்டு மேலே போவோம்.

40. சீற்றமிலாதான் என்றொரு வியாஸம். இதில் "தசரதர் ஸ்ரீராமனை யுவராஜாவாக ஆக்க உத்தேசிப்பதாகவும் அவ்விஷயத்தில் அவர்களுடைய அபிப்ராயத்தையும் வினவினார்" என்பது உபக்ரம வாக்யம். இதில் 'உத்தேசிப்பதாகவும்' என்கிற உம்மைக்கு எங்கே அந்வயம்? 'அபிப்ராயத்தையும்' என்ற உம்மைக்கு எங்கே அந்வயம்? என்று கேட்டுவிட்டால் இந்த வித்வான் திணறி நிற்பர். 'உத்தேசித்து அபிப்ராயத்தை வினவினார்' என்று ஸமுச்சயமற்றுமின்றிக்கே எழுதவேண்டியிருக்க, அஸ்தானே அசட்டுத்தனமாக உம்மைகளைப் புகுத்தி ஸோபஹாஸ்யராயினர். தாமே ஆலோசித்துப் பார்க்கட்டும்; தமரோடுங் கூடி விமர்சிக்கட்டும். தமிழிலுள்ள இந்த வாக்கியத்தை ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்த்துப் பார்க்கட்டும். எதற்கும் எதற்கும் ஸமுச்சயம் செய்ய முடிகிறதென்பதை இப்பண்டிதர் தாமே தெரிந்துகொள்வர். இத்தகைய அசட்டெழுத்துக்கு மூல காரணம் வ்யுத்பத்திக் குறையே. இவர்க்கு மற்றொரு பண்டிதரும் துணைவராயிருக்கிறாரென்பதை முதலிப்போம்.

41. நாராயண வேதம் என்று மகுடம் புனைந்ததொரு வியாஸம். இது முக்கால் பக்கமேயுள்ளது. இதை விமர்ஶிக்கப் பல பக்கங்கள் வேண்டியிருந்தாலும் அதீவ ஸங்க்ஷிப்யதே. இதில் "விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ஸ்தாபகராயும்" என்று ஓர் உம்மை காண்கிறது. இதற்குச் சேர மற்றோர் உம்மை வரவேண்டாமா? அடுத்த உம்மை (ராமாநுஜருக்கும்) என்றுள்ளது. விஶேஷணத்திற்கும் விஶேஷ்யத்திற்கும் ஸமுச்சயமிடுவது விலக்ஷணஶேமுஷீ விலாஸமேயாகும். "ஸித்தாந்த ஸ்தாபகராயும் ஸகல வித்யாவாஹினீ ஜந்மஶைலராயும் கொண்டாடப்படும் பகவத்ராமாநுஜர்க்கு" என்று எளிதாக எழுதும் வகையறிந்திலரந்தோ! இத்தனை விரிவும் வேண்டா. "ஸித்தாந்தஸ்தாபகரும் ஸகல வித்யாவாஹினீஜந்மஶைலருமான ராமாநுஜர்க்கு" என்னுமளவே போதும். எந்தச்சொல் எந்தச்சொல்லோடே அந்வயிக்குமென்பதைக்கூட அறியகில்லாதார் எழுதப்புறப்படுவது ஸாஹஸமல்லவா?

மற்றொரு ஸமுச்சயமும் காண்மின்;—"ஸ்ரீராகவன் தன்னுடைய சரிதங்களிலும், தன்னைச்சேர்ந்தவர்களான ஸீதா லக்ஷ்மணன் பரதன் சத்ருக்நன் முதலியோருடையனவும் சரிதங்களிலும் விளக்கிக் காட்டியிருக்கிறார்" என்கிறார். இங்கு தன்னுடைய சரிதங்களிலும் முதலியோருடைய சரிதங்களிலும்' என்பதே பர்யாப்தம். 'முதலியோருடையனவும்' என்பது அநந்விதம். [ராகவஃ ஸ்வசரிதேஷு ஸீதாதீநாம் சரிதேஷு ச வ்யஞ்ஜயாமாஸ] என்பதேயன்றோ ஸம்மதம். இடையில் ஓர் உம்மை புகுத்துவதனால் என்ன ஸாயகம்? என்பர்; ஒரு ஸாயகமுமில்லை. ஆனால் 'உடையனவும்' என்பது தவறு. (உடையன) என்பதை ஷஷ்டியாக இவர் நினைத்திருக்கிறார். அது பிசகு. அது ப்ரதமையே. உடையவும் என்றிருந்தால் ஷஷ்டியாகும். அப்போது அதிக பாதகமில்லை. ஷஷ்டீஸ்ரூஉங்கொண்டு பிரதமாந்தமாக ப்ரயோகித்திருப்பதால் அநந்விதமே. ஆனால் இதை க்ரஹிக்ககில்லாரிவர்.

42. மற்றும் கேளீர்; இந்த வியாஸகாரர் விலக்ஷண ப்ரயோகங்கள் செய்கிறார். மனபெழுச்சி, இக்காலத்திய யியல்பு இத்யாதிகள் அவையாம். மனம்+எழுச்சி; எப்படி சந்தியாகும்? காலத்திய+இயல்பு; எப்படி சந்தியாகும்? என்று இவர்களே விசாரித்தறிக. "ரஹஸ்யார்த்த க்ருந்தத்தை" என்றொரு ப்ரயோகம். க்ருந்தமென்பது இன்னதென்று விளங்கவில்லை. க்ருபா, க்ருஹம், ஶ்ருதம், க்ரந்தம் என்னுமிவற்றைத் தமிழில் க்ருந்தமென்றெழுதுவதுண்டு. ஆனால் க்ருபாதிபதங்களுக்கு இங்கு அவகாஶமேயில்லை. க்ரந்தம் என்கிற வடசொல்லையே இவர் க்ருந்தமென்றெழுதியுள்ளாரென்பது நிஸ்ஸந்தேஹம். இத்தகைய திரிபுணர்ச்சி இவர்களின் திரளில் மிகமிகவுள்ளது. ப்ரும்மம், ப்ரும்மாம் என்று இந்த மலரிலும் பல்கால் காணப்படுகிறது. இது எந்த வடசொல்லின் விகாரமோ தெரியவில்லை. (ப்ரு) என்கிற அக்ஷரத்தையோ (ப்ரூ) என்கிற அக்ஷரத்தையோ தமிழில் (ப்ரு) என்றெழுதுவதுண்டு. ப்ரஹ்ம என்னும் வடசொல்லை யெழுதவேண்டும்போது (ப்ரு) என்றெழுதுவதும்; (க்ர) என்னும் வடசொல்லை யெழுதவேண்டும்போது (க்ரு) என்றெழுதுவதும் இந்த வித்வான்களுக்கே உரித்தாம். இங்கே (ரு) என்னுமெழுத்து எப்படி வந்து புகும்? நதீ என்கிற வடசொல்லைத் தமிழ்வார்த்தையாக எழுதவேணுமானால் (நதீ) என்னக்கூடாது. நதியென்னவேணும். அதில் வேற்றுமையுருபேற்ற வேணுமானால் (நதிகளினுடைய, நதிகளுக்கு) என்னவேணும்; இவர் (நதீக்களுக்கு) என்கிறார். ஸ்வல்ப விமர்ஶஶக்தியுமற்ற இவர்களைப்பொருள்படுத்தி நாம் அரியபெரிய விஷயங்களை வாரியிறைப்பது தகுதியன்று. குணஸங்

வய வியாஸ காரரான D. T. என்பவர் (ஆஸ்தாபிக்க) என்று பலகாலெழுதுகிருர். ஆஸ்தாபம் என்கிற சொல் எந்தபாஷையிலாவது கண்டதுண்டா? வகாரத்திற்கு வகாரமாதேசமென்று எங்கேனும் விதிகண்டதுண்டோ? மநஸ்தாபமிருக்கும்போது ஆஸ்தாபம் ஏனிருக்கக்கூடாதென்று உறுமுவர். * ஸ்ம்ஹகணெ ஸ்த்ர ரஷி ஹகாரொரஷி விஹீஷணெ । சுயம் அ ராக்ஷஸஹெ ஷா ராஹணெ। நதராவண ।।* என்றவர்கள் இவர்களே போலும். இவ்வளவோடு விட்டுத் தொலைப்போமிவர்களை. ந்ருஸிம்ஹப்ரியா நிரீக்ஷணம் (2) முற்றிற்று. ... .... .... .... .... (*)

---

## ந்ருஸிம்ஹப்ரியா நிரீக்ஷண-அனுபந்தம்.

ஆக்ருதமான ஸ்ரீராமஜயந்திமலரின் அட்டையின் மூன்ருவது பக்கத்தில் பாரிஜாதபுஷ்பம் என்கிற ப்ரபந்தஸாரவைபவம் என்ற்ரு புத்தகம் வெளிவந்திருப்பதாகத் தெரிவித்து, இதை வி. பி. பி. யில் அனுப்ப ஸௌகரியமில்லை யென்றும் 1 ரூ. 70 நயாபைஸா மணியார்டர் செய்து பெறலாமென்றும் தெரிவித்திருக்கிறது. பாரிஜாத புஷ்பமென்னுமிப்புத்தகம் 1960 நவம்பர் மாதத்திலேயே அச்சு முடிந்து வெளியேறியது. நமது ஸ்ரீராமானுஜன் 143-ல் "பாரிஜாதபுஷ்பமானுல் துர்நாற்றம் வீசுமோ?" என்னும் வியாஸம் வெளிவந்திருப்பதை உலகமெல்லாம் வாசித்துளது. அதிலேயே ராஜமன்னர் ஸந்நிதி ஜ்யோதிர்ப்பூஷணம் வங்கீபுரம் ராஜமையங்காரெழுதிய துர்க்கந்த தூரீகரணம் என்கிற நூலும் வெளிவந்துளது. ஆக ஐந்தாறு மாதங்களுக்கு முன்னமே ம்ருதமான வொரு புத்தகத்திற்கு இன்னமும் உயிர் இருப்பதாக வைத்து, அது இப்போதுதான் வெளிவந்ததாகக்காட்டி, அதில் பல விஷயங்கள் அடங்கியிருப்பதாகவுங் காட்டி, அதை விலைகொடுத்தே வாங்கவேணுமென்றும் முன்பணமனுப்பியே பெறவேணுமென்றும் தெரிவிப்பது வெகு விந்தை. சென்ற ஐப்பசி மாதத்தில் திருவிந்தளூரில் நடந்த துலாகாவேரித் திருநாளிலேயே இந்த துர்க்கந்த புஷ்பம் அங்கு ஏகாந்த ஆசாரமடைந்ததாகவும் அழிசிங்கருடைய நியமனப்படியான பிறகே இது லோகாந்த ஆசாரமடையப்போவதாகவும், இது சிலகாலம் ஏகாந்த வாஸமே செய்யுமென்று ஆசாரகரால் கூறப்பட்டதாகவும் மேலே குறித்த ராஜமையங்கார் முன்னுரையில் அறிவித்துள்ளார். இதை யொருவரும் மறந்திரார். ஆக, ஏற்கெனவே கண்டனம் பெற்று முடிந்துபோன இப் புத்தகம் தலைகாட்ட வழியில்லையாதலால் இப்போதும் இது "நஞ்சுடைமை தானறிந்து நாகங்கரந்துறையும்" என்ற ரீதியில் அஜ்ஞாதவாஸமே செய்து வருகின்றது. சார்வரி பங்குனி 27 ஆம் தேதியாகிய இன்று ஒருவர் இப்புத்தகத்தை நம்மிடம் ஏகாந்தமாகவே கொடுத்தார். இன்றே நாம் எழுதிமுடித்த பூதிகந்திபுஷ்பப்ரஞ்சநம் என்னும் நூலின் ஒரு பகுதி இவ்விதழில் வெளிவருகின்றது. ஸஹ்ருதய ரஸிகர்கள் கடாக்ஷித்து இன்புறுக. ... (*)

---

## 3. லோகாபிராமநல்வார்த்தைத்திரள்.

43. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பல பல ஆசாரியர்கள் அவதரித்திருந்தாலும் பிள்ளை லோகாசாரியரும் மணவாள மாமுனிகளுமே ஆசார்யத்வ பூர்த்தியுள்ளவர்களென்பதை அடியேன் பலகால் பல நூல்களில் விவரித்திருக்கின்றேன். இவ்வாசாரியரிருவர்களின் ஸ்ரீஸூக்திகளினால்தான் ஸ்ரீவைஷ்ணவ வுலகம் வாழ்ந்து வருகின்றது. பிள்ளை லோகாசாரியரைக் காட்டிலும் மணவாளமாமுனிகளின் சிறப்புத்தான் உண்மையில் உயர்ந்தது. அமுதக் கடல்போன்ற அவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளை ஆழ்ந்து அநுபவிப்பாரில்லையேயென்கிற வருத்தம் கடல் சூழ்ந்த விம்மண்ணுலகில் அடியேன்போல்வார் சிலர்க்குத்தானுள்ளது. 'மற்றும் பல ஆசாரியர்களைப்போலே இவரும் ஒரு ஆசார்யர்' என்று நினைப்பாரும், வேறு சில ஆசாரியர்களை மேம்பட்டவர்களாக நினைத்து இவரைத் தாழ நினைப்பாரும் சிலர் இருந்தாலும் அவர்களைப்பற்றி நமக்குக் கவலையில்லை. அடியேன் ஒரே ஒரு வார்த்தைதான் சொல்லுவது;—மற்ற ஆசாரியர்களின்க்ரந்தங்களை யெடுத்து வாசிக்கும்போது அவரவர்களின் ஞானத்தைப் பரிச்சேதித்து விடமுடியும்; மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை ஸேவிக்கும்போது ஒவ்வொரு சொல்லையும் ஒவ்வொரு வாக்கியத்தையும் நோக்குமிடத்து "இவரொருவரே அபரிச்சிந்நஜ்ஞாநநிதி" என்று அஸூயையற்றவர்கள் அறுதியிடத் தட்டில்லை—என்று.

44. "அமுத மென்மொழி" என்றொரு சொல் திருவாய்மொழியில் (6–5–2) வருகிறது. உண்மையில் அமுதமொழி தந்தவர் யாவர்? என்று கேட்டால் 'மணவாளமாமுனிகளொருவரே' என்று கூசாது கூறலாம். மாமுனிகள் மற்றுள்ள ஆசாரியர்களுக்கு முன்னே திருவவதரித்து திவ்யஸூக்திகளை யருளிச் செய்திருந்தாராகில் ஒவ்வோராசார்யரும் அந்த ஸ்ரீஸூக்திகளை எவ்வளவோ கொண்டாடியிருப்பர்கள் என்பது ஒருபுறமிருக்க, இவருடைய ஸ்ரீஸூக்திகளைக் கண்டபின் ஒருவரும் ஒன்றெழுத எழுத்தாணியைத் தொட்டிரார்கள். ஆனால் மற்றுள்ள ஆசாரியர்களின் திருவாக்குக்களும் இந்நிலவுலகில் அவதரிக்க வேண்டுமென்றும், அப்போதுதான் வாசி தெரியுமென்றும் திருவுள்ளம் பற்றிய எம்பெருமான் மணவாளமாமுனிகளை ஆசார்ய பரம்பரையின் அந்தத்திலே அவதரிப்பித்தருளினன் என்று ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி திருவாக்கில் பலகால் கேட்டிருந்தேன்.

45. மாமுனிகளின் திவ்யஸூக்தி காம்பீர்ய மாதுர்யங்களை அக்காலத்தில் ஸ்துதி நூல்களில் எழுதி வைத்தவர்கள் எறும்பியப்பா முதலானோர் பலர் இருந்தாலும், அஸ்மத்குலகூடஸ்தரான அண்ணா (வர வர முநிசதகத்தில்) "த்ராக்ஷாமதிக்ஷிபதி நிந்ததி மாகரந்ததாராம் ஸுதாரஸஜரீம் அதரீகரோதி" என்று பொறித்து வைத்தது போல் வேறு யாரும் பொறித்து வைத்திலர். அப்படிப்பட்ட மதுரகம்பீர மென்மொழிகளை எத்தனை தடவை ஸேவித்தாலும் *அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதமே என்னும்படி ஒவ்வொரு க்ஷணத்திலும் அபூர்வமாகக் காண்கிறதேயொழிய 'நேற்று ஸேவித்த ஸ்ரீஸூக்திதானே இது' என்று ஒருகாலும் தோன்றுவதில்லை. இது அஸூயையற்றவர்களுக்கு அநுபவ ஸாக்ஷிகம்.

46. ஸ்வாமியின் வியாக்கியானங்களெல்லாம் தமிழென்று பேரேயொழிய அத்தனையும் ஸம்ஸ்க்ருத வாக்யஜடிலம். அந்த ஸம்ஸ்க்ருத வாக்கியங்களின் வைகரி வேறு எவருடைய

க்ரந்தத்திலும் காணமுடியாததே. நான்கு சாஸ்திரங்களையும் அறுபத்துநான்கு கலைகளையும் கரைகண்டவொரு பண்டிதோத்தமர் இக்காலத்திலிருப்பதாக வைத்துக்கொள்வோம். முமுக்ஷுப்படியிலோ, ஸ்ரீ வசநபூஷணத்திலோ, தத்வத்ரயத்திலோ, ஆசார்யஹ்ருதயத்திலோ ஒரு சூர்ணிகையை அவரிடம் கொடுத்து இதற்கு வியாக்கியான மெழுதும் என்றால் அப்போது தெரியும் கெடுவாசி. "பதாநாம் ஸௌப்ராத்ராத் அநிமிஷ நிஷேவ்யம் ச்ரவணயோ:" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திக்கு ப்ரதாநலக்ஷ்யமான அத்புத ஸூக்தி ஸந்நிவேசங்கள் மாமுனிகளின் வியாக்கியான திவ்ய க்ரந்தங்களிலே ஸஹஸ்ரமன்று, பரஸ்ஸஹஸ்ரம். இதர ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு மாச்சரியத்தாலே அவை தோன்றுவதில்லை. பாக்ய வசத்தாலே ஸத்ஸம்ப்ரதாயத்திலே ஜனிக்கப்பெற்றவர்களோ வென்னில், மதியின்மை ஆபிமுக்ய்யமின்மை ஆதரமின்மை ஆராய்ச்சியின்மை முதலிய ஹேது விசேஷங்களாலே உணர்ந்து கொள்ள பாக்யஹீநர்களாகிறார்கள். அஸூயுக்கள் அளவுகடந்த தூஷணங்களைச் செய்து ஸ்வயம் வதஹதர்[illegible]

47. நன்றாகக் காய்த்துப் பழுத்துத் தழைத்திருக்கின்ற தேன்மாமரத்தின்மீது கல்லையோ தடியையோ விட்டெறிந்தால் அதனால் அந்த மரத்திற்குச் சீற்ற முண்டாகிறதா? ஸந்தோஷமுண்டாகிறதா? என்பதை நாம் தெரிந்துகொள்ள முடிகிறதில்லை. ஆனால் கல்லடியோ தடியடியோ பட்டவுடனே அந்த மரம் செய்யும் செயலை மட்டும் நாம் கண்ணாரக் கண்டு வருகிறோம். என்ன காண்கிறோம்? அந்த மரம் தன்னிடத்திலுள்ள சிறந்த கனிகளை விசியெறிந்து மஹோபகாரம் செய்வதைக் காண்கிறோம். நாய் நரி முதலான சில ஹேயமான ஜந்துக்களுள்ளன. அவற்றின்மீது ஒருவர் கல்லையோ தடியையோ விட்டெறிந்தால் உடனே அவை என்ன செய்கின்றன. பகவான் அந்த ஜந்துக்களிடத்திலே சிறந்த பொருளாக எதையும் படைத்திராமையாலே கர்ண கடோரமான சப்தங்களைச் செய்து அனர்த்தத்தை விளைப்பது தவிர வேறொன்றும் அந்த ஜந்துக்களா லாகிறதில்லை.

48. காழிச் சீராம விண்ணகரத்திற்குப் பதிகம் பாடின திருமங்கை யாழ்வார் "நெட்டிலைய கருங்கமுகின் செங்காய் வீழ நீள் பலவின் தாழ்சினையில் நெருங்கு பீனத், தெட்ட பழம் சிதைந்து மதுச் சொரியுங் காழிச் சீராம விண்ணகர்" என்றருளிச் செய்கிறார். ஸ்வாபதேசார்த்தம் ஸுபிக்ஷமான பாசுரம் இது. இதில் மேலெழச் சொல்லுவதென்னவென்றால், பாக்கு மரத்திலிருந்து கொட்டையான காய்கள் உதிர்ந்து பலாமரத்தின் மீது விழுந்தனவாம்; அக் காய்கள் கனியப் பழுத்த பலாப்பழத்தின்மீது விழுந்தவாறே அப்பழம் சிதைந்து தேன்வெள்ளம் சொரிந்ததாம். அரும் பெரும் பொருள்களை வெளியிடவந்த ஆழ்வார்கள் பாக்கு விழுந்ததையும் பலாப் பழம் சிதைந்ததையுமா சொல்லி நிற்பர்கள்! மஹான்களின்மீது சுவதூஷகயமாகிற அடி விழுந்தால் மது வெள்ளந்தா னெழுகும்? என்ற சாஸ்த்ரார்த்தமே இங்குக் காட்டினபடி.

49. மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் சில ஆழ்வார்களுக்கு ஒரே பாசுரம், சில ஆழ்வார்களுக்கு இரண்டு பாசுரம்...என்றிப்படி வாசிவைத்துப் பாசுரம் பாடியுள்ளார். திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், தொண்டரடிப்பொடி யாழ்வார். திருப்பாணாழ்வார் —இவர்களுக்கு ஒவ்வொரு பாசுரம். முதலாழ்வார்கள், திருமங்கை மன்னன், நம்மாழ்வார், மதுரகவிகள்—இவர்களுக்கு இரண்டிரண்டு பாசுரங்கள். ஆண்டாள் எம்பெருமானார்—இவர்களுக்கு மும்மூன்று பாசுரங்கள். பெரியாழ்வார்க்கு ஐந்து பாசுரங்கள். ஸ்ரீ

இவ்வண்ண மருளிச் செய்து வந்தவர், பிள்ளை லோகாசார்யருக்கு ஸ்ரீவசநபூஷணத்தை மட்டு முத்தேசித்து ஏழு பாசுரங்க ளருளிச் செய்தார். இதனால் மணவாளமாமுனிகள் மிகச் சிறந்த சாஸ்த்ரமென்று திருவுள்ளம் பற்றியது ஸ்ரீவசநபூஷண மொன்றேயென்று தேறும்.

50. அந்த திவ்ய சாஸ்திரத்தின் பெருமை ஏழுபாசுரங்களினால் விளக்கப்பட்டாலும் அவற்றுள் ஒரு பாசுரம் லோகோத்தரமாக அமைந்துள்ளது; அதாவது.

"ஆர்வசனபூடணத்தி ஞழ்பொருளெல்லா மறிவார்
ஆர் அதுசொல் நேரிலனுட்டிப்பார்—ஓரொருவர்
உண்டாகி லத்தனைகா ணுள்ளமே! எல்லார்க்கும்
அண்டாததன்றோ வது."

என்பதாம்.

இதில், ஸ்ரீவசனபூஷணத்தினுடைய கம்பீரமான அர்த்தங்களை யெல்லாம் அறியவல்லாரில்லை என்று முதலடியில் அருளிச் செய்தார். "விசதவாக் சிகாமணிகளான ஸ்வாமியின் திவ்ய மான வியாக்கியானம் திருவவதரித்திருக்க, அதுகொண்டு ஆழ்பொருள்களை யறிய என்ன குறை?" என்று சிலர் விஜ்ஞாபிக்க, உடனே "ஆர் அது சொன்னேரிலனுட்டிப்பார்" என்றார்; ஒருவாறு பொருள் தெரிந்து கொள்ளலாமானாலும் அந்த ஸ்ரீவசநபூஷண சாஸ்த்ரமிட்ட கட்டளையிலே அநுஷ்டிக்கவல்லார் ஒருவருமில்லையே! என்றார்.

51. ஒருவராலும் அநுஷ்டிக்க முடியாத விஷயம் ஸ்ரீவசநபூஷணத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறதென்று விமர்சிக்க வேணுமே. அத்தகைய விஷயங்கள் அதில் பல பல இருந்தாலும் ப்ரக்ருதம் ஒன்றே யெடுத்துக் காட்டுகின்றே னடியேன். அடியேனிட்ட உபதேச ரத்தினமாலைத் திவ்யார்த்த தீபிகையுரையில் இப்பாசுரத்தின் உரையின் முடிவில்— "அநுஷ்டிக்க முடியாதபடி இதில் என்ன விஷயம் கூறப்பட்டிரா நின்றதென்னில், *குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்க வேணும்* என்று இங்ஙனே யருளிச் செய்யப்பட்டுள்ள பல பல விஷயங்கள் அநுஷ்டிக்க வரியன என்னுமிடம் சொல்ல வேணுமோ?" என்றெழுதியுள்ளேன்.

ஸ்ரீவசநபூஷணத்தில் 365-ஆம் சூர்ணை—"குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்." என்பது. அபராதப்பட்டவர்களுக்கு அபராதத்திற்குத் தக்கபடி தம்மாலியன்ற தண்டனை செய்யவேண்டியதுதான் முக்கியம் என்பது அடியேனைப் போன்ற அவிவேகிகளின் நினைவு. மஹாவிவேகிகளோ வென்னில், அப்படி நினையார்கள். அந்தக் குற்றவாளர்களிடத்திலே பொறை, க்ருபை முதலானவற்றையே காட்டுவர்கள். பொறுமை காட்டவேணும், க்ருபைபண்ணவேணும், சிரிக்கவேணும், உகக்கவேணும். நன்றி பாராட்டவேணும்—என்று ஐந்து விஷயங்கள் இங்குச் சொல்லப்படுகின்றன. ஜநந்யாசார்யரென்பவருடைய ஸம்க்ஷிப்தமான வியாக்கியானமு மொன்று இருந்தாலும் அதனால் ஓரிடத்திலும் ஒரு த்ருப்தியுமுண்டாகிறதில்லை. அப்பெருங்குறை தீரவே அற்புதமான வியாக்கியானம் விசதவாக் சிகாமணிகளான மாமுனிகள் இட்டருளினது. அந்த வியாக்கியானத்தை யநுஸரித்து விவரிக்கிறே னிங்கு.

52. குற்றம் செய்தவர்களிடத்தில் பொறுமை காட்டவேணும். அதாவது எதிரிகள் செய்யும் தூஷணை முதலான குற்றத்திற்காகச் சிலர் உடனே பதில் தண்டனை செய்யக்

கூடும்; அது செய்ய சக்தியில்லாதவர்கள் 'இந்த மஹாபாபி இப்படி அபராதப் பட்டானே!' என்று நெஞ்சு புண்பட்டிருக்கக்கூடும். இவ்விரண்டு படியுமன்றிக்கே அவர்கள் பட்ட அபராதத்தை ஸஹித்திருக்கவேணும். ப்ரதிக்ரியை பண்ண நினையாமலும் நெஞ்சு கன்றுமலு மிருக்க வேணுமென்கை. இதுதான் அபராத ஸஹிஷ்ணுத்வம்.

53. குற்றம் செய்தவர்களிடத்தில் க்ருபை காட்டவேணும். அதாவது, கீழ்ச் சொன்னபடி ஸாத்விகரானவிவர் ஸஹித்துக் கொண்டிருந்தாலும் 'அரசன் அன்று கொல் லும், தெய்வம் நின்று கொல்லும்' என்கிறபடியே தெய்வம் தண்டித்தே தீருமன்றோ; அதில் ஸந்தேஹமில்லையே; நாஸ்திகர்களுக்கு இதில் விப்ரதிபத்தியிருந்தாலும் ஆஸ்திகர்கள் இதைத் திண்ணமாக எண்ணியிருப்பர்களே; அதனால் ஐயோ! நாம் பொறுத்திருந்தாலும் பொறுத் திருக்கமாட்டாத தெய்வம் இவன் தலையில் இடிவிழுந்தாற்போலே அனர்த்தங்கள் விளையும் படி செய்யுமே; இதற்கு என்ன பண்ணுவோம்!' என்று இரக்கங் கொண்டிருக்க வேணு மென்கை. இங்கே மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி—"நாம் பொறுத்திருந்தோமாகி லும் எம்பெருமான் உசிததண்டம் பண்ணவன்றோ புகுகிறான், ஐயோ! இனி இதுக்கு என் செய்வோம்! என்கிற பரது:க்காஸஹிஷ்ணுத்வம்" என்பதாம்.

54. குற்றம் செய்தவர்களிடத்தில் சிரிப்பு காட்டவேணும். இது வெகு ஆச்சரியமான ஸ்ரீஸூக்தி. எதற்காகச் சிரிக்கவேணும்? என்னவென்று சிரிக்கவேணும்? என்று கேட்டால், குற்றங்களே வடிவெடுத்த இந்தப் படுபாவி வெட்கமில்லாமல் பிறரை தூஷிக்கப் புறப்படு கிறானே யென்று சிரிக்கவேணுமென்பர் சிலர்; ஜநந்யாசார்யரும் தமது வியாக்கியானத்தில் இங்கு ஏதோ எழுதிவைத்திருக்கிறார். இங்கு மணவாளமாமுனிகளின் அற்புதமான திவ்ய ஸூக்தி காணீர் "அத்ருஷ்ட விரோதமாக இவர்களால் செய்யலாவ தொன்றில்லையிறே: பாருஷ்யாதி முகத்தாலே க்யாதிலாபாதி த்ருஷ்ட விரோதங்களிறே இவர்களால் செய்யலாவது அப்படி சிலவற் றைச் செய்தால் தங்களோபாதி நாமும் இவற்றிலே சபலராய் இவற்றினுடைய ஹாநியைப் பற்ற நெஞ்சாறல் பட்டுத் தளர்வுதோ மென்றிருந்தார்களன்றோ! இவர்களின் அறிவிலித்தன மிருந்தபடி என்! என்று பண்ணும் ஹாஸம்." என்று. இந்த ஸ்ரீஸூக்தியின் மாதுர்யத்தையும் காம்பீர்யத் தையும் யாரே காணவல்லார்! மூலவக்தாவான பிள்ளை லோகாசார்யருடைய திருவுள்ளக் கருத்தை அப்படியே அங்குராநதிரிக்தமாகவன்றோ காட்டியுள்ளார்.

இதைச் சிறிது விவரிப்போம். தூஷிப்பவர்கள் என்ன கருத்தினாலே தூஷிக் கிறார்களென்று பார்க்கவேணும். எந்த நபரை தூஷிக்கிறார்களோ அந்த நபருக்குச் சில நஷ்டங்களை யுண்டுபண்ண வேணுமென்கிற எண்ணங்கொண்டே தூஷிக்கிறார்களென்பதில் ஸந்தேஹமில்லை. நஷ்டம் இருவகைப்படும்; (1) அத்ருஷ்டத்தில் நஷ்டம். (2) த்ருஷ்டத்தில் நஷ்டம். (1) ஆமுஷ்மிக புருஷார்த்தத்தில் கெடுதி விளைவது அத்ருஷ்டத்தில் நஷ்டமெனப் படும். (2) இவ்வுலகில் சிலர் நம்மிடத்தில் கௌரவம் வைத்திருந்தால் அது மாறும்படியாகச் செய்வதும், யாரேனும் நமக்கு ஸன்மானங்கள் செய்வதாயிருந்தால் அல்லது செய்து கொண்டிருந்தால் அதைத் தவிர்ப்பதும் த்ருஷ்டத்தில் நஷ்டமெனப்படும். ஆக இப்படிப் பட்ட நஷ்டங்களில் அத்ருஷ்டத்தில் நஷ்டம் சிறிதுமுண்டாகாதென்பது திண்ணம். ஆனால் தருஷ்டத்தில் நஷ்டம் உண்டு பண்ண முடியும். அதாவது பலர் திரண்டிருக்குமிடங்களில் நிஷ்காரணமாகப் பருஷோக்திகளை வாரியிறைத்து தூஷிப்பதனால், தூஷிக்கப்பட்ட வ்யக்தி

விசேஷத்தினிடத்தில் உலகர் வைத்திருக்கிற மதிப்பு குறையக் கூடும்; அவர்கள் செய்ய நினைத்திருக்கிற (அல்லது) செய்து கொண்டு வருகிற ஸன்மானங்களும் தொலையக்கூடும். ஆக இப்படிப்பட்ட த்ருஷ்ட நஷ்டங்கள் உண்டாகக் கூடுமென்று வைத்துக் கொள்வோம். இது தவிர வேறுவிதமான நஷ்டம் ப்ராக்ருதர்களின் தூஷணைகளினால் உண்டு பண்ண முடியாதென்பது திண்ணம். இப்படியாக இவர்களுண்டாக்கும் நஷ்டத்தினால் நாம் கஷ்டப் படுவோமென்றல்லவா இந்த தூஷகர்களின் நினைவு; அந்தோ! இவர்கள் நம்மையும் தங்களைப் போல நினைத்து விட்டார்களே! ப்ராக்ருதர்களால் வரும் மதிப்பும் ஸத்காரமும் நமக்கு த்ருணப்ராயமென்பதை இந்த அவிவேகிகள் தெரிந்து கொள்ளவில்லையே! ப்ராக்ருதர்களின் இகழ்வும் வெறுப்பும் அதிகரிக்க அதிகரிக்க, அதையே நாம் மிகுந்த ச்ரேயஸ்ஸாகக் கொண்டிருக்கிறோமென்பதை இந்த அறிவிலிகள் அறிந்து கொள்ளவில்லையே! *உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலத் தொடுங் கூடுவதில்லை யான்* என்கிற நம்முடைய வுறுதிநிடமாவதற்கே இவர்களுடைய தூஷணைகள் ஹேதுவானதை இந்த ஜடங்கள் தெரிந்து கொள்ளவில்லையே! என்று சொல்லிச் சொல்லிச் சிரிக்கவேணும்—என்பதே மாமுனிகளின் திவ்யஸூக்தி தாத்பர்யம். உண்மையில், நிந்திப்பவர்கள் விஷயத்திலே இப்படி சிரித்திருப்பதொன்று தான் முக்கியமானது. ஆகவே தான் பொறை முதலான ஐந்தில் இது இடையில் வைக்கப்பட்டது.

55. குற்றம் செய்தவர்களிடத்தில் உகப்பு நடக்க வேணும். (அதாவது) தூஷிக்குமவர்கள் பண்ணும் பரிபவம் சரீரத்தைச் சேருமேயொழிய ஆத்மாவைச் சேராது. ஸர்வ ப்ரகாரத்தாலும் உஜ்ஜீவித்து வாழ்ந்து போந்த ஆத்மா இவர்கள் பண்ணும் பரிபவத்திற்கு இலக்காகக் கூடியதன்றே. பாழும் சரீரந்தானே இவர்கள் பண்ணும் பரிபவத்திற்கு இலக்காமது. அந்த சரீரத்தை தத்வஜ்ஞானிகள் தங்களுக்கு சத்ருவாகவன்றோ நினைத்திருப்பர்கள். இந்த ஸ்ரீவசநபூஷணத்திலேயே இரண்டாம் ப்ரகரணத்தின் முடிவு சூர்ணையிலே "இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் நாச ஹேதுவான அஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷய ப்ராவண்யத்துக்கும் விளை நிலம் தானாகையாலே தன்னைக் கண்டால் சத்ருவைக் கண்டாற் போலே" என்றருளிச் செய்யப்பட்டிருக்கையாலே ஸ்வசரீரம் ஸ்வசத்ரு வென்பதில் ஸந்தேஹமில்லை. உலகில் தன்னுடைய சத்ருவுக்கு ஒருவன் பரிபவத்தை யுண்டு பண்ணினால் உகப்பு உண்டாகுமன்றோ; அது போலவே ஸ்வசத்ருவான ஸ்வசரீரத்தைப் பரிபவப்படுத்துமவர்கள் திறத்திலே உகப்பு உண்டாக வேணுமென்கை. மேலும், தூஷிக்குமவர்கள் தங்களுடைய தூஷணைகளாலே த்ருஷ்டத்தில் சில நஷ்டங்களைத் தான் உண்டு பண்ண முடியுமென்று கீழே விவரிக்கப்பட்டது. அப்படி நஷ்டம் செய்யப் பெறுகிற லௌகிகப் பொருள்களை தத்வஜ்ஞானிகள் தமக்கு மிகவும் ப்ரதிகூலங்களாக நினைத்திருக்கையாலே அப்படிப்பட்ட ப்ரதிகூலங்களைப் போக்குமவர்கள் விஷயத்திலே உகப்புக் காட்ட வேண்டியது அவசியமேயன்றோ.

56. குற்றம் செய்தவர்களிடத்தில் உபகாரஸ்ம்ருதி நடக்க வேணும். பகவத் பாகவத ஸந்நிதானங்களில் நாம் செய்யவேண்டிய காரியம் என்ன? *அமர்யாத: க்ஷுத்ரச் சலமதிரஸூயாப்ரஸவபூ:* இத்யாதிப்படியே நம்முடைய தோஷங்களை யநுஸந்திப்பது தான் செய்ய வேண்டிய காரியம். இதை நாம் மறந்திருக்கும் ஸமயங்களிலே நம்முடைய தோஷங்களை யுணர்த்துமவர்களை நமக்கு உபகாரிகளாகவன்றோ நாம் நினைக்க வேண்டும். இப்படி

தோஷங்களை யுணர்த்துவது ஏகாந்தமாகவல்லாமல் மிகப் பெரிய கோஷ்டிகளிலோ புத்தகங்களிலோ பலரறியவுணர்த்துவது, ஸாமான்யமான உபகாரமா? மஹோபகாரமல்லவா? அன்னவர்களிடத்திலே நன்றி பாராட்டவன்றோ கடமைப்பட்டிருக்கிறோம். நம்மைப் பற்றிப் பிறர் எது கூறினாலும் சித்தத்தில் சிறிதும் விகாரமின்றியே உல்லாஸமாக விருக்கப் பழகவேண்டும். உண்மையில் நம்மிடத்தில் குணங்கள் மெலிந்து தோஷங்களே மலிந்து கிடக்குமாதலால் அப்படிப்பட்ட தோஷங்களை நேரிலோ மறைவிலோ எடுத்துரைப்பாருளரேல் அவர்களை நாம் நமக்கு மஹோபகாரம் செய்தவர்களாக நினைக்கவேண்டும். "குண ஈஷதலிபிக்ரமாத்" என்று வேதாந்தவாசிரியர் பணித்த முறையில் நம்மிடத்தில் ஸ்வல்ப குணங்களுமிருக்கலாம். அதைப் பிறர் பாராட்டிப் புகழவேண்டுமென்று நாம் ஆசைப்படுவது தகுதியன்று.

57. குற்றத்தைக் குற்றமாகவும் நற்றத்தை நற்றமாகவும் கொள்வதைவிட, குற்றத்தையும் நற்றமாகக் கொள்வதே நலமென்று பெரியார் கூறுவதால் இத்தகைய நலம் வாய்ந்த சில மஹான்கள் தம்முடைய வாத்ஸல்ய குணத்தின் மஹிமையினால் குற்றங்களில் சிறிதும் கண் வைத்திடாமல் நற்றமாகவே பாராட்டிப் புகழ்வர்களெனினும் அந்தப் புகழ்ச்சியில் நாம் மயங்கிவிடக்கூடாது. 'இவர்கள் நம்மிடத்திலில்லாத நலத்தை ஏறிட்டுக் கொண்டாடுகிறார்கள்' என்றே நாம் உள்ளபடி நினைக்கவேண்டும். குற்றங் குறைகளைக் கூறுமவர்களே ஸத்யவாதிகள். நம்மீது பிறர் கூறுகிற குற்றங் குறைகள் உண்மையாக நம்மிடத்தில் இல்லையென்று நாம் நினைக்கக்கூடும். ஆனால் அப்படி நினைப்பது தவறு; நம்மிடத்தில் இல்லாதவற்றைப் பிறர் சொல்லார்கள் என்றும், நமக்குத் தெரியாதபடி நம்மிடத்தில் இருப்பவைகளையே பிறர் தெரிந்து சொல்லுகிறார்கள் என்றும் நாம் நினைக்க வேண்டும்.

58. எதற்காக இப்படி நினைப்பது? நம்முடைய குற்றமோ நற்றமோ நமக்குத் தெரியாமலிருக்குமோ? பிறர் பொறுமையினாலும் மற்றும் பலவகைக் காரணங்களினாலும் நம்மீது சில பல குற்றங்களை ஏறிட்டுக் கூறினால் அவற்றை நாம் எதற்காக இசையவேண்டும்? உள்ள குற்றமாயிருந்தால் இசைந்து கொள்வோம்; இல்லாது ஏறிட்டுக் கூறுகிற குற்றமாயிருந்தால் மறுப்போம்—என்று இங்ஙனே சிலர் வாதம் செய்யக்கூடும். அன்னவர்களுக்கு நாம் சொல்லுவதாவது, "உள்ள குற்றமாயிருந்தால் இசைந்து கொள்வோம்" என்று இவ்வளவாவது சொல்லுகிறீர்களே, இதுவே பரமானந்தம்; உள்ள குற்றங்களையும் இல்லை செய்வார் மலிந்த இவ்வுலகில் உள்ள குற்றங்களை உள்ளபடி ஒப்புக்கொள்வார் சிலராவது தேறினால் ஈதொப்பதின்ப முண்டோ;

லோகாபிராம நல்வார்த்தைத்திரள் (3) முற்றிற்று.

—

# 4. உத்தமக்ராமஜர்க்கு உத்தமோபதேசம்

59. இதைப்பற்றி முன்னுரையில் நாமெழுதியிருப்பதை மீண்டுமொருமுறை வாசிப்பது. * அவனில் மாமணி மாடத்திலே ஆழ்வார் * உரைகொள் இன்மொழியாள் * எனப்பட்டார். திருவாய்மொழியானது எத்தனை உரைகளையுங் கொள்ளுமென்பது இதன் உள்ளுறை பொருள். இவரும் ஓர் உரையெழுத உருசிகொண்டாரென்றால் இதில் தவறொன்றுமில்லை. இவர் தம்மினத்தவரால் இயற்றப்பட்ட திருவாய்மொழி வியாக்கியானங்கள் ஒன்பதினாயிரப்படி யென்றும் பதினெண்ணாயிரப்படியென்றும் இருபத்துநாலாயிரப்படி யென்றும் இங்ஙனே பல அச்சேறிப் பிரசுரமாகி ப்ரசாரத்திலுமுள்ளன. அவசியமுள்ள விடங்களில் அவற்றிலிருந்து மேற்கோள்கள் காட்டியும், அவற்றில் அநுபபத்திகளிருப்பதாகத் தோன்றினால் அவற்றைக்காட்டியும் கண்டித்தும் இவர் உரையெழுதலாம். அந்த வழியை அறவே விட்டுத் தமக்கு நிலமல்லாத மஹா வியாக்கியானங்களை அஸ்தானே ஸ்பர்ஶிப்பதும் அஸூயையினால் அவற்றை தூஷிப்பதும் இவர்க்கு உற்றதன்று.

60. இங்ஙனே இவர்க்கு நாம் உபதேசிக்க வேண்டியவை பல பலவுள்ளன. அவற்றுக்கு ஸமயாந்தரத்தில் அவகாஶம் நேரும். ப்ரக்ருதம், கேசவன்தமரில் * விட்டிலங்கு செஞ்சோதி யென்கிறபாட்டினுரையில் இவர் செய்திருக்கும் ப்ரஸங்கா திக்ரமத்தைப் பற்றி மட்டும் பேசுவோம்;

61. இப்பாசுரத்தின் ஈட்டு அவதாரிகையிலுள்ள ஸ்ரீஸூக்திகளாவன;—"திருமாலையாண்டானோடே எம்பெருமானார் திருவாய்மொழிகேட்டருளுகிறகாளில் பாட்டுக்கள்தோறும் சிலவார்த்தைகளையருளிச்செய்து இது அர்த்தமானாலோவென்றால், 'இது விச்வாமித்ர ஸ்ருஷ்டி, ஆளவந்தாரருளிச்செய்யக் கேட்டறியேன்' என்று பணிக்குமாமாண்டான்; ஆண்டான் இப்பாட்டுக்கு விச்வாமித்ர ஸ்ருஷ்டி வேண்டாவாயிருந்ததீ! யென்ன; இப்பாட்டால் தன் அவயவ ஸௌந்தர்யத்தாலே என்னைத் தனக்காக்கினானென்கிறார் என்றருளிச்செய்தருளினாராம். அதுவுங்கிடக்க, பட்டருளிச்செய்ததொன்றுண்டு—ஆழ்வாரையும் ஆழ்வார் பரிகரத்தையும் விஷயீகரித்து அத்தாலே திருமேனியிற் பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தைச் சொல்லுகிறது" (ஆக இவை ஈட்டு ஸ்ரீஸூக்திகள்.)

62. இப்பாட்டிற்கு அடியேனுடைய திவ்யார்த்ததீபிகையுரையையுமிங்குத்தருகிறேன்.

திருமாலையாண்டான் பக்கலிலே எம்பெருமானார் திருவாய்மொழி கேட்டருளுங் காலத்தில் பாசுரந்தோறும் எம்பெருமானார் விலக்ஷணமாக ஒவ்வொரு அர்த்த விசேஷம் தாம் சொல்லி 'இப்படியிருக்கலாமோ?' என்பராம்; ஆண்டான் அதுகேட்டு 'இது விச்வாமித்ர ஸ்ருஷ்டியாயிருக்கிறது; ஆளவந்தாரருளிச்செய்ய நான் கேட்டதில்லை' என்று ஸாதிப்பராம். இப்பாசுரம் வருகையில் எம்பெருமானார் ஒன்றும் ஸாதியாமல் இருக்கக் கண்ட ஆண்டான் 'இப்பாட்டில் விச்வாமித்ர ஸ்ருஷ்டி ஒன்றுமில்லை போலும்!' என்று புன்முறுவலோடே கேட்டுவிட்டாராம். எம்பெருமான் தன்னுடைய திருமேனியழகைக் காட்டி ஆழ்வாரைத் தனக்காக்கிக் கொண்டமையை இப்பாட்டில் சொல்லுவதாக ஆள

வந்தாரருளிச் செய்தபடி. உடையவரும் இப்படியே அருளிச் செய்துவந்தார்; பட்டர் அருளிச் செய்யும்போது, 'ஆழ்வாரையும் ஆழ்வாருடைய ஸம்பந்திகளையும் விஷயீகரித்து அத்தாலே எம்பெருமானது திருமேனியிற் பிறந்த புகரைச் சொல்லுகிறது' என்பராம். எம்பெருமானுடைய வடிவழகைக் காரண கோடியிலே நிறுத்தி ஆளவந்தாருடைய நிர்வாஹம். அதைக் கார்ய கோடியிலே நிறுத்தி பட்டருடைய நிர்வாஹமென்று வாசி காண்க. பன்னீராயிரப்படி யுரையில்—"இப்பாட்டில் முதலடியில் விட்டு வென்று திருநாமமாகப் பிரித்து, விட்டிலங்கு முடியம்மானென்று நாலாமடியோடே அந்வயித்துக் கிடக்கிறது; அல்லாதபோது, திருநாமம் முதலாக எழுகிற பாட்டுக்களின் மர்யாதை குலையும்." என்கிற வாக்கியங்கள் காணப்படுகின்றன. இதற்குப் பெரியோர்கள் அருளிச் செய்வதாவது—பாட்டின் தொடக்கத்திலுள்ள விட்டு என்பதை 'விஷ்ணு' என்கிற பதத்தின் விகாரமாகவே கொள்ளவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. கேசவாதி நாமங்கள் பாசுரந்தோறும் வரவேணுமென்கிற இவ்வளவு நியமமே யுள்ளது. இப்பாட்டில் மதுசூதனனென்கிற திருநாமம் வந்துவிட்டது. கீழ்ப்பாட்டில் வந்த விஷ்ணுநாமம் இப்பாட்டிலும் வரவேணுமென்கிற நியதியில்லை. அப்படி நியதிகொண்டாலும் பாட்டின் ஆதியில் விட்டு என்றிருப்பதால் அது அர்த்தசக்தியால் விஷ்ணு போதகமாகாவிடினும் சப்தசக்தியால் விஷ்ணுப்ரத்யபிஜ்ஞாபகமாகக் குறையில்லை. திருவெழுகூற்றிருக்கையில் இருமலர், நால்வாய், இருநீர், ஆறுபோதி என்றிவை முதலான பதங்கள் அர்த்தசக்தியாலன்றிக்கே சப்த சக்தியால் மாத்திரம் எண்களைக் குறிப்பிடுகின்றமை இதற்கு நிதர்சனமாகக் கொள்ளத்தகும். ஆகவே, ஈடு முப்பத்தாறாயிரப்படியி லருளிச் செய்கிறபடி பாக்ஷிக நிர்வாஹமே பொருந்தும் என்று. ஒன்பதினாயிரப்படியிலும் இருபத்துநால யிரப்படியிலும் விட்டு என்கிற சொல் நான்கடிகளிலும் ஸமரூபமாகவே கொள்ளப்பட்டிருக்கின்றமையும் அறியத்தக்கது. (இது நமது தீபிகை.)

63. இதற்குமேல் உத்தமக்ராமஜர் எழுதியிருப்பதைக் காண்மின் ;—

"இங்கோர் ஐதிஹ்ய மீட்டிலுள்ளது—திருமாலையாண்டான் பக்கல் எம்பெருமானார் திருவாய்மொழியின் பொருள் கேட்டு வரும்போது பாட்டுக்கள் தோறுமே 'இது அர்த்தமானுலோ' என்றவாறு விண்ணப்பம் செய்வராம். அவரும், 'இது விச்வாமித்ர ஸ்ருஷ்டி; ஆளவந்தார் அருளிச் செய்யக் கேட்டறியேன்' என்று பணிப்பராம். அவ்வாண்டான் இங்கே, இப்பாட்டுக்கு விச்வாமித்ர ஸ்ருஷ்டி வேண்டுவதில்லை போதுமென்றாராம். தன் ஸௌந்தர்யத்தாலே ஆழ்வாரைத் தனக்காக்கினது இங்கு கூறப்படுமென்று அங்கே அருளிச் செய்தது. இதில் ஆளவந்தார் அருளினதும் எம்பெருமானார் அருளினதும் ஒன்றேயாயிற்றென்பர் சிலர். எம்பெருமான் மேவும் தன்மையாக்கினதைக் கண்டு மகிழ்ந்து ஏத்துகிறாரென்று ஆளவந்தார் அருளினதாகவும், மேவச் செய்தது ஸௌந்தர்யத்தாலே என்பதற்கு இப்பாசுரமென்று எம்பெருமானார் அருளினதாகவும் சிலர் கொள்வர். எந்த அழகைக் கொண்டு மேவச் செய்தானே, அவ்அழகை யெடுத்துரைக்கிறாரென்றால் எல்லாம் சொன்னதாம். ஆக எல்லாமொன்றே. இங்கே விச்வாமித்ர ஸ்ருஷ்டி எம்பெருமானாரை விட்டு பட்டரிடம் நின்றது. ஆண்டான் எழுந்தருளியிருந்தால் அருளியிருப்பர்."

64. இந்த வாக்ய ராசியில் "என்பர் சிலர்;....சிலர் கொள்வர்" என்பவற்றில் விவக்ஷிதமானதை அவரவது அறிந்துகொண்டிருந்தால் போதும். அது எப்படியாவது கிடக்கட்டும்;

65. "இங்கே விச்வாமித்ர ஸ்ருஷ்டி எம்பெருமானாரை விட்டு பட்டரிடம் நின்றது." என்ற வார்த்தை விரலுக்குத் தகாத வீக்கமெனத் தகும். மேலே "ஆண்டான் எழுந்தருளியிருந்தால் அருளியிருப்பர்" என்றதற்குத்தான் என்ன அர்த்தமோ? எம்பெருமானார் திருமாலையாண்டான் பக்கலில் திருவாய்மொழி கேட்டதில்லை யென்கிறாரா இவர்? அல்லது, திருவாய்மொழிப் பொருள் கேட்கும்போது இது விச்வாமித்ர ஸ்ருஷ்டியென்று ஆண்டான் சொல்லும்படியாக நடந்ததில்லை யென்கிறாரா? எதுவும் சொல்லப் போகாதிவர்க்கு.

66. திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்டதை வேதாந்தவாசிரியர் குருபரம்பராஸாரத்தில் பொறித்து வைத்திருக்கையாலே அது சொல்லப் போகாது. ஆண்டான் விச்வாமித்ர ஸ்ருஷ்டியென்னும்படியாக வொன்றும் நடந்ததில்லை யென்னில், இதுவும் வேதாந்தாசார்ய ஸூக்தி விசேஷ மறியாமையின் லக்ஷணம். ததாஹி;

67. கீதாபாஷ்ய தாத்பர்ய சந்திரிகை ஸாதிக்குமவர் *யத்பதாம்போருஹ த்யாந ச்லோகத்தை விவரிக்குமிடத்து "[illegible]" என்று பணித்துள்ளார். இது ஐதிஹ்யத்தை அநுஸரித்த ஸ்ரீஸூக்தி.

68. ஐதிஹ்ய மென்னென்னில்; பின்பழகிய பெருமாளருளிச் செய்த ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தில் எம்பெருமானார் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கிற செய்தியை எழுதி வருமிடத்து,

"பின்னையும் திருவாய்மொழி தொடங்கி நடவா நிற்கச் செய்தே மீண்டும் ஓர் அர்த்த ப்ரஸ்தாவத்திலே ஆண்டான் ப்ரதிபாதித்த அர்த்தங் கேட்டு 'ஆளவந்தார் இப்படியருளிச் செய்யார்' என்று உடையவர் விண்ணப்பஞ் செய்ய, ஆண்டானும் நீர் ஆளவந்தாரைக் கண்ணாலும் காணாதிருக்க, இப்படி யருளிச் செய்யா ரென்கை யாவதென்? என்று கேட்டருள, உடையவரும், 'நான் ஆளவந்தாருக்கு ஏகலவ்யனன்றோ' என்று விண்ணப்பஞ் செய்ய, ஆண்டானும் திருக்கோட்டியூர் நம்பி நமக்கு உரைத்தது ஒத்திருந்தது; இதுவும் ஒரு திருவவதாரம்; ஆளவந்தார் பக்கல் கேளாத அர்த்தமெல்லாம் இங்கே கேட்கப்பெற்றோம் என்று இவரைத் தெண்டனிட்டருளினார்."

என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இதுவும் ஒரு காலக்ஷேப க்ரமமாகையாலே தேசிகன் தாம் இதை குருமுகமாக க்ரஹித்தோ ஆப்தோபதேசத்தா லறிந்தோ இது விச்வஸநீயமான ஐதிஹ்யமென்று உலகுக்கு உணர்த்த வேண்டியே இதை ஸம்ஸ்க்ருதத்தி லெழுதி வைத்தார். விச்வாமித்ர ஸ்ருஷ்டி ப்ரஸ்தாவ முண்டாகாதிருந்தால் "ஏகலவ்யோஹம்" என்று ஸ்வாமி ஸாதிக்க ப்ரஸக்தியே யில்லை. ஆக உத்தம க்ராமஜருடைய விப்ரதிபத்தி வெறுக்கத்தக்கதென்று முடிந்தது.

69. இவருடைய அஸூயா பரீவாஹ வாக்ய ராசியில் "விச்வாமித்ர ஸ்ருஷ்டி எம்பெருமானாரை விட்டு பட்டரிடத்திலே சென்று சேர்ந்தது" என்றுள்ள பரிஹாஸோக்திக்கு என்ன பொருள்? அநுபவ பரீவாஹ ரூபமான அருளிச் செயல்களில் ஆசார்யர்களின் திருவாக்கில் அர்த்த விசேஷங்கள் கரை கட்டாக் காவேரிபோலே வெள்ளங் கோத்து வருகின்றன. பட்டருடைய ரஸவத்தமான நிர்வாஹங்களில் ரஸிக்க ஸாமர்த்ய மற்ற இவர் வ்யர்த்த பரிஹாஸோக்திகளாலே நரக வாயெயம் சேமிக்கிறார் தத்தை.

70. இந்த வ்யாகரணத்தில் இவர் கலிவியென்று ஏதோ எழுதுகிறார்; கல்வியா? கலவியா? கிழவியா? கொழுவியா? எந்தச் சொல் இவர்க்கு விவக்ஷிதமென்று விளங்கவில்லை. இதெல்லாம் மஹாகுல ஸேவா ஸாமர்த்யாதிசயத்தின் விளைவு என்பதில் ஐயமுண்டோ?

71. தமிழோடு ஸம்ஸ்க்ருதத்தோடு வாசியற எல்லாவற்றிலும் இவருடைய துவிபரீதவுணர்ச்சியே யென்பதற்கு ஒன்றே காட்டி நிற்போம். *வாமனன் பாசுரத்தின் அவதாரிகையில் *ந அக்ஷ்ணா பச்யதி கச்சிதேனம்* என்று உபநிஷத் வாக்ய முதாஹரிக்கிறார். இது அப்ரஸித்தமானதோ ருபநிஷத்தி லுள்ளதன்று; ஸுபோதா நாராயணோபநிஷத்திலுள்ளது. கச்சனைனம் என்று பாடமே யல்லது கச்சிதேனம் என்பது காதாசித்கமாகக் கூட கிடையாது. (சித், சந) எப்படி யிருந்தாலென்ன? என்பது ப்ராமாணிகஸம்மதி யாகாது. சிதேனம், சனைனம் என்ற மூன்றெழுத்தில் ஸ்வரபேதம் சாலவுமுண்டு. சனைனம் என்றால் அநுதாத்தமும் உதாத்தமும் ஸ்வரிதமுமாகும். சிதேனம் என்றால் ஸ்வரிதமும் ப்ரசயமுமாகும். உச்சாரண வடிவத்தில் நெடுவாசியுண்டாகும். முக்கியமாக ச்ருதி வாக்யத்தில் ஸ்வகபோல கல்பனை ப்ரபல ப்ரத்யவாய ஹேதுவாகும். எதற்கும் அஞ்சாதே வாங்மயங்களிரண்டையும் படுகொலை யடிக்குமிவர் உய்யும் வகை காண நினைக்கில் இந்த உத்தமோபதேசத்தைக் குறிக்கொண்டு இனியாகிலும் ப்ரவர்த்தேத ஸ்வஹிதாவஹ:.

ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசாரிய ரெழுதிய ஸப்ததிரத்னம் முற்றிற்று.

---

# அன்பர்களுக்கு அறிவிப்பு.

பாரிஜாத புஷ்பமென்கிற பூதிகந்தி புஷ்பத்தைப் பற்றிக் கீழ் 18-ஆம் பக்கத்தி லெழுதி யிருப்பதைக் குறிக்கொண்மின். அந்தச் சுவடி பலர்க்குக் கிடைத்திராது. கிடைக்கப்பெற்ற சிலர் அல்ப ஸந்தோஷிகளாய் ஆரவாரிக்கக்கூடும். அன்னவர்களிலும் D. R. போன்றவர்கள் இந்த வம்புச் சுவடி காசு பொருதென்றும், நாளை காலையே நீருகி யொழியுமென்றும் ஆப்தர்களுக்கு அறிவித்தே தீருவர்கள். அறிவித்து மிருக்கிறார்கள். எதிரியின் ஒவ்வோரெழுத்தும் அஸங்கதம், அஸமஞ்ஜஸம், அந்ருதம், அசடுமிக்கது, பழம் பாட்டு, பண்டே பாறி யொழிந்தது என்பதை அறியாதாரில்லை. இத்தகைய அஸம்பத் தோக்திகளை எதிரி யாவதாயுஷம் ப்ரசுரித்துவர நிச்சயித்திருப்பதாக முடிவில் தெரிவித்து, இது அர்த்த ஸாத்யமான காரியமானதால் யாவரும் யதாசக்தி பொருளுதவி புரிய வேண்டுமென்று கோரியிருக்கிறது. இதற்கு நாம் தெரிவிப்பதைக் கேளீர். எதிரி எழுதின, மை உலருவதற்கு முன்னே அடுத்த நாளிலேயே அந்த அஸங்கதங்களை நாம் உலகுக்கு எடுத்துக் காட்டி வருகிறோம். இப்படியே யாவதாயுஷமும் காட்டுவோம். மானிடர்களுக்கு மறப்பு என்பது ஸஹஜமாதலால் நமது நூல்களிலுள்ள விஷயங்கள் வித்வான்களுக்கு மறந்து போகுங் காலத்தை யெதிர்பார்த்து இரண்டு வருடம் மூன்று வருடம் தாமதித்து அஸங்கத அந்ருத பாஷணங்களை வெளியிட்டு வருகிற எதிரிக்கு வேண்டிய பொருளுதவியை நாமே செய்வோம். வேண்டியமட்டும் செய்வோம். ஐயுற வேண்டா.

மதுராந்தகம் ஸம்ஸ்க்ருத காலேஜில் வியாகரண ப்ரொபஸராய் விளங்கும் ஸ்ரீ. உ. வே. பாதூர் ராகவாசார்ய ஸ்வாமியும், T. Nagar. Raosahib. S. ராகவையங்கார் ஸ்வாமியும், திருக்குடந்தை வித்வான் ப்ரவசநமணி பூவராஹாசாரும் உபய க்ரந்தங்களையும் விமர்சித்து அபிப்ராயம் தெரிவிக்கக் கடவர்கள்.

நாஹம் யாசே தைவகஸாஹ்யம் நயாசே காதம்வா ட்ஸும் காகணிகாம்வா நயாசே ।
யாசே கேவலம் உக்ஷர தீனத்வம் ப்ரயவ்ரதம் வச்யவாணம் ப்ராஜ்ஞதத்வம் ம்ருணதக்ஷ:॥

---

# ஸ்ரீராமாநுஜன் 148

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும்பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

| | | |
|---|---|---|
| ஸம்புடம் 13 | 1961ஸு ஏப்ரல்மீ<br>பிலவஸு சித்திரைமீ | ஸஞ்சிகை 4 |


## பாரிஜாத புஷ்ப மென்கிற பூதிகந்தி புஷ்பத்தையுத்தேசித்தே

## முக்கிய அறிவிப்பு.

வாதப்போரில் ஆர்ஜவம் கௌடில்யம் என்று இரண்டுண்டு; ப்ரதி பக்ஷிகளால் செய்யப்பட்ட பூர்வ பக்ஷங்களுக்கு, சிறியது பெரியது என்னும் வாசியில்லாமல் எல்லாவற்றுக்கும் பரிஹாரம் கூறியே வாதம் நடத்துவது ஆர்ஜவம். அப்படி பரிஹாரம் கூறாமலும், அந்த பூர்வபக்ஷங்களைத் தாம் கண்டதாகவே காட்டிக் கொள்ளாமலும் வேறு விஷயங்களையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பது கௌடில்யம். தம்முடைய பூர்வ பக்ஷங்களுக்கு எதிர்த் தலையிலிருந்து பரிஹாரம் வந்து விட்டால், அதன்மேல் வாய்திறக்க வழியில்லாமலும் போய்விட்டால் "அந்த விஷயத்தில் த்ருப்திகரமாக ஸமாதானம் வந்துவிட்டது" என்று தெரிவித்து அதில் கை கூப்பி நிற்பது ஆர்ஜவம்; ஸமாதானம் வெளி வந்த பிறகுங்கூட அதை மறைத்திட்டு மேன்மேலும் பழைய ஆக்ஷேபத்தையே ப்ரபஞ்சநம் செய்துகொண்டு கிடப்பது கௌடில்யம். மற்றும் பலவகையான ஆர்ஜவ கௌடில்யங்களிருந்தாலும் இவையே முக்கியமானவை. எம்முடைய இயல்பு எத்தகைத் தென்றால் எதிரிகள் செய்த ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் கூறாமல் கண்ணுறங்குவதில்லை. நம்மால் ஸமாதானம் கூறப்பெறாத ப்ரதிபக்ஷி பூர்வபக்ஷம் ஒன்று கூடகிடையாதென்பதை ஸீமர்க்ச் சொல்லுவோம். ப்ரதிபக்ஷிகள் நம்முடைய பூர்வ பக்ஷங்களில் ஒன்றுக்குக்கூட ஸமாதானம் தெரிவித்ததில்லை, தெரிவிக்கவும் முடியாது என்பதையும், அப்படியிருந்தும் தாங்கள் பல ஆக்ஷேபங்கள் செய்திருப்பதாகவும் அவற்றுக்கு நாம் மறுப்புரைக்கமாட்டாமல் எதையோ எழுதிக்கொண்டிருக்கிறோமாகவும் பொய்யாக எழுதி வருகிறார்களென்பதையும் ஸபதம் பண்ணிச் சொல்லுவோம்.

எதிரிகளின் ஆக்ஷேபங்களில் ஸமாதானம் தெரிவியாமல் விட்டிருப்பது ஒன்றாவதுண்டாகில் இதுகாணீர், இதோகாணீர் என்று எடுத்துக்காட்ட முன்வரலாம். நமது நூல்கள் அபரிமிதங்களாகையால் எதிரிகளின் ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் நமது நூல் ஏதேனுமொன்றில் பொலிந்தே நிற்கும். தவிர, எதிரிகளின் வஞ்சனையை நாம் காட்டுகிறோம், காண்மின். (1) உடையவரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து சூதுசெய்து நிர்ப்பந்தத்தினால் திறவுகோல்களை வாங்கிக் கோயில் பரிகரங்களை யெல்லாம் தென்கலையாக்கி விட்டதாக இது எழுதி வெளியிட்டு எழுவருஷமாயிற்று. இதை நாம் வருஷம் தப்பாமல் நமது நூல் தப்பாமல் ஒவ்வொன்றிலும் எடுத்துக்காட்டி, அதற்கு நேர்விருத்தமாக மேன் பேறும் இது எழுதிக்

கொண்டிருப்பது தவ்று தவறு தவறென்று ஆக்ஷேபித்து வருகிறோம். இதற்கு ஏதேனும் பதிலுண்டோ? தென்கலை ஸித்தாந்தத்திற்கு உடையவரும் கூரத்தாழ்வானுமே கூடஸ்தர்க ளென்று இதுவே எழுதி முடித்திட்டபிறகு விவாதத்திற்கு என்ன இடமுள்ளது. அதற்கு இப்போது பதில் சொல்ல வருகிறேனென்று ஏதோ அஸம்பத்தப்ரலாபம் செய்யக்கூடும். அதற்கு ஒரு பதிலும் வேண்டா. எழுவருடமாக பதில்சொல்லாத காரணமென்ன? என்ற கேள்வி யொன்றுக்குத்தான் பதில் சொல்லவேண்டுமிது. (2) மற்றொரு விஷயம்; உடல் பொருளாவி யெல்லாவற்றாலும் தேசிகனுக்குக் கிஞ்சித்கரிப்பதையே ஜீவித லக்ஷ்யமாகக் கொண்டிருக்கிற நம்மை தேசிகத்வேஷியென்றும் தேசிகத்ரோஹியென்றும் அஸூயையினால் பறைசாற்றுகிறவிது தேசிகனுடைய தத்வடீகையிலிருந்து ஒரு ஸ்ரீஸூக்தியை உதாஹரித்து ''இதுமிகவும் அஸமஞ்ஜஸம்'' என்றெழுதிப் பாவச்செய்திருக்கிறது. இதைப்பற்றியும் எழு வருஷமாக நமது நூல்களில் சர்ச்சையுள்ளது. இதற்கும்பதில் கிடையாது. நாம் எறிட் டுரைக்கிறோமா? பிரமித்துரைக்கிறோமா? வெளிவரட்டும். இவ்விரண்டு விஷயங்களும் லேசானவையல்ல; வடகலையார்கள் இதைத் தங்கள் திரளிலிருந்து விரட்டியோட்டுவதற்கு இவ்விரண்டில் ஏதேனுமொரு விஷயமே போதும். ஏதோ உறவிருப்பதாகச் சொல்லி மடம் இதை முதுகுதட்டிக்கொடுக்கிறதேயொழிய மற்று யாரும் மதிப்பாரில்லையிதை.

எல்லாவற்றுக்கும் மேற்பட்ட பெரிய மாரீச க்ருத்யமொன்று இதனுடையது காட்டு கிறோம் காண்மின். பாரிஜாத புஷ்ப மென்கிற இந்த பூதிகந்தச் சுவடி 1961 ஆ சார்வரி தையீ வெளியிடப்பட்டதாக அட்டைமேலுள்ளது. அட்டையைத் தள்ளினால் உள்ளே 1960 ஆ சார்வரி ஆவணிமீ வெளியிடப்பட்டதாக அச்சிட்டிருக்கிறது. ஆவணி எங்கே? தை எங்கே? ஆறுமாத காலம் இச்சுவடி அஜ்ஞாதவாஸம் பண்ணிற்றென்று ஸ்பஷ்டமாக விளங்கவில்லையா? இப்போதும் அஜ்ஞாத வாஸந்தான். கார்த்திகை மாதத்திலேயே இது கண்டிக்கப்பட்டொழிந்ததில் என்ன சூது நடந்திருக்கமுடியும்? அச்சிடுமிடத்தில் ஏதோ சூது நடந்ததாகவும் அந்தச் சூது செய்தவர் ஏதோ தெரிவித்துத் தப்பித்துக் கொண்டதாக வும் எழுதியுள்ளதிது. யார் தப்பித்துக் கொண்டாலும் இது தப்பித்துக் கொள்ளமுடியாத படியன்றோ கிடக்கிறது.

பூதிகந்தி புஷ்ப ஹுணாமநமென்று இப்போது அவதரிக்கிற நமது நூலில் முதலெட்டு பக்கங்களிலுள்ள பத்து விஷயங்களுக்கு மட்டும் முன்னம மறுப்பு வெளியிடட்டும். பெரியவாச்சான் பிள்ளையை உஜ்ஜீவித்து இந்த பூதிகந்தி ஏற்கெனவே திவங்கதரான புத்தூர் வக்கீல் ஸ்வாமியிடம் நல்ல அவெடிகைகள் பெற்று வாய்மூடி நின்றது. அதே தூஷணத்தில் இப்போது இறங்கியுள்ளது. மற்ற விஷயங்களை விட்டு இதை மட்டுமாவது எடுத்துக் கொள்ளட்டு மிது.

ஆரியர்காள்! இதன் அபத்தச் சுவடியைக் கண்ட அன்றே நாம் பதிலெழுதி முடித்து ஒரு வாரத்திற்குள் இதோ அச்சிட்டு வெளியிடுகிறோம். இன்னமும் இது ஸசேஷமாகவே யுள்ளது. அந்த சேஷமும் சீக்கிரமாகவே வெளிவரும். அதற்குள்ளாக இது [வசை மொழிகளை யதேஷ்டமாகக் கலந்து கொண்டு] விஷயங்களுக்கு விடாமல் பதிலெழுதி, மேமே நாம் குறிப்பிட்டிருக்கிற மத்யஸ்தர்கள் மூவருள் ஒருவரிடமனுப்பட்டும். அல்லது தானே அச்சிட்டு வெளியிடட்டும். .... .... .... .... (*)

श्रीहस्तिशैलशिखरोज्ज्वलपारिजाताय नमः ॥

    

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் எழுதிய

# பூதிகந்தி புஷ்பப்ரணாசநம்.

# [ पूतिगन्धिपुष्पप्रणाशनम् ]

(வெண்பா)

வயிற்றெரிச்சல் தீர வசைமொழிகள்பெய்யப்
பயிற்றிய பாமரரே! பாரீர்—எயிற்றிடைமண்
கொண்டவெந்தை கோவிந்தன் கூரருளால் யாம்பயக்கும்
பண்டிதர்தம் பாக்கியத்தின் பாங்கு.

## சுருக்கமான முன்னுரை

வாதகேளிகளில் ப்ரமாணங்களையோ உபபத்திகளையோ எடுத்துக்காட்டுந்திறத்தில் துர்ப்பிக்ஷமுடையார்க்கு நிந்தாபி: சேஷபூரணமல்லது வேறொன்றும் ப்ராப்தமாகாதாகையால் பாரிஜாத புஷ்பமென்று பெயர்கொண்ட பூதிகந்திபுஷ்பம் வயிற்றெரிச்சல் தீரும்வகை வசைமொழிகளால் நிரப்பப்பட்டு, தாராளமாக முகங்காட்டவும் கூசி மறைந்துலவுகின்றது. அதன் வழியை நமது நூல் ஒருநாளும் பின்பற்றுதாதலால் ப்ரதிபக்ஷி திக்குமுக்கலாடி நிற்கும்படியான விஷயங்களை மட்டும் வர்ஷிக்குமிந்த நூல். மணவாளமாமுனிகளின் வியாக்கியான திவ்யக்ரந்தங்களில் திடீரென்று கயிறு போட்டு எந்த இடத்தையெடுத்தாலும் ஶாஸ்த்ரார்த்த ஸௌரபமே கமழுமாபோலே நமது இந்நூலிலும் எந்த இடத்தையெடுத்தாலும் நிருபணீய விஷய ஸௌரபமல்லது வேறொன்றுங் காணமுடியாதென்று ப்ரதிஜ்ஞைபண்ணித் தொடங்குகிறோமிதனை.

முன்னம் இரண்டு விஷயங்கள் இந்நாலுக்கு உயிரென்று தெரிவிக்கலாகிறது. ப்ரதிபக்ஷத்தில் நாம் காட்டிய அவத்யங்களில் ஒன்றுகூட எதிரிகள் பதினாயிரவர் கூடினாலும் பரிஹரிக்கப்போகாது என்று நிலைநாட்டுதலொன்று. எதிரிகள் கூறியுள்ளவையும் கூறப்போகின்றவையுமான அவத்யங்களை ஒன்றுவிடாமல் எல்லாவற்றையும் களைந்தே தீருவோமென்பது மற்றொன்று. இன்னமும் மிக முக்கியமானதொரு வார்த்தை;- ரகுவம்ஶாதிகளில் போது போக்கித் திரியவேண்டிய புஷ்பகாரவ்யக்தி ப்ரக்ருத விஷயத்தில் தலையிடுவது ஸர்வாத்மநாபி [illegible] மென்பதைப் பேர்க்கவும் பேராதபடி ஸ்தாபித்தல் முந்தின பணியாகும். வாதவிவாதச் சுவடிகள் கிடைத்தால் அவற்றை நாம் எப்படி பார்க்கத் தொடங்குவது வழக்கமென்றால் நடு நடுவே சில சில பக்கங்களைப் பிரித்து முன்னம்

பார்த்துவிடுவது; பிறகு ஆதியோடந்தமாகப் பார்ப்பது. நம்மிடத்தில் பரமகருணை கொண்ட பேராசிரியர்கள் எதிரிகளின் அதிமாத்ரகர்ஹணீயங்களான அவத்ய ஜடில விஷய விந்யாஸங்களை முந்துற முன்னம் நமக்குக் காட்டிக்கொடுத்தருள்வது நெடுநாளைய அநுபவஸித்தம். அதனால் இந்த முறையை நாம் கைப்பற்றியிருக்கிறோம். இந்த ப்ரக்ரியையிலேயே இதில் நமது ப்ரத்யாக்யாநங்கள் வெளிவருமாறு காண்மின்.

## இனி விஷய விந்யாஸங்களின் உபக்ரமம்.

### 1. திருக்குறுந்தாண்டகத்திற்கும் திருநெடுந்தாண்டகத்திற்கும் வாசியறியாமை.

பூர்வாசாரியர்களில் அபிப்ராய பேதமுண்டென்றும், பெரியவாச்சான் பிள்ளையை வேதாந்தவாசிரியர் கண்டிப்பதுண்டென்றும் கூறி, அதற்கு ப்ரதிஜ்ஞாமாத்ரமாக இரண்டு விஷயங்களைக் காட்டிவிட்டு "இவற்றிலேயே அபிப்ராய பேதமிருக்கும்போது திருக்குறுந்தாண்டகம் எத்தனையாவது பிரபந்தமென்பதில் அபிப்ராயபேதம் ஏன் இருக்கக்கூடாது?" என்கிறது தூஷகவ்யக்தி. திருமங்கையாழ்வாருடைய திவ்யப் பிரபந்தங்களில் திருநெடுந்தாண்டகம் த்ருதீய ப்ரபந்தமா? சரமப்ரபந்தமா? என்பதில் அபிப்ராயபேத ப்ரஸங்கம் விளைந்திருக்கிறதேயல்லது திருக்குறுந்தாண்டகத்தைப் பற்றி விவாதப் பேச்சு லவலேசமுமில்லை. திவ்யப்ரபந்த வாஸனையே யில்லாதவிது இன்ன ப்ரபந்தத்தைப் பற்றி விவாதமென்றுகூட அறிந்துகொள்ள மாட்டாமல் எழுதிப் போருகிறது. அச்சுப்பிழை யென்று சொல்ல இடமில்லாதபடி பிழை திருத்தம் போட்டுவிட்டது. இதேயிடத்தில் இரண்டு வரிக்கு மேலே (உபாயகோடியில்) என்பது (உபாயகோஷ்டியில்) என்று விழுந்திட்டதாகத் திருத்தம் காட்டியுள்ளது. இது அவசியமற்ற திருத்தம். அவசியமேயாகுக. "மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர்...நூற்றுவரும்" என்று பெரியாழ்வார் பணித்த கணக்கிலே பல நூற்றுவர் கூடிக் கூடி வாசித்துத் திருத்தம் வெளியிட்டிருக்கிறது. ப்ரக்ருத விஷயத்திற்கு அத்தனைபேரும் வந்தேறிகளாதலால் திருநெடுந்தாண்டக மென்று திருத்திக் கொடுக்க ஐயோபாவமையங்காருட்பட அனைவரும் அசக்தராயினர். இதுக்கு ஜீவிதாஸநமளிக்குமொருவர் ஸ்ரீ முஷ்ணம் சென்றிருந்தபோது ஏதோ உத்ஸவம் நடத்திவைக்க, அன்று திருவிசாகமாகையாலே அத்யாபகஸ்வாமிகள் திருவிருத்தம் ஸேவிக்க, ரோஷம் தலையெடுத்து 'என்னுத்ஸவத்தில் திருச்சந்த விருத்தம் பாட என்ன வந்தது?' என்று கத்தின செய்தி முன்னமே வெளிவந்துளது. ஆக இவர்களின் திரளே இருளும் மருளும் துயக்கும் மயக்கும் மலிந்ததென்று தேறிற்றாயிற்று.

### 2. இன்னுமொரு நூற்றாண்டிரும்.

பக்கம் 99-ல் எழுதுகிறது--

"ஒரேஒரு விஷயம் மட்டும் இங்கே கூறுகின்றோம்; தேசிகன் நூறு திருநக்ஷத்ரமெழுந்தருளியிருந்தார்; அவருடைய அந்த்ய காலத்தில் 'இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்று பாடியது பொருந்துகின்றது. மாமுனிகள் 73 திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார்; இவருக்கும் இன்னுமொரு நூற்றாண்டிரும் என்று பாடுகிறார்கள்; இவ்விரண்டுக்குள் எது முந்தியதாயிருக்கு மென்பதை அல்பபுத்திகளுமறியலாம். ஒரு நூற்றாண்டு இருந்தாயிற்று, இன்னுமொரு நூற்றாண்டிரும் என்பது இதன் பொருள். நூற்றாண்டிருந்தவர் விஷயத்தில் தானே இப்படிச் சொல்லத் தோன்றும்; எழுபது வயது இருந்தவரைப்பற்றி இன்னுமொரு எழுபதாண்டிரும் என்னத் தோன்றும்; அல்லது இன்னும் பல்லாண்டிரும் என்னத் தோன்றும். இன்னுமொரு நூறு என்று சொல்ல ஒருகாலும் தோன்றாது. ஆகையால் தேசிகன் பாட்டைப் பார்த்து மற்றவர்களுக்கும் இப்படிப் பாட்டு இயற்றப்பட்டது என்பதை மறைத்து வேறுவிதமாகக் காட்டச் செய்யும் முயற்சி தலைகீழாக நின்றாலும்

பலிக்காது''-என்று. ஸுச்ரூயதெ. தலைகீழாக நின்றுதவம் புரிந்தாலும் தங்களுடைய கல்பனைகள் வெற்றிபெறமாட்டாத தௌர்ப்பாக்யம் இவர்களுக்கேயாமென்பதை இவ் விஷயத்தைக் கொண்டே நிலைநாட்டுவோம். 1929-ஆம் வருஷத்தில் ஸத்ஸம்ப்ரதாயார்த்த ரத்நமாலை யென்னும் மகுடமிட்டுப் பல ரத்னங்கள் வெளியிட்டுவந்தோம். அதில் ஆறுவது ரத்னம் பாதுகாஸஹஸ்ராவதாரதத்வம் என்கிற ஸம்ஸ்க்ருத நூல். அதன் முடிவில் மொழி பெயர்ப்புச் சுருக்கமும் வெளியிட்டிருக்கிறோம். பிரபவ வருஷம் கார்த்திகை மாதம் வெளிவந்த வேதாந்த தீபிகையில் தாயார் ஸன்னிதி வரதாசாரியரென்பவர் இந்த இன்னு மொரு நூற்றாண்டிரும் விஷயத்தை யெழுதியிருந்தார். அதற்கு, மேலே குறித்த நமது நாலில் (பக்கம் 41-ல்) மறுப்பு எழுதியிருப்பது உலகமெல்லாம் பரவியுள்ளது. அதைக்கண்ட அந்த வரதாசாரியரும் மாமுனிகள் ஸன்னிதியிலே வந்து அபராத க்ஷாமணம் செய்து கொண்டது ஜகத்ப்ரஸித்தம். அங்கு நாமெழுதியுள்ள மறுப்பின் ஸாரமாவது,

பிரபந்தாநுஸந்தான தீபிகையென்று தங்களுக்கே அஸாதாரணமாகத் தோன்றிய தாய் இவர்கள் கூறிவரும் சுவடியில் தேசிகனுடைய எழுபத்தொன்பதாவது வயதில் ஸர்வதாரி வருஷத்தில் நம்பெருமாள் நியமனத்தினால் அந்த வாழிதிருநாமம் பிரசாரத் திற்கு வந்ததாக வரையப்பட்டுள்ளது. தேசிகன்து ஜீவிதகாலத்தில் இருபத்தொரு வருஷங்கள் சேஷித்திருக்கும்போதே இன்னுமொரு நூற்றாண்டிரும் என்று சொல்லி யாயிற்றென்று தேறிவிட்டது. 73 திருநக்ஷத்ர மெழுந்தருளியிருந்த மாமுனிகளுக்கு அது பொருந்தாதென்பவர்கள் இப்போது வாய்வீச முன்வருக. என்பதே.

" पश्येम शरदश्शतम् जीवेम शरदश्शतम् "

இத்யாதிகளிற்போலே அநந்தகாலம் வாழ்ந்திருக்க வேணுமென்பதே விவக்ஷிதம். ஆசார்யர்கள் ஜீவித்தெழுந்தருளியிருக்கும் போதே இன்னுமொரு நூற்றாண்டிருமென்கிற வாழ்த்து கூறப்படுவதாதலால் இதில் குசோத்யங்களுக்குச் சிறிதும் அவகாசமில்லை.

### 3. இதில் இரண்டு விஷயம் முக்கியமாகக் காண்கிறது.

ஏற்கெனவே விசாரத்தில் வந்து இவர்களுக்கு அவமானதேயமென்று முடிந்துபோன விஷயங்களை இவர்கள் புதிது புதிது போல் கிளப்பிச் சில பாமரர்களை வஞ்சிக்கப் பார்க்கி றார்களென்பது திண்ணமாகத் தேறுவது ஒன்று. இவர்கள் கல்பித்த பிரபந்தாநுஸந்தான தீபிகை இவர்களுக்கே காலகூடமாகிறதென்பது மற்றொன்று.

### 4. திசைதோறும் விழித்து நிற்கவேண்டும்படியான நிலைமை.

இப்போது பூதிகந்தத்தை நோக்கி இரண்டு கேள்விகள் கேட்கிறோம். தேசிகனுடைய 80 வயதுக்கு முன்னமே தோன்றியதாகத் தேறிநின்ற வாழிதிருநாமத்தில் இன்னுமொரு நூற்றாண்டிருமென்று பாடியது அஸங்கதந்தானென்று தலைவிதியாக ஒப்புக்கொள்ள நேர்ந்துவிட்டபடியாலே "அஸங்கதமான விதனை விட்டுத் தொலைத்தோம் விட்டுத் தொலைத்தோம் விட்டுத் தொலைத்தோம்" என்று வீதிகள்தோறும் உத்கோஷித்து விட்டுத் தொலைக்க ஸம்மதமா? அல்லது, தேசிகனுடைய 79-வது வயதிலேயே வாழிதிருநாமம் தோன்றியதாக எழுதிவைத்திருக்கிற ப்ரபந்தாநுஸந்தாந தீபிகையை அபத்தக் களஞ்சிய மென்று விட்டுத் தொலைக்க ஸம்மதமா? இரண்டில் எது ஸம்மதம்? இரண்டும் ஸம்மத மென்று கோஷிப்பதுதான் ப்ராமாணிகபந்தா. ஆனால் அதில் காலுஞ்செல்லாது, நெஞ்சும் செல்லாது. இன்னமும் பரிபவங்கள் பல படவேண்டியிருக்கையாலே ஆயுஸ்சேஷமும் பரிபவத்தோடே தலைக்கட்டு மத்தனை.

திருக்குடந்தை ஸமீபத்தில் வலயபேட்டை ஸ்ரீமத் சிமாச்சார்ஸ்வாமி யென்றொரு வ்யபதிஷ்டஸிஷ்டரிருந்தார். இவர் காஞ்சியில் வஸிக்க வந்து சேர்ந்தார். சிஷ்ய தௌர்ப்

பாக்யத்தாலே ஏதோ அபம்ருத்யுவையடைந்தாரெனினும் அதைப்பற்றியென்ன? யோக்யரும் ப்ராமாணிகருமானவர். இரண்டொரு வருஷம் காஞ்சியில் ஜீவித்திருந்தாரிவர். இருக்கையில் ஏதோ ஆசார்ய திருநக்ஷத்ரமென்று நடத்துவர். 5 நாள் 7 நாள் வேத பாராயணம் நடத்திவைப்பர். அத்யாபாகம் பண்ணவேண்டாமா என்று சிலர் வருவர்களாம்; 'நம்பளுக்கு அதெல்லாம் வழக்கமில்லை, புதிசாக நாமொன்று செய்கிறதுமில்லை' என்று கைகூப்பி நின்று விநயமஸ்ருணமாகப் பேசி யனுப்பிவிடுவர். இப்படி ஸ்வஸமய ஸம்ரக்ஷக ஸ்வாமிகள் இற்றைக்கும் பலருளர். கோவில்களில் மற்போர்புரியவந்த சில மல்ல ஜெட்டிகளே பாத்ரமென்றும் வாழியென்றும் ப்ரபந்த ஸாரமென்றும் பிள்ளையந்தாதியென்றும் புதுக்கொண்டாட்டங்கள் கொண்டாடப் புகுந்து ஸரிஹரிஷ்யதே இதி ஸாபேக்ஷவ ஜஹ.

## 5. விட்டுசித்தன்—விட்டுனுசித்தன்

பூதிகந்தம் அநுபந்தத்தில் எழுதுகிறது; "பெரியாழ்வார் தம் பெயரை விட்டுசித்தனென்றே குறிக்கின்றார்: * நாவகாரியத்தில் மட்டும் விட்டுனுசித்தன் என்று காண்கிறது; ஆகையால் இது யாரோ அறியாத ஒருவன் எழுதிச் சேர்த்ததென்று இசைய வேண்டும். ஶாஸ்த்ரவாஸனையேயில்லாத துர்மதியாகையால் ஒன்றை ஸாதிக்க எது ஹேதுவாகும்? எது ஆகாது என்பதை அறியமாட்டாமல் என்னென்னவோ பிதற்றுகிறது"

—என்று.

உளறுகிறது, பிதற்றுகிறது, ஆரவாரிக்கிறது, அட்டஹாஸம் செய்கிறது............இத்யாதி திவ்ய ஸ்ரீஸூக்திகள் தவிர வேறொன்றும் நானறியேனென்றிருக்கிற பூதிகந்தம் இப்படிப்பட்ட உளறல்களாலும் பிதற்றல்களாலும் பத்ரபூரணம் செய்யமுடியுமேயல்லது ஒன்றுக்கும் நேர்நின்று விடைதர முடியாதன்றே. நாவகாரியத்தில் விட்டுனுசித்தனென்று காண்கிறதென்று கணக்காண்கிறதந்தோ இது. நாவின் காரியமறியாதே நாவகாரியமொன்றே அறிந்திருக்குமிது இந்த ககநாரவிந்தத்தை எதற்காகச் சூடப்பார்க்கிறது. விட்டுனுவென்று ஒரு ஸ்ரீகோஶத்திலும் காணக்கிடைக்காது. கிடைப்பதாகவே வைத்துக்கொள்வோம். ஓலையேடுகளுட்பட எல்லாவற்றிலும் எத்தனையோ பிழைகள் புகுந்திருப்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். இல்லாத பிழைகளையும் இது ஏறிட்டுக் கூறட்டும். இவற்றால் இது என்ன ஸாதிக்கமுடியும்? அநுபந்தத்திலேயே மற்றொன்று மெழுதுகிறது—"இனி இவற்றைப் பற்றி ஏதாவது கோணலாக ஒன்று கூற முயன்று அதற்குப் பலனாக ப்ரஹாரங்களைப் பெற்றுக்கொள்ளும்" என்று. இனி சதுர்த்தோபாயமல்லது நமக்குப் புகலில்லையென்று அறுதியிட்டபடி அழகியதே. * என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந்தன்னை யகல்விக்கத் தானுங்கில்லானினி என்றாழ்வாரருளிச் செய்த கணக்கிலே நம்மை ப்ரஹரித்து முடித்திட்டாலும் நாற்றிசைக்கும் விளக்குகளாய் விளங்குகின்ற நமது எண்ணிறந்த நூல்கள் * காருள்ளளவும் கடல்நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் துர்மதங்கள் தலையெடுக்கவொட்டாதபடி தகர்த்தே தீருமென்றன்றே கீர்த்திமூர்த்தியான இஞ்சிமேட்டழகிய சிங்கர் ஸாதித்துக்கொண்டிருந்தது.

## 6. ஆபாதாஸ்திகப்ரமரோஸம்.

ஸகல ஶாஸ்த்ர ஸாகர பாரதர்சிகளான பெரியவாச்சான் பிள்ளையை இந்த பூதிகந்தி தான் தூஷிப்பதோடு நில்லாமல் வேதாந்தவாசிரியரும் தூஷித்துள்ளாரென்று காட்டப்பாடுபடுகிறது. பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தியில் பதில் கூறமுடியாததொரு ஸ்ரீபாஷ்ய விரோதத்தை ஒரு ஜடம் எடுத்துக்காட்டிவிட்டதாம். அதற்கு யாராலும் மறுப்புரைக்க முடியவே முடியாதாம். ஒரு மூலையில் மறைந்திருந்த அந்த ஸ்ரீபாஷ்ய விருத்த விஷயத்தை வெட்டவெளிச்சமாக்கிவைத்ததுதான் ப்ரபந்தஸார தத்வஸாராதி க்ரந்த ப்ராதுர்ப்பாவ

பலனும். பெரியவாச்சான் பிள்ளை க்ரந்தத்தில் இத்தனை விருத்தமாக ஒரு விஷயம் கூறப் பட்டிருப்பதாக ஜடம் எடுத்துக்காட்டியதைக்கண்டு தானும் சோகித்ததாமிந்த பூநிகந்தி. இந்தவாய்க்கோட்டம் தெரிலையும்படி காணிரினி.

ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ ஸூக்திவிருத்தமாகப் பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்திருப்ப தாகச் சொல்லப்படுகிறவிடத்தில் ஸ்ரீபாஷ்யகாரருடைய எந்த ஸ்ரீ ஸூக்தியோடு எவ்வித மான விரோதமுளது? என்பதை நிரூபித்துக்காட்டுவதன்றோ பண்டிதலக்ஷணம். ஸ்ரீபாஷ்ய கார ஸ்ரீஸூக்திகளுக்கு ஸர்வாத்மநா வைதேஶிகரானார்க்கு இது எப்படி இயலும்? * முன் னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசுமாசிரியர்களின் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளிலே பூர்வாசார்ய ஸூக்தி விரோதமென்பது ஒரு மூலையிலும் தலை காட்டமாட்டாதென்பது திண்ணம். ஸ்ரீ வைகுண்டகத்யத்திலே,

"स्वसंकल्पमात्रावक्लृप्तजगज्जन्मस्थितिध्वंसादिके श्रीमति विष्वक्सेने न्यस्तसमस्तात्मैश्वर्यम्'

என்று எம்பெருமானை விசேஷிக்கிறார் பாஷ்யகாரர். இங்கு ஸேநாபதியாழ்வான் பக்கலிலே ஸமஸ்தமான ஆத்மைஶ்வர்யத்தையும் வைத்தருளியிருக்கிறானெம்பெருமான் என்றிவ்வளவு ஸாதித்தாலே போதுமாயிருக்க * ஸ்வஸங்கல்பமாத்ரேத்யாதி விசேஷண மிட்டருளினது ஏதற்காகவென்று பார்க்கவேணும். இந்த விசேஷணார்ஹதை ஸேநாபதியாழ்வானுக்குண் டென்று ஸ்ரீ பாஷ்யத்திலுள்ளதோ? "அவர் நித்யஸூரியாகையாலே கூடும், முக்தாத்மாக் களுக்குக் கூடவே கூடாது" என்கிறோமென்னில்; நித்யர்களுக்கொருவிதம், முக்தர்களுக் கொரு விதம் என்று எந்த ஶாஸ்த்ரத்திலும் வகுக்கப்பட்டிருக்கவில்லை. ஆகவே, அந்த வாதம் பொருந்தாது. கத்யத்தில் ஸ்வாமி ஜகத்வ்யாபாரத்தை ஸேநாபதியாழ்வானிடத்தில் ஃலோபஹிதமாக ஸாதித்திருக்கிறாரே யொழிய ஸ்வரூப யோக்யதாரூபமாக ஸாதித்திருக்க வில்லை. தாவந்மாத்ரமாக ஸாதித்திருக்கிற பெரியவாச்சான் பிள்ளை ஸூக்தியிலே பகவத்பாஷ்யகார ஸ்ரீஸூக்தி விரோதம் எங்ஙனே வந்து புகும்? கத்ய ஸ்ரீஸூக்தியை நிர்வஹிக்கிற புடையிலே பெரிய வாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தியையும் நிர்வஹிக்க என்ன குறை? * भाष्यादिग्रन्थलेशोऽप्यवहितमनसाम् पेदमर्थ्यं भजेत * என்று வேதாந்தவாசிரியர் கூறின கணக்கிலே இங்கு சிரமப்படவேண்டிய அருமையுமில்லை. "एकग्रन्थशकलास्वारस्यं बहुग्रन्थस्वारस्याय ग्राह्यम्" என்னவேண்டிற்றுமில்லை. ஸமந்வயஸரணியை அணுமாத்திரமு மறியாதே அஸஹ்யாபசாரப்படுகுழியிலே விழுந்தவிதற்கு ஒன்று நினைப்பூட்டுகிறோம். (அதாவது) தேவப்பெருமாளுக்கு ஆழ்வார் பாடல் கிடையாதென்று கூசாது எழுதிவைத்த சேட்லூரார்க்கு வக்தவ்யங்களையெல்லாம் சொல்லிமுடித்து,

"काञ्चीं वीक्ष्य हनू निजे फलफलात्काराद्घनैस्संस्क्रियात्'

என்னப்பட்டது. தலைவிதியேயென்று அங்ஙனே செய்து போந்தாரவர். இதுவும் அங்ஙனே செய்து போந்தாலொழிய உய்யும் விரகில்லை.

## 7. சாஸ்த்ரஜ்ஞாந தாரித்ரியம் எந்த கோஷ்டியில்.

உலகில் ஸ்வைரிணியா யிருப்பவள் மஹா பதிவ்ரதைகளை யெல்லாம் ஸ்வைரிணிகளாக கோஷிப்பது எங்குங் கண்ட வியல்பு. அந்த ரீதியிலே ஜ்ஞாநலவ துர்விதக்தமான விது இக்காலத்தவர்களை [அஸ்மதாதிகளை]ப் பழிப்பதோடு நில்லாமல் "நம்பிள்ளை முதலான ஆசாரியர்கள் ஶாஸ்த்ரஜ்ஞான ஶூந்யர்களா யிருந்தார்கள். கேவலம் ப்ரபந்த ப்ரவசநத் தோடு நின்றிருந்தார்கள்" என்று கை போனபடி யெல்லாம் எழுதிக் கொண்டு கிடக்கிறது. திருக்குருகைப் பிரான் பிள்ளான் எவ்வளவு சாஸ்த்ரஜ்ஞர்? கிடாம்பி யப்புள்ளார் எத்

தனை சாஸ்த்ரஜ்ஞர்? இவர்கள் என்னென்ன க்ரந்தங்களெழுதினர்கள்? யார் யார்க்கு என்னென்ன சாஸ்த்ரங்கள் ப்ரவசநம் செய்தார்கள்? திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் யார் யாருக்குச் செய்தார்? அவருடைய ஸ்ரீபாஷ்ய ·ஜ்ஞானத்தையோ இதர சாஸ்த்ராவகாஹந ஸம்பத்தையோ அளந்தறிய அளவு கோல் ஏதாவது வைத்திருப்ப துண்டோ? சாஸ்த்ரஜ்ஞான மற்ற ஆசார்ய பரம்பரை நம்பிள்ளை முதலாக என்று சொல்லு வானேன்? எம்பார் முதலியாண்டான் முதலானவர்களையும் பிடித்திழுக்கலாமே. ஆளவந் தாருடைய திருவடிகளான திருமலை நம்பி திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டான் முத லானுரையும் பிடித்திழுக்கலாமே. நம்பிள்ளையின் ஆசார்யரான நஞ்சீயரையும் பிடித்திழுக் கலாமே. அவரும் தமிழ்ப் பாட்டு வியாக்யானம் தவிர வேறு என்ன செய்தார்? கூரத் தாழ்வானையும் பிடித்திழுக்கலாமே. அவர் தாம் பஞ்சஸ்தவ மென்று ஏதோ சில சுலோகங் களை யெழுதி வைத்தாரே யொழிய உத்க்ரந்த மென்ன எழுதிவைத்தார்? இத்தகைய வாதங் களும் இந்த துராக்ரஹி ஜடமதிகளின் திட்டுச் சுவடிகளில் க்ரமேண வெளி வந்தே தீரும்.

முநித்ரய வகுப்பில் முதல்வராய் நின்ற வொருவர் ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு வியாக் கியானம் செய்யப் புகுந்து அசடு பிசடாக எழுதிவைத்து நம்மிடம் அகப்பட்டுக் கொண்டு திண்டாடின திண்டாட்டம் ஏழேழ் பிறவிக்கும் யார்க்கும் மறவாது. த்வயத்தில் வரணாறு என்றிருக்கவேண்டுமென்று ஆபத்தி கொடுத்த ஆச்சான் பிள்ளையை தூஷிக்கிற ப்ரகரணத் தில் “समस्यमानपदार्थसंबन्धिलिङ्गवचनानां प्रधानमात्रानुसारित्वात् सामात्यो राजा वदतीति प्रयोगो न तु वदत इति” என்பதாக வொரு வார்த்தை எழுதிவைத்து சாஸ்த்ரஜ்ஞர்கள் பரிஹஸிக்க நின்ற கதை ஒரு பெரிய புராணமல்லவா? சாஸ்த்ரஜ்ஞான லவலேசமுமில்லாமையைக் கையிலங்கு நெல்லிக்கனியாக்கவல்ல அந்த ஸமஸ்யமாநேத்யாதி பங்க்தியை ரக்ஷிக்கவேணு மென்று பாடுபட்டவர்கள் ஒருவரிருவரல்லரே. ஒரு திருத்தேரிழுக்கப் பர்யாப்தர்களான பண்டிதர்களன்றோ பாடுபட்டார்கள். கடைசியாக நம்முடைய ஸஹஸ்ரநாமநாக்ஷீ வெளா-ஷ்வவிம்ஶமென்கிற இருநூறு சுலோகங்கள் கொண்ட [உரையோடுங் கூடின] க்ரந்த மன்றோ அத்தனை பேர்களையும் “நின்ற சூரரென் செய்தார்?” என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்திற்கு இலக்காக்கி வைத்தது. ஆங்காங்கு ப்ராகார கோபுரமண்டபங்கள் எப்படி அழியாவோ அப்படியே இந்த ஸஹஸ்ரநாமநத்யாதி அசட்டு வார்த்தையும் அழியாது. ரஹஸ்யத்ரய ஸாரவியாக்கியானத்திலன்றோ இது இடம்பெற்றுவிட்டது. ஶாஸ்த்ர ஜ்ஞாநலவலேஶரஹிதருடைய இந்த வாக்கியம் பரமபாவநமான ஸாரஶாஸ்த்ரத்தில் புகுந்திருக்கத்தகாதென்று அதை நீருக்கி யொழிக்கவேண்டியிருக்க, அதை ஸமர்த்திக்கிறே மென்று திரண்ட பண்டிதர்களுக்கும் ஶாஸ்த்ரத்திற்கும் என்ன ஸம்பந்தமோ தெரிய வில்லையே. ஸ்ரீமந்நாராயண சரணௌ என்ற ப்ரயோகத்திற்கும் ஹாஹாதேவராஜாவதி என்ற ப்ரயோகத்திற்கும் என்ன ஸம்பந்தமென்றுகூட விமர்ஶிக்கமாட்டாத இந்த வகுப் பினர் பெரிய ஶாஸ்த்ரஜ்ஞர்களாம். அது கிடக்கட்டும். இந்த பூதிகந்தியையே யெடுத்துக் கொள்வோம். சிறிய திருமடலில் பொன்பெயரோனென்றவிடத்து நமது திவ்யார்த்த தீபிகையில் ‘இது லக்ஷிதலக்ஷணை’ என்று எழுதினேம். அதைக்கண்டவிது “இங்கு லக்ஷிதலக்ஷணைக்கு இடமில்லை; அன்னநடையாள் என்பது போன்ற சொல்இது” என்றெழுதி வைத்தது. இதைப்பற்றி நமது உபதேசவிம்ஶதியில் (பக்கம் 10-ல்) “மிகவும் ஶோசநீயங்க ளான மருள்கள்” என்ற மகுடத்தின்கீழ் இதனுடைய ஶாஸ்த்ரஜ்ஞான தாரித்ரியத்தைப் பரக்க உபபாதித்திருக்கிறேம். அதைப்பற்றி ஏதாவது வாய் திறந்ததுண்டோவிது. அல்ப ஜ்ஞானமுடையவன்கூட எழுதமாட்டாத அபத்தங்களை யெழுதிவைக்குமிது தன்னளவறி யாமல் மஹாசார்ய ஸார்வபௌமர்களை ஶாஸ்த்ரஜ்ஞானமில்லாதவர்களென்று பதினுயிரங்

தடவைதானெழுதிவைக்கட்டுமே. இதைக் கொட்டை யெழுத்திலச்சிட்டுத் தன்னுடல் முழுவதும் ஒட்டவைத்துக்கொண்டு திரியட்டுமே. வேதாந்தவாசிரியர் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராயிருந்ததனால் இதற்கென்ன வந்தது. அவருடைய ஸூக்திகளை அஸமஞ்ஜஸ மென்று தூஷித்தவிது 'அப்படி நான் தூஷித்ததில்லை' என்று சொல்லிக்கொண்டு முன்வர மாட்டாது அந்த ப்ரஸ்தாவத்தையே தொடாமல் விட்டுவிட்டு அநவஸரங்களானவற்றை யெழுதிக்கொண்டு போவதனால் என்னாகும்?

## 9. ஸ்ரீமாந் ஸ்ரீரங்கநாதார்ய:

"ஸ்ரீமாங் ஸ்ரீரங்கநாதார்யோ வேதாந்தத்வயகேஸரீ. முநி: காந்தோபயந்தா மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி" என்றொரு ச்லோகத்தை ஸ்ரீமாங் வேங்கடநாதார்ய ச்லோகச் சாயையில் தென்கலையார் கல்பித்திருப்பதாகவும், இதுபோலவே ராமாநுஜதயாபாத்ரச் சாயையில் ஸ்ரீசைலேச தயாபாத்ரம் கல்பித்ததாகவும் எழுதுகிறது பூதிகந்தி. இதைப்பற்றி நாம் பலகால் எழுதியேயிருக்கிறோம். अत्र संक्षिप्यते ॥ பெங்களூர் துலஸீ தோட்டத்திலிருந்த தூப்புல் வெங்கடாசாரியரென்னும் வடகலை ஸ்வாமி புஸ்தக வியாபாரி. அவர் பெரிய சிறிய ஸ்தோத்ரபாட புஸ்தகங்களைத் தெலுங்குலிபியில் அச்சிட்டார். தென்கலை ஸ்தோத்ரங்களுக்குத் தலைப்பில் "ஸ்ரீமாங் ஸ்ரீரங்கநாதார்ய:" இத்யாதி ச்லோகத்தை அவர் நிருமித்து அச்சிட்டார். எதனால்? தென்கலையார்க்கு உகப்பாயிருக்குமென்றும், அவர்களெல்லாரும் விரும்பி விலைகொடுத்து வாங்குவர்களென்று முண்டான ஆசையினால். இவ்வளவே யொழிய, இந்த கல்பனையில் தென்கலையாருக்கு அந்வய லேஶமுமில்லை. தென்கலையார் அச்சிட்டுள்ள பரச்சதக்ரந்தங்களில் ஒன்றிலாவது இந்த கல்பித ச்லோகத்தைக் காட்ட முடியுமா இதனால்? எங்கேனும் ஒருவராவது அநுஸந்திப்பதுதானுண்டா? சில பாமரர்களை வஞ்சிக்கவன்றோ பூதிகந்தியால் இது எழுதப்பட்டது. தேசிக ரஹஸ்ய க்ரந்தங்களுக்கும் ராமாநுஜாபாத்ரத்துக்கும் ஸம்பந்தமே கிடையாதென்று ஒப்புக்கொள்ளுகிற எதிர் வகுப்பினரில் தர்சனதுரந்தரராயிருப்பவர்கள் ராமாநுஜாபாத்ரத்தை நுழைத்து அச்சிட்டிருக்கிற அவலக்ஷணத்தை நாம் எடுத்துக்காட்டி இவர்களை வாய்மாளப்பண்ணினது போல, இவர்களும் ஸ்ரீமாங் ஸ்ரீரங்கநாதார்ய: என்கிற கல்பித ச்லோகம் நுழைக்கப்பெற்ற தென்கலை ஸம்பிரதாய ஸ்ரீகோஶமொன்றையாவது இது எடுத்துக்காட்டி நம்மை வாய்மாளப் பண்ணட்டுமே. அதற்கு வழி ஏது? யாரோ வழிப்போக்கர்கள் செய்கிற காரியங்களைக் கொண்டுதானே இது பாமர ப்ரதாரணம் செய்யப் புறப்படுகிறது.

இந்த ப்ரஸங்கத்தில் (பக்கம் 92-ல்) "நமோ ராமாநுஜார்ய முதலானவற்றின் ஸ்தானத்தில் வெவ்வேறு ச்லோகத்தையும் பாட்டுக்களையும் செய்து நுழைத்தனர்" என்றெழுதியுள்ளது. கேளீர்! கேளீர்!! கேளீர்!!! பிறர் (அல்லது நவீநர்) செய்திருக்கிற கல்பனைகளையெல்லாம் நாம் கண்டுபிடிக்கத் தொடங்கினபோது இந்த *நமோ ராமாநுஜார்யாய ச்லோகமே நமக்குப் பெரிய கைவிளக்காக வுதவிற்று. மணவாளமாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையின் அத்விதியதனியனை *நம: ஸ்ரீசைலநாதாய ச்லோகத்திற்குப் போட்டியாக நவீநர்களால் இந்த நமோ ராமாநுஜார்யாய ச்லோகம் தேசிக குருவின் தனியனாகக் கல்பித்து நுழைக்கப்பட்டது. கிடாம்பியப்புள்ளாரென்னும் அந்த குருவின் தனியன் இதுவன்று என்பதும், அது ப்ரஹ்மாண்ட ச்லோகமென்பதும் விச்வவிதிதம். அந்த ச்லோகத்தைத் தள்ளி இந்த புது ச்லோகம் புகுத்தப்பட்டிருக்கின்றது. அப்புள்ளார் உயிரோடிருக்குமளவும் இந்த ச்லோகம் தலைகாட்டினதில்லை. அவர் மறைந்த வெகு

நாளைக்குப் பிறகு இந்த அநுஷ்டுப்பு தோன்றவேண்டிய காரணமென்ன? இதை நாம் பல தடவை கேட்டிருக்கிறோம். இதற்கு ருஜுவான விடை வெளிவந்துவிட்டால் அன்றோ அந்த க்ஷணத்திலேயே இந்தத் தொல்லை விவாதம் தொலைந்திடுமே. உயிரான விஷயங்களுக்கு உத்தரமுரைக்க வழியில்லாமல் வீண் வம்பு விஷயங்களில் வீண் விரிவு செய்து போரும் பூதிகந்திக்கன்றோ லஜ்ஜையும் மானமும் பீதியுமில்லாமை.

## 10. ஸ்ரீமத்வரவரமுநிசதகத்தில் ச்லோக விசேஷம்.

ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தனியன் அழகிய மணவாளனருளிச் செய்ததன்றென்றும் வேறொரு சிஷ்யர்ஸாதித்ததாக எறும்பியப்பா ஸாதித்த வரவரமுநிசதகத்திலேயே ஸ்பஷ்டமாக விளங்குகிறதென்றும் எழுதுகிறது பூதி. இது ஏழு வருஷங்களுக்கு முன்னமே முடிந்துபோன ஸம்ப்ரதாய ப்ரதிபச் சுவடியிலும் ஏறிக் கிடந்தது. அப்போதே ஸ்ரீ உ.வே. S. ராகவையங்கார் ஸ்வாமியினால் கண்டிக்கப்பட்டுமொழிந்தது. அதையே இங்கெடுத்துக் காட்டுவோம்.

"எறும்பியப்பா ஸாதித்த வரவரமுநிசதகத்தில் * "आचार्यत्वं तदधिकमिति ख्यातमाम्नायमुख्यैः एष श्रीमान् भजति भगवानीश्वरत्वं विहाय। मन्त्रं दाता वरवरमुने मन्त्ररत्नं त्वदीयं देवः श्रीमान् वरवरमुनिर्वर्तते देशिकत्वे ॥" என்றிருக்கிற ச்லோகத்தை யெடுத்து இவர் (பக்கம் 21-ல்) ஏதோ எழுதுகிறார்—இந்த ச்லோகத்திற்கு தாம் ஒரு அர்த்தம் எழுதி "இதுதான் இந்த ச்லோகத்திற்கு அர்த்தம்; வேறுவிதமான அர்த்தம் ஒரு பண்டிதராலும் சொல்லமுடியாது. ஸ்ரீவரவரமுனிகளின் சிஷ்ய வர்க்கத்தில் வரவரமுநியென்றே திருநாமமுடைய ஒரு சிஷ்யரிருந்தார்; அவர் செய்தது ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தனியன்—என்றுதான் இந்த ச்லோகத்தினால் ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிறது. இவ்வுண்மையை யறியாமல் ஜடர்கள் பொய்யான வொரு ஐதிஹ்யத்தைக் கல்பனை செய்திருக்கிறார்கள்" என்று கைபோன போக்கில் எழுதியிருக்கிறார். வரவரமுநிசதகத்திற்கு ஜீயர் நயினாரும், திருமழிசை அண்ணாவப்பங்காரும் ஸாதித்த வியாக்கியானங்களிருக்கின்றன. அவற்றைக் காணகில்லாமல் இவர் "வஹ்நிரெவாதா ஸரேபோயெள வக்தும் நெவ ஶக்யதெ" என்கிறார். மணவாள மாமுனிகளின் திருவடி பணிந்த சிஷ்யர்களில் வரவரமுநியென்று ஒரு சிஷ்யரிருந்ததாக யாராவது எழுதியிருப்பதுண்டா? எங்கேனும் கேட்டதுண்டா? பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "ஸ்ரீரங்காந்தர் மந்திரம் திப்ர சேஷம் ஸ்ரீபூமீதத்ரம்ய ஜாமாத்ருகர்ப்பம்" என்கிற ச்லோகத்தில் அழகிய மணவாளனான ஸ்ரீரங்கநாதனையே ரம்யஜாமாதாவென்கிறார். "வையம் தொழப்படும் முனியை" என்கிற திருநறையூர்ப்பாசுரத்திலும் "முனியே நான்முகனே முக்கண்ணப்பா" என்கிற பாசுரத்திலும் எம்பெருமானே முனியென்னப் படுகிறான். ஆக ரம்ய ஜாமாத்ரு முனியென்பதும் வரவரமுநியென்பதும் அழகியமணவாளனையே யாயிற்று. இவனே மணவாளமாமுனிகளுக்கு சிஷ்யனும் உலகுக்கெல்லாம் ஆசார்யனும் ஆனான். இவரெழுதுகிற விவரணத்திலிருந்தே இந்த உண்மைப் பொருள்தான் விளங்குகிறது. எதையும் இவர் விபரீதமாகவே க்ரஹிக்கிறார். ஸ்ரீ ஸ்வாமியினுடைய அரிய பெரிய வியாஸங்களினால் அவையெல்லாம் நிரஸநம் பெறுமென நம்புகிறேன். இப்படிக்கு தாஸன் S ராகவையங்கார்."

ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தனியன் திருவவதரித்தவரலாற்றை அக்காலத்திலேயே அஷ்டதிக்கஜாசாரியர்கள் பெரும்பாலும் வடமொழி தென்மொழி நூல்களினால் வெளியிட்டுள்ளார்கள். ராமாநுஜாபாத்ரத்தைப் பற்றி நவீநர்கள் நிருமித்த சுலோகம் அபத்தஸங்குலமென்பது பிஷ்டபேஷணம்.

# பூதிகந்தி புஷ்ப ப்ரஹார ஸப்ததி

ப்ரணசநமென்னுமிந்நூலின் இடையில் இங்ஙனே யொரு ஸப்ததி அமைகின்றது. ஒரு ப்ரஹாரமும் தாங்கமாட்டாத துர்நாற்றப் பூவின்மேல் ஸப்ததி ப்ரஹாரமிடுவது சால தர்மஹானியே. ஆயினும் ஸப்ததியன்று; ஆயிரமிட்டாலும் போதாது போதாது. ஆனாலும். எழுபதேயிடப்படுகின்ற திங்கு பூதபவிஷ்யத் வர்த்தமாந ப்ரஹாரங்களெல்லாவற்றையும் சேர்த்துக் கணக்கிட்டால் ஆயிரத்திற்கு மேலும் தேறும்.

1. தேசிகவந்தன மாலிகை-7. என்று தலைமேல் காண்கிறது. (1). கோதைபோலும். (2) ஸர்வசக்தி. (3, 4) ஸஜ்ஜனாராதனம். (5) ஸம்ப்ரதாயப்ரதீபம். (6) விவேக பாரிஜாதம். என்று மற்ற ஆறுமாலிகைகள் தெரிவிக்கப்படுகின்றன. ஒருவர் 10, 12, 15 பிள்ளைகளும் பெறலாம். அடுத்த க்ஷணத்திலேயே அத்தனையும் மாண்டு போனால் முடிந்து போனவற்றை உள்ளனவாகக் கணக்கிடுவரோ தந்தை? மக்கட் பேச்சுவந்தவாறே கண்ணுங் கண்ணீருமாய் நின்று கதறியன்றோ அழுவர்.

2. கீழிலவை ஆறும் உத்பந்நவிநஷ்டம். ஏழாவதாகக் கணக்கிடப் பெற்ற தி ம்ருத ப்ரஸூதம். வித்வான்களாயும் விவேகிகளாயுமுள்ளவர்கள் ஒன்றையும் மறவாதே நிச்சலும் நினைவில் வைத்துக்கொண்டிருப்பதால் இங்குநாம் பன்னியுரைக்க வேண்டுமோ? 'கோதை போலுமாராய்ச்சி', 'வம்பவிழ் கோதை தத்துவம்' முதலான நமது நூல்களினால் அன்றே மடிந்தொழிந்தது, "கோதைபோலும்" என்பது. அத்புத சக்தியினால் மாண்டொழிந்தது ஸர்வசக்தி. சாஸ்த்ரார்த்த சந்திரிகையினால் முடிந்து போனது துர்ஜநாராதனம். ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரத்ரயத்தினால் அணைந்து போனது ஸம்ப்ரதாயப்ரதீபம். பாரிஜாதாபஹரணம் முதலியவற்றால் முடிந்து போனது அவிவேக பாரிஜாதம். துர்க்கந்த தாரீகரணத்தால் தொலைந்தொழிந்தது தெரிந்தேயிருக்கிறது. மருத்துவர்கள் தங்களிடம் சிகித்ஸைக்கு வந்தவர்களை யெல்லாம் கணக்கிடுவர்களாம்; அதில் பிழைத்தவர்கள் ஒருவருமில ரென்பதை யுணர்ந்தவர்கள் அதைப்பற்றிக் கேட்டால் "ஏனய்யா! விதிமாண்டு போனால் யார்தாம் என்ன செய்ய முடியும்? நீங்களே சொல்லுங்கள்" என்பர்களாம். அதே பேச்சுத்தானிங்கும்.

3. நம்பிக்கைத்ரோஹ மென்பது அசக்த துர்ஜந பாஷிதம். அவரவர்களின் கோரிக்கையின்படி செய்வது ஒருகாலும் நம்பிக்கைத்ரோஹமாகாது. ஹயக்ரீவ நிரவக்ரஹாநுக்ரஹ கனமான வொரு பெரிய மடம் காலக்ஷேபப்ரவசனத்தில் கொண்டிருப்பதும், அபேக்ஷகர்களுக்கு விக்ரயிப்பதும், பண்டிதர்களுக்குப் பரிசளிப்பதுமான ஸ்ரீகோசத்தை அப்ரமாண மென்பது அஸூயாஜாட்யம். கையும் களவுமாகப் பிடிபடுகையும் ஜிஹ்வோத்பாடநேந ம்ருத்யுவச மாவதும் பூதிகந்திக்கே ப்ராப்தம். பெரிய பரகாலஸ்வாமி பணித்தது திருவாய்மொழிக்குப் பதினெண்ணாயிரப்படி யொன்றே. அதுவும் ஈட்டு ஸ்ரீஸூக்தி ஜடிலம். சிலவிடங்களில் ஸொந்த வாக்யங்களுண்டாகில் அவை உபாலம்ப மொழிய வேறல்ல. திருப்பல்லாண்டு உரை, திருப்பாவையுரை முதலியன சாமா திருமலைதாதா சாருடைய கைச்சரக்கு. இதெல்லாம் ப்ரமாண புஞ்ஜஸநாதம். இத்தத்துவங்களெல்லாம் ஸமயே அவசியம் வெளியாம்.

4. நியமபங்க மென்பது ஸாமாந்ய சப்தம் ; ப்ரக்ரமபங்க மென்பது விசேஷ சப்தம். விஷயத்தை யெடுத்து விவரித்துக் காட்டினலன்றோ வாசகர்களுக்கு விளங்கும். வக்தாவுக்கு நெஞ்சிலுமில்லாத வொரு நியமத்தைக் கற்பனை செய்ததற்காக (பூதி) அநுபவிக்க வேண்டியபலன் அநுபவித்தாயிற்று. போதும்.

5. பந்து என்கிற வ்யவஹாரத்திற்கு ஸம்ப்ரதாய பரம்பரையே நியாமகம். பெரியாழ்வார் திருமொழியில் ஐந்தாம்பத்து என்னும் வ்யவஹாரத்தையும், பெரிய திருமொழியில் பதினேராம்பத்து என்னும் வியவஹாரத்தையுமுணர ப்ரஸக்தியில்லையே பூதிக்கு. ஸர்வாத்மநா ஆழ்வார் கோஷ்டீ பஹிஷ்டமான பூதியின் பத்ர பூரணமே பலனை துச்சவிஷயங்களை வெகு தூரத்தில் தள்ளித் தொலைப்போம்.

6. வேதத்தில் *யத்வை கிஞ்ச மநுரவதத்* என்றும் *ஸஹோவாச வ்யாஸ : பாராசர்ய:* என்றும், *ப்ரஹ்மவாதிநோ வதந்தி * என்றும் * அதோ கல்வாஹு: * என்றும் மநுவ்யாஸாதி நாமங்களாலே தெரிவிப்பவை யெல்லாம் வேத புருஷனுடையனவே யென்றும், திருவாய்மொழியில் தாய்பாசுரமாகவும் தலைவி பாசுரமாகவும் தோழி பாசுரமாகவும் வருவன வெல்லாம் ஆழ்வார் பாசுரமேயன்றி வேறெவர் பாசுரமல்ல வென்றும் உண்மை கண்டுபிடிக்குமா போலே, மாம்பலம் ஸ்வாமி, கோவைஸ்வாமி, கோயில்ஸ்வாமி இத்யாதி நாமங்களாலே வருமவையெல்லாம் காஞ்சீஸ்வாமியுடையனவே யென்று அபூர்வமாகக் கண்டறிந்து வெளியிட்ட மஹார்த்தத்திற்குக் கண்ணெச்சில் வாராமே கற்பூரம் கொளுத்திப் போடவேண்டும்.

7. நேற்றுமார்கழித் திங்களில் சென்னையில் மஹத்தான மத்வஸபை நடந்த போது அதில் உபஸ்திதரான வொரு மத்வ வித்வத்வரேண்யர் நம்முடைய ப்ரபந்த ஸாரதத்வஸாரத்தை முழுதும் வாசித்துக் கண்டபாடமும் செய்திருந்தவர் அதில் முகப்பில் நாமமெழுதியிருந்த வொரு கதைக்குச் சார்பாகத் தாமொரு கதை சொன்னர்; (அதாவது) ஜாதியில் தட்டானை வொருவன் ஜாதிவ்ருத்தியால் பிழைக்க வழியில்லாமல் மத்வ ப்ராஹ்மணனென்று சொல்லிக்கொண்டு ஒரு ஜட்ஜ் ப்ரபுவினிடம் வந்து சேர்ந்து தளிகைத் தொழிலில் அமர்ந்தானும். பலவருடங்களாய்விட்டன. அவரும் இவனை ப்ராஹ்மணனென்றே நம்பி ச்ராத்தக்ருத்யங்களிலும் நித்யபூஜாதிகளிலும் கைக்கொண்டு வருகிறார். இப்படி காலம் கழிகையில், பெரிய பொன்னகையொன்று செய்விக்க விரும்பிய ஜட்ஜ் ஒரு தட்டானை வரவழைத்துத் தம் மனையிலேயே தாமும் ஸதா கூடவேயிருந்து வேலை செய்விக்கிறார். பொன்னையெடுத்துக்கொண்டு செப்பைக் கலந்து விடுவது தட்டானுடைய இயல்பாதலால் அங்ஙனம் நிகழாமைக்காக ப்ரபு கூடவேயிருந்து வருகிறார். தீர்த்தம் பருகுவதற்காகச் சற்று உள்ளே போனஸமயத்தில் (ஒரு நொடியில்) தட்டான் செப்பைக் கலந்து அடிக்கிறான். அந்த அடியானது மாத்வவேஷம் பூண்ட தட்டாரச் சமையற்காரனுடைய காதிலே விழுந்தவுடனே அவன் நிகழ்ச்சியைத் தெரிந்து கொண்டு ப்ரபுவைப் பார்த்து "ஓடும் ஓடும்; செப்பைக் கலந்துவிட்டான் பாவி" என்றானும். உடனே ப்ரபு தட்டானிடம் ஓடிவந்து கத்தினராம். அதுகேட்ட தட்டான் "பிரபுக்களே! நான் செப்பு கலந்தது உண்மை; ஒப்புக் கொள்கிறேன் ; இஃது தங்களுக்கு எப்படி தெரிந்தது? உள்ளபடி சொல்லவேணும்" என்றானும். 'எங்கள் சமையற்காரன் சொன்னன்' என்று உள்ளபடி தெரிவித்தார் பிரபு. தயவுசெய்து அந்த சமையற்காரனை இப்படி கூப்பிடுங்க ளென்றான் தட்டான். பிரபு அவனைக் கூப்பிடுகிறார். அவனோ தயங்குகிறான்; கடைசியாக அவன் வெளியே வரவேண்டியதாயிற்று; தட்டானெதிரில்வந்து நின்றவுடனே "அட மாணிக்காசாரீ! நீ இங்கே எப்போது வந்து சேர்ந்தாயப்பா!" என்று தட்டான் கேட்க, இனி நாம் இங்கிருந்தால் மஹத்தான அபாயமாகுமென்று தெரிந்து கொண்டவன் ஒன்றும் பேசாதே கன வேகமாக ஓடி யொளித்தானும். பொன்னில் செப்பு கலந்து அடிக்கப்படுகிற தென்பதை

ஜாதித் தட்டானொருவன் தவிர வேறுயாரும் தெரிந்து கொள்ள முடியாதென்பது இங்கு மருமம். இக்கதையை அந்த மாத்வ பண்டிதர் நம்மிடம் சொன்னபோது 'இதை எதற்காகச் சொன்னீர்கள்?' என்று கேட்டேன்; அதற்கு அவர் சொன்னார். தங்களுடைய ப்ரபந்தஸாரதத்வஸாரத்தின் முதற்பேஜில் உள்ள கதையைப் பார்த்திருந்தேன்; அதைவிட இக்கதை ரஸகனமாயிருக்கும் என்று சொன்னேனென்றார். பிரபந்தஸாரத்தின் கதைக்கு இது மிகப் பொருத்தமான கதை தானென்று உகந்தேன். இதை யெழுத அவகாச மளித்ததற்காக நம் பூதிகந்திக்குப் பெருநன்றி பாராட்டவேண்டியது அவசியம்.

8 உபதேசரத்தின மாலையில் "மன்னியசீர் வெண்பாவில் வைத்து" என்றிருப்பதைப் பற்றிக்கொண்டு இதனால் பிரபந்தசாரம் முன்னேயிருந்தமை நன்கு காட்டப்படுகிறதென்று பூதியெழுதியிருப்பது சிறந்த மேதா விலாஸம். பாட்டைப் பார்க்கும்போதே வெண்பாவென்று தெரியுமாதலால் அதைத் தாம் கூறவேண்டியதில்லையன்றோ என்கிறது. பாசுரத்தைப் பார்க்கும்போதே தமிழென்றும் அந்தாதியென்றும் எளிதாகத் தெரியவாரா நிற்க, (தமிழ் மாலை—செந்தமிழ்பத்தும்—அந்தாதியிவை பத்தும்) என்றிப்படி எதற்காக அருளிச் செய்தார்கள்? அதிகரண ஸாராவளி பார்க்கும்போதே ஸ்ரக்தரையென்று தெரிந்திருக்க (ஸ்ரக்தராதுக்தராபிஃ) என்று ஏதுக்குச் சொன்னார்? என்றிப்படி பல கேள்விகள் கேட்க நேர்ந்தால்; 'முழிக்கிறானே முழியாஞ்சகார' என்னுமத்தனை தானே பூதிகந்திக்கு.

9. ப்ரபந்தசாரத்தின் மீது உள்ளபடி யெடுத்துக் காட்டப்பட்ட அவத்யங்களெல்லாம் அபேத்யமாயிருக்கின்றனவே யென்கிற வயிற்றெரிச்சலால் உபதேசரத்தினமாலையின் மீது தோஷோத்பாவனங்கள் செய்தது ஸரி. அந்த உத்பாவனத்தோடு நின்றிருந்தால் கௌரவமாகவே யிருக்கும். "நாம் இப்படி வழியல்லாவழியில் அடி வைத்தோம்" என்று தன்னுடையது அக்ருத்ய மென்பதைத் தானே வெளியிட்டுக்கொள்வதும், "இவற்றுக்கு ஸமாதானம் கூற ஸமயம்வந்தபோது நாமே முன் வருவோம்" என்று, அஸமாதேயமான விஷயம் நானென்றும் சொல்லிவிடவில்லையென்றும் அசட்டுத்தனமாக எழுதி நிற்பதும் பூதிக்கே பூஷணம். அடுத்த க்ஷணத்திலேயே இவற்றுக் கெல்லாம் உரிய ஸமாதானம் வெளிவந்து விடுமேயென்று உள்ளே யுண்டான ஜ்வரமன்றோ இங்ஙனமெழுதச் செய்தது. வழியல்லாவழியிலே நாம் கால் வைப்பதுமில்லை; க்லிஷ்ட ஸமாதானமாவது சொல்லக்கூடிய விஷயங்களைத் தொடுவதுமில்லை, நெஞ்சால் நினைப்பதுமில்லை நாம்.

10. யாரோசிலர் சமதமாதி ஸம்பந்நர்களாய் கம்பீரமாக உபந்யஸித்துக்கொண்டு ஏகாந்த சீலர்களாய் "தேவகீநந்தநா! உன்ஜோலிக்கு வந்தனா?" என்று ஒருவர் ஜோலிக்கும் போகாமல் 'ராமாயஸ்வஸ்தி, ராவணாய ஸ்வஸ்தி' என்று எல்லார்க்கும் நல்லவர்களாய் இருந்து வருவதாக வெழுதுகிறது பூதி. திருவாய்மொழியில் * வாயுந்திரையுகளு மென்ற பதிகத்தில் ஆழ்வார் "நீயும் நெஞ்சங் கோள்பட்டாயே" என்றும் "யாமுற்ற துற்றாயோ" என்றும் அறியாதவற்றோ டணைந்தழுததாகச் சொல்லப்படுகிறது. அப்படி இதுவும் அவர்களைக் கட்டிக்கொண்டழுத அழுகை உலகமறிந்ததே. அதைச் சுவடியிலும் பொறித்து வைக்கவேணுமா?

11. அபஹாரசிக்ஷைக்கு சிக்ஷோபஹாரம். நிகமாந்த மஹாதேசிகனால் நிருமிக்கப்படாததும் முன்னாளிலன்றிக்கே பின்னாளில் அநிபுணகவியினால் கல்பிக்கப்பட்டதும் அபத்த சதஸங்குலமுமான ப்ரபந்தஸாரத்தைப்பற்றின நமது விவிதப்ரமாண உபபத்தி புஷ்கலமான விமர்சம் எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் வெற்றிபெற்றே விளங்குமென்பது சிலாலிகிதம். யாதுதானனுக்குப் புண்யஜநநாமதேயம் போலே அவிவேகமயச்சுவடிக்கு விவேக பாரிஜாதமென்று பெயரிட்ட வளவால் ஒரு பேறும்

பெறலாகாது. ப்ரஸூதிக்ருஹத்திலேயே மாண்டொழிந்து விராதன் பெற்றதும் பெற்ற சுவடியை ஆரும் அபஹரிக்க முடியாதென்பது அசட்டு வார்த்தை. * பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை இறைப்பொழுதில் கொணர்ந்து கொடுக்க ஒரு ஸர்வசக்தன் ஸஜ்ஜனுயிருந்தான். அன்னவனுடைய ஸங்கல்பம் இங்கு விபரீதமாகையாலே ஒழிந்தது ஒழிந்ததேயாம்.

12. திருப்பல்லாண்டு என மகுட மிட்டெழுதியவை அத்யந்த பல்பஜம். கேண்மின். ப்ரபந்தஸாரம் தேசிக க்ருதியன்று என்று நாம் சொல்வது ஸ்ரீபாஷ்யம் பகவத்ராமாநுஜ க்ருதியன்று என்று அத்வைதிகள் சொல்வதோடொக்குமென்பது பொருத்தமற்ற பேச்சு. அத்வைதிகள் ஸ்ரீபாஷ்யகாரரை ஸர்வாத்மநா விமத கோஷ்டியில் சேர்த்திருக்கையாலே அவர்கள் அப்படிச் சொன்னல் அது ஜால்ம ஜல்பிதமேயாகும். வேதாந்தவாசிரியர் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்; பூர்வாசாரியர்களின் ஸகலஸங்கேதங்களுக்கும் கட்டுப்பட்டவர். பரம்பரையாகப் பாதுகாக்கப்பட்டு வருகிற அர்த்தவிசேஷங்களிலோ அநுஷ்டான விசேஷங்களிலோ எதிலும் பிறிகதிர்ப்பட்டவரல்லர். இதை நாம் ஸ்ரீவைஷ்ணவமஹாநிதியில் (ஸ்ரீராமாநுஜன் 144ல்) ப்ராமாணிக ஹ்ருதயங்கமமாகப் பரக்க நிரூபித்திருக்கிறோம். அதனை மறுக்க சக்தியுண்டேல் முன்வருக. 'தேசிகன் ஸகல பூர்வாசாரியர்களோடும் மாறுபட்டிருந்தவரே' என்று சொல்லி ஸ்தாபிக்க வேண்டியது தலைவிதியாகு மிதற்கு. அந்யதா சரணம் நாஸ்தி. அந்த வழியில் வந்து வெற்றிபெற்று விட்டால் அத்வைதியின் சொல்லை உவமையாக்கினது மிகப் பொருத்தமேயாகும்.

13. நீதிமன்றங்களில் ஸாக்ஷியிடுவதும் சீர்பாடலில் பேர்பாடுவதும் ஜீவித்திருப்பவர்களையே யல்லது என்றைக்கோ முடிந்து போனவர்களை யல்ல. பூதிகந்தச் சுவடியில் ஸம்ப்ரதாயப்ரதீபமென்று தானென்று எழுதியிருப்பதாகக் காட்டி "அதில் கண்டு கொள்க, அதில் விசதம், அதில் எல்லாம் விரியச் சொன்னோம்" என்றிப்படி அடிக்கடியெழுதி வருகிறது பூதி. ஆம்; ஸம்ப்ரதாயப்ரதீபமெழுதினதுண்டு. அது இந்த தென்னாட்டில் தலைகாட்டாமலே எங்கேயோ மருகாந்தாரத்தில் (மார்வாடத்தில்) அஜ்ஞாதவாஸம் செய்துகொண்டிருந்தது. அப்படியே அது ஜீவித்துக்கிடக்குமென்று இதுவும் மனப்பால் குடித்திருந்தது. அல்பாயுர் ஜாதகமாகையாலே அது நமது கண்ணில் எட்டிவிட்டது. மூன்றாவது நாளிலேயே பொடிபொடியாயிற்றது. அதை மூன்று நூல்களால் தொலைத்திருக்கிறோம். (1) ஸத்ஸம்ப்ரதாயபாஸ்கரன். (2) இதே பெயருள்ள ஸம்ஸ்க்ருத க்ரந்தம். (3) ஸத்ஸம்ப்ரதாய ஸஹஸ்ராம்சு:. இதுவும் ஸம்ஸ்க்ருத க்ரந்தமே. ஆனல் முந்தினது தேவநாகர லிபியிலச்சிட்டது; இது திருப்பதி பண்டிதர்களின் கோரிக்கையினல் தெலுங்கு லிபியிலச்சிட்டது. இங்ஙனே மூன்று நூல்களினல் பாறுபாறுகித் தொலைந்த அபத்த பஞ்சாங்கத்தை இன்னமும் உயிர்த்திருப்பதாகவைத்து, 6, 7 வருஷங்களுக்கு முன்பு போனவது இப்போது யாருக்கு நினைவிருக்கப் போகிறதென்று மருண்டு பெரும்பாலும் அதிலெழுதிய பேய்த்தனமான விஷயங்களையே மீண்டும் எழுதுகிறது பூதிகந்தச் சுவடியில். ப்ரபந்தஸாரத்தைப்பற்றி யெழுத அப்போது ப்ரஸக்தியிராமையால் அது மட்டும் அதில் வரவில்லை. மற்ற விஷயங்களெல்லாம் அதுவே பாடந்தான். ராவண சோதிதனய் மாயாம்ருகவேஷம் பூண்டு வந்த மாரீசன் புதியனல்லன்; முன்னமே இருமுறை வந்து பங்கப்பட்டவனே. ஆனலும் அப்போது விதிமாளவில்லை. மீண்டும் தலைகாட்டாத படி செய்தது ஒரு ஸமயத்தில் தானே. அதுவே யாகுமிப்போது. பூதிகந்தச் சுவடியில் முக்கியமென்று ஸூத்த்யரால் மதிக்கக் கூடிய விஷயாபாஸங்களை யெல்லாம் "பாறிப்பாறியசுரர்தம் பல்குழாங்கள் நீறெழ" என்ற பாசுரக் கணக்கிலே பாறவடித் தொழிப்போம். *அப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதமே* என்னும் படியானவையே இவை.

14. வேதாந்த தேசிகன் பெருமையை எவ்வளவு விரித்துக் கூறினலும் ஏற்கும். ஸ்ரீமத் வேங்கடநாதஸ்தோத்ரம் முதலிய பல நூல்களில் நாமெழுதியுள்ள தேசிக வைபவத்திலேகதேசமும் இதனுலெழுதப்போகாது. மற்றெவருமெழுதவில்லார். தேசிக் திவ்யஸூக்திகளில் தோஷோத்பாவநம் செய்யவே பிறந்தவிது தேசிக வைபவம் சொல்லுவதானது வேச்யை ப்திவ்ரதாதர்மம் சொல்லுவதோ டொக்கு மென்று பலகாவ் தெரிவித்திருக்கிறோமாதலால் பிஷ்டபேஷணமிங்கு வேண்டா வென்று விடுப்போம். தேசிகனுடைய ப்ராமாணிகமான பெருமையை யாரும் குறைப்பதில்லை.

15. ப்ரதீபச்சுவடி (பக்கம் 3ல்) எழுதிற்று—ஆளவந்தார்*மாதாபிதா ச்லோகத்திலே நம்மாழ்வாரை நமஸ்கரித்தார். பாஷ்யகாரரோ வென்னில், எந்த காரணத்தாலோ தெரியாது. தம்முடைய க்ரந்தங்களில் திவ்யப்ரபந்தங்களைப்பற்றியோ ஆழ்வார்களைப்பற்றியோ ஓரிடத்திலும் சிறிதும் ப்ரஸ்தாவம் செய்யவில்லை" என்று. இது உலகமெலாம் போற்ற நின்ற நம்முடைய த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வக்ரந்தத்தைக் காணப்பெறுத தௌர்ப்பாக்யத்தினலாயது. பகவத் பாஷ்யகார திவ்ய ஸூக்திகளெல்லாம் அருளிச்செயல் மயம் என்றறிவதற்கு இது பிறந்திலது. தேவாலயங்களில் திவ்ய ப்ரபந்த மோதுவதை விமதர்கள் ஆக்ஷேபித்த காலத்தில் தேசிகனே மூன்னின்று ஆக்ஷேபங்களைக் கண்டித்து அதை ஸ்தாபித்து வைத்தவர் என்பது வாஸ்தவமேயாயிடுக. அதனல் இதுக்கோ இதன் வகுப்பினர்க்கோ லாபமொன்றுமில்லையே. ஒரு நடும்ஸகன் 'என்னுடைய குமாரன் டிப்டிகலெக்டர், என்னுடைய பேரன் ஜில்லாகலெக்டர், ஜாமாதா ஜில்லாஜட்ஜி...' என்று தெருவதிரச் சொல்லிக்கொண்டே போவனும். அவனே டிதனேடு ஒரு வாசியில்லையே. க்ரமேண மேன்மேலும் வரவிருக்கும் நமது நூல்களாலே இதுதான் சிலாலிகிதமாகும். வைபவப்ரகாசிகை யென்றும் நிகமபரிமலமென்றும் ஆம்ரேடனம் செய்திருப்பது அபஹாஸ்யமென்று இவ்வளவே எழுதத்தக்கது. அது கீழும் மேலும் புடையுண்டு கிடப்பதன்றோ. லஜ்ஜாபயங்களின்றிக்கே ப்ரேத ஜீவித கல்பநம் ப்ராமாணிக க்ருத்யமன்று. இது பன்முறையும் தெரிவிக்கப்பட்ட விஷயம்.

16. "நம்பிள்ளை முதலான பிற்பட்ட ஆசாரியர்கள் சாஸ்த்ரஜ் ஞானமில்லாமல் திவ்யப்ரபந்தங்களிலேயே மிகவும் பரிச்ராந்தர்கள்" என்றெழுதியிருப்பதானது, பெரிய திருமொழி (5—8—7) வியாக்கியானத்தில்—"முற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்கு உடலாக ந்யாய மீமாம்ஸைகளையுமதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் நம் பிள்ளையைப்போலே" என்று பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்திருப்பதை நோக்கி வயிறு வீங்கியேயன்றோ. இது தன்னைப்போலே அவர்களும் ரகுவம்சத்திலேயே போதுபோக்கவில்லையே! என்று வருந்துகிறதுபோலும். நிற்க. இதற்கு மேலெழுதிற்று—'நம்பிள்ளை திருவடிகளான வடக்குத் திருவீதிப்பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் தாங்களிட்ட க்ரந்தங்களிலே தத்வஹித விஷயங்களில் அதிவாதங்களைச் செய்தார்கள்; கேவலம் அர்த்தவாதங்களே இவை;.........இந்த மருமத்தை விவேகித்து அறியமாட்டாத சிலர் அதுவே பரமார்த்தமென்று கொண்டு சிஷ்யர்களுக்கு உபதேசிக்கவும் க்ரந்தங்களிலே யெழுதவும் ஆரம்பித்து விட்டார்கள். பகவானைப் பரது:க்கது:க்கி யென்றூர்கள், பிராட்டிக்குக் குறைகூறினர்கள், கங்கையை அசுத்தமென்றூர்கள், ஸேதுஸ்நாநம் செய்யக்கூடாதென்றூர்கள், நித்ய நைமித்திக கருமங்களை அநுஷ்டிக்கக் கூடாதென்றூர்கள்.......இதுபோல் பல அபார்த்தங்களைச்சொல்லி ஸம்ப்ரதாய குத்ருஷ்டிகளானூர்க்ள்." என்று.

17. இங்கே நாம் தெரிவிக்கவேண்டிய திவ்வளவே- நம்முடைய நூற்றுக்கணக்கான க்ரந்தங்களை இது அல்லும் பகலும் அநுபவித்துவருகிறது. மானுந்தனையு மநுப

விக்கப்போகிறது. அவை செவிடன் காதிலே சங்கூதினபடியாகின்றதத்தனை
போலும். தேசிகனுடைய திவ்யஸூக்திகளிலே இதுக்கு ஆபாத ப்ரதீதியே யொழிய
ஒன்றிலும் ஆழ்ந்த அநுபவமில்லை, தேசிக திவ்ய ஸூக்தியை உதாஹரித்து "அத்
ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்" என்று கூசாது எழுதின பேர்வழி இதுவே
யன்றோ. அது கிடக்க. பெரியவாச்சான் பிள்ளை முதலானோரருளிய அர்த்தங்கள் தவிர
வேறு அர்த்தங்கள் தேசிக திவ்யஸூக்திகளில் எவராலும் காட்ட முடியாதென்கிற
நம்முடைய ப்ரதிஜ்ஞையும், அதை ஸ்தாபிக்கும் உபபாதனங்களும் என்ஞான்றும்
வெற்றிபெற்றிருக்குமவை. தடாகத்திலுள்ள தீர்த்தத்தைச் சிலர் அப்படியே
அள்ளிக்குடிப்பர்கள்; சிலர் வடிக்கட்டிப் பருகுவர். அதுபோல தென்னசார்யர்கள்
ஸ்ரீவசநபூஷண ஆசார்யஹ்ருதயாதிகளாலே அநுபவிக்கும் அர்த்த விசேஷங்கள்
வடிக்கட்டின தீர்த்தம் போன்றவை. *அஸாரம் அல்பஸாரஞ்ச ஸாரம் ஸாரதரம்
த்யஜேத்* என்று ஸாரதரத்தையும் விடச்சொல்லி *பஜேத் ஸாரதமம்* என்று ஸார
தமத்தைப் பற்றச் சொல்லியிருக்கையாலே அதையே பற்றினர்கள் ஆழ்வார்கள்;
அதையே பின்பற்றினர்கள் தென்னசார்யர்கள். 'த்யாஜ்யமாகச் சொன்ன அர்த்
தங்களை நவினர்கள் கைப்பற்றினர்கள். ஆழ்வார்களும் ஆசாரியர்களும் கைக்கொண்ட
ஸாரதமங்களான அர்த்தங்களையேதான் ஸ்ரீ தேசிகனும் கைப்பற்றி "பெரியவாச்
சான் பிள்ளை திருவடிகளே சரணம், பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்"
என்றே வாய் வெருவிக்கொண்டிருந்தாரென்பது அவருடைய திவ்யஸூக்திகளைக்
கொண்டு பரக்கநிரூபிதம் எங்கே நிரூபிதமென்னில் இந்த பூதிகந்திக்காகவே
நாமெழுதி வெளியிட்ட ஸத்ஸம்ப்ரதாயார்த்தஸாரநிதியிலே (பக்கம்96முதல்) காண்க.

18. ப்ராமாணிக பண்டிதர்களுக்கு முக்கியமான விஜ்ஞாபனம். நாம் பலகால்
எழுதி வெளியிட்டு, இதுக்கு ஸர்வாத்மநா அஸமாதேயமென்று முடிந்துபோன விஷ
யங்களையே இது திருப்பித்திருப்பியெழுதி வருகிறது. அத்தோடு நில்லாமல், தான்
ஸமாதானமெழுதி முடித்த விஷயங்களையே நாம் மீண்டுமீண்டும் எழுதிக் கொண்டிருப்
பதாகவும் கூசாமலெழுதுகின்றது. இத்தையே உத்தேசித்து இதனுடைய துர்வாதங்
களுக்கே கண்டனமாக எழுதி வெளியிடப்பட்ட நமது நூல்கள் 26. எத்தனை? இருபத்
தாறு. (26 என்பது 1955 வரை; பிறகு ஏழு.) அவற்றுள், வாத்ஸல்யார்த்தப்ரகா
சிகை; அபிநவதயாசதகம், ஸபாபுஜங்கீஸர்வஸ்வம் என்கிற க்ரந்தங்கள் ச்லோக
பத்தமானவை. லக்ஷ்மீஸ்வரூபநிஷ்கர்ஷம், ஸ்ரீ தத்வசோதநம், ந்ருஸிம்ஹாவதார
ஹேதுநிர்ணயம், அத்புதசக்தி, வித்வத்வைதிகபூஷணம், ரஸிகரஸாயநம், தத்வஹி
தோபதேசம், துவரைப்பிரான் திருவருள், ஸஹ்ருதயஸௌபாக்யம்......இப்படிப்பட்ட
வடமொழி தென்மொழி நூல்கள் யாவும் இதனுடைய நித்ய காலக்ஷேபத்திற்கும்
நித்யாராதனத்திற்கும் உரிய க்ரந்தங்களாய் ஸரஸ்வதீபீடத்திலும் கோவிலாழ்வாரி
லும் விளங்குகின்றனவென்பது ஸர்வாநுபவஸாக்ஷிகம். இவற்றில் ஒன்றுக்கும்
வாயைக் கையைத் திறந்ததில்லையிது. சில நூல்களுக்கு ஏகதேசம் பதிலெழுதினது
முண்டு; அவற்றுக்கு அடுத்தடுத்த க்ஷணத்திலேயே ஸமாதானங்கள் பெற்று சாந்த
மாயிற்று. இதுக்கும் நமக்கும் விளைந்த சர்ச்சைகள் ஸம்ப்ரதாய விஷயங்களில்
மாத்திரமன்று; இது ஸ்வல்பம். ஸகல பண்டித ஸாதாரணங்களான பல விஷயங்
களில் பல சர்ச்சைகள் நீண்டகாலம் நடந்திருக்கின்றன. அவற்றிலும் இது அப்ரா
மாணிகமேயென்பதை வடகலை வித்வான்களேயன்றோ வெளியிட்டிருக்கிறார்கள்.
உத்யாநபத்ரிகையில் இதரர்களியற்றியகுவலயானந்த வியாக்யானமும் ஸுபாஷித
நீவீவியாக்யானமும் இது அச்சிட்டு வந்தபோது அஸ்தானங்களில் மருண்டு எத்தனை
தவறுகள் புகுத்தியது தெரியுமோ? நாம் திருத்திக்கொடுத்த விடங்களில் கைகூப்
பியே நின்றது. ஆண்டுகள் பல கடந்தாலும் இவற்றில் ஒன்றையும் வித்வான்கள்
மறந்திரார்களன்றோ. ஆகவே விஷய நிரூபணம் சிறிது மில்லாமல் "தென்கலையார்
கள் நித்யநைமித்திக கருமங்களைச் செய்யவே கூடாதென்கிறார்கள், பக்தி முதலான

வற்றை அநுபாயமென்கிறார்கள், ஆகவே இவர்கள் ஸம்ப்ரதாயகுத்ருஷ்டிகள்" என்றெழுதிவிடுமிதனுடைய அஸம்பத்தப்ரலபிதங்களைக் கண்டு ஒருவரும் மருளார். இது பட்ட அவஜ்ஞைகளை யாரே மறந்தவர்கள்?

19. இப்படி யெல்லாமெழுதுகிற இதுவே தன் கையாலேயே

"தென்கலா ஸ்ரீவைஷ்ணவேஷு ச அத்யாபி கேசித் வேதாத்யயந வைதிக கர்மாநுஷ்டாநாதிஷு குலபரம்பரயா அத்யந்தம் ச்ரத்தாளவோ பவந்தி"

என்று எழுதிவைத்திருக்கிறது. இதனால், வைதிககர்மாநுஷ்டாநம் த்யாஜ்யமென்று தென்கலை ஸித்தாந்தமன்று என்பது இதன் கையாலேயே வெளிவந்து விட்டது. கர்மாநுஷ்டானத்தைப்பற்றி புருஷார்த்தாதிகரணத்தில் * துல்யம் து தர்சனம் * என்கிற ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்ய ஸூக்திகளை குருமுகமாக ஸேவிக்கப்பெற்றால் தெளிவு பிறக்குமிதுக்கு. நித்யநைமித்திக கர்மத்யாகிகள் தென்கலையாரில் மாத்திரமில்லை. வடகலையாரிலுமுண்டு, ஸ்மார்த்த மாத்வர்களிலுமுண்டு; கிம்பஹுநா? ப்ராஹ்மண ஸாமான்யத்திலுமுண்டு. இதை எங்கும் பார்க்கலாம். காலத்தின் போக்கு இது.

20. தென்கலையார்கள் பக்தி முதலானவற்றை அநுபாயமென்று தூஷிக்கிறார்களென்று எழுதிற்றிது. இதே விஷயத்தில் தேசிகன் திருவுள்ளமென்னவென்று பார்ப்போம்; அவர் ஸாதித்ததாகச் சொல்லப்படுகிற அடைக்கலப்பத்தில் முதற்பாட்டில் "பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்—அடைக்கலம் நான் புகுந்தேனே" என்றுள்ளது. "ஸ்வாமிந்! பத்திமுதலாமவற்றில் தேவரீருக்கு ஏன் பதிகூடவில்லை?" என்று அவரையே கண்டு கேட்கட்டுமிது. "தென்கலையார்கள் பக்தி முதலானவற்றுக்கு அநுபாயத்வம்சொல்லி ஸம்ப்ரதாயகுத்ருஷ்டிகளானார்களென்பது இதனுடைய ஸித்தாந்தமாதலால் இந்த அவத்யம் தேசிகன் திருமுடியிலும் இதனாலேற்றப்பட்டு விட்டதென்பதில் ஸந்தேஹமில்லை. தேசிகன் கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையிலே "நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:" என்கிற ச்லோகத்தின் வியாக்கியானத்திலே பக்தி முதலானவை உபாயமல்லவென்பதை தேங்காயுடைத்துக் காட்டியிருக்கிறார். அந்த ஸ்ரீஸூக்தியில் "அஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ந ஸ்யாத்" என்றவிடத்து அபிசப்த வ்யாவர்த்யம் எதுவென்று பார்க்கவேணும்.

21. அதுநிற்க. இந்த பூதிகந்தத்திற்கு தேசிக தூஷணத்திலேயே முழுநோக்கு என்று திருக்குடந்தை வித்வான் ஸ்வாமி தேசிகபக்தி தத்வநூலிலே யெழுதியிருப்பதுதான் ஆதிமுதலந்தமளவும் திடப்பட்டு வருகிறது. முடிவாக, தேசிக திவ்ய ஸூக்திகளில் ஒன்றையும் இது நேராகப் பார்த்ததன்று என்பதே தேறிநிற்கும்.

22. இப்படிப்பட்ட இந்தபூதிகந்தி நம்மைப்பற்றி யெழுதுகிறது - நாம் நம்முடைய ஜீவிதத்தில் ஒவ்வொரு க்ஷணத்தையும் தேசிக த்ரோஹத்தினாலேயே கடத்தி வருகிறோம் என்று. இங்கு உண்மையென்னவென்றால். பெரிய மடாதிபதிகளும் பல பல கனதனவான்களும் சேர்ந்து தேசிக க்ரந்தங்களையெல்லாம் மாலையாகப் பதிப்பிக்க வேணுமென்று பெருமுயற்சிகள் செய்தும் முடியாமற் போன அக்காரியத்தை நாம் அவலீலையாகச் செய்து முடித்தோமென்பதுபற்றியும், தேசிகஸூக்திகளுக்கு உலகம் மெச்சும்படியான வியாக்கியானங்களை யெழுதி வெளியிட்டு வருகிறோமென்பது பற்றியும், தேசிகஸூக்திகளைக் கண்டபாடஞ் செய்து அவற்றின் அரிய பெரிய ஆழ்பொருள்களை ஸபைகளிலே பொழிகிறோமென்பது பற்றியும் உண்மையான தேசிகபக்தர்கள் உகந்து போற்றுநிற்க, "அசக்தாஸ் தத்பதம் கந்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே" என்கிற நிலை இந்த பூதிகந்திக்கும் இதைப்போன்ற சிலர்க்குமுண்டாகி, உள்ளடங்காத பொறாமைக்குப் போக்குவீடாக தேசிகத்ரோஹீத்யாதி

நிந்தைகளினால் ஆச்வஸிக்க வேண்டியதாகிறது. இதனுடைய அஸூயைக்கு ஹேதுவான அம்சங்களிலே தலைநிற்குமது எது தெரியுமா? “தேசிகன் தென்னாசார்யர்களினுடைய நெறியிலேயே நின்றவர்” என்கிற உண்மையை நாம் தேசிகனுடைய திவ்யஸூக்திகளைக் கொண்டே ஸ்தாபித்து வருகையில், அதை மறுக்க வேணுமென்று இது வீணாக ஆசைப்பட்டு எவ்வளவு ஸம்ப்ரமித்தாலும் மேன்மேலும் பங்கமேயடைந்து வருகிறதல்லவா? இதுதான் இதனுடைய அஸூயையை சாகோபசாகமாக வளர்த்து வருகிறது. அஸூயைப்பட்டு ஒழிய வேண்டியது தவிர வேறில்லை.

23. ஆரியர்காள்! இது நாம் அதிசயோக்தியாக எழுதுவதன்று: ஆத்மப்ரசம்ஸையாகவும் எழுதுவதன்று. உள்ளதை உள்ளபடி உபபாதித்து எழுதுவதே அத்தனையும். ஆத்ம ப்ரசம்ஸையானாலும் குற்றமில்லை. தென்கலையார்கள் பக்தி முதலானவற்றை உபாயமன்றென்று அநியாயமாய் எழுதிவைத்து இதனாலேயே ஸம்ப்ரதாயகுத்ருஷ்டிகளாகி யொழிந்தார்கள்” என்று இது எழுதியிருக்கிறது. இப்படி எழுதுவதானது தேசிக திவ்ய ஸூக்தியை லவலேசமும் அறியாமையினாலத்தனை என்று நாம் சபதம் பண்ணிச் சொல்லுகிறோம். பக்தி முதலானவற்றை உபாயமன்றென்று அநியாயமாக எழுதி வைத்தவர்கள் தென்கலையார் மாத்திரமல்லர்; உங்களுடைய கபடபக்திக்கு இலக்கான தேசிகனும் இப்படித்தானெழுதி வைத்திருக்கிறார் என்று நாம் சொல்லுவதோடு நில்லாமல் கீதார்த்தஸங்க்ரஹத்தின் வியாக்கியானத்திலே நிஸ்ஸந்தேஹமாகவும் நிர்விவாதமாகவும் ஸ்வாமி யெழுதி வைத்திருக்கிற திவ்ய ஸூக்தியையும் எடுத்துக் கைமேலே தந்தோம். அதைப் பூர்த்தியாக அநுவதிக்கிறோம் கேண்மின்—“ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திரபி ஸ்யாத் இதி பாவ:; அந்தத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ர உபாய:” என்று தேசிகன் திருக்கையிலிருந்து திருவவதரித்த பங்க்தியது. இவ்வளவு கல்வெட்டாக வேறு ஆசார்யர்கள் எழுதி வைத்திருப்பதாகத் தெரியவில்லை.

24. மற்ற விஷயங்கள் கிடக்கட்டும்; இந்தவொரு விஷயத்தைப் பற்றிக் கொண்டு சர்ச்சை செய்து முடிப்போம். இது எழுதியிருக்கிற வாக்கியம்—“பக்த்யாதீநாம் அநுபாயத்வமிதி ஸர்வசாஸ்த்ரஸம்ப்ரதாயவிருத்தம் அப்யுபகச்சந்தஸ் தே ஸம்ப்ரதாயகுத்ருஷ்டய இதி அபிதாநயோக்யதாம் பஜந்த:” என்பது. ஸர்வ சாஸ்த்ரஸம்ப்ரதாய விருத்தமென்று இது தாந்தோன்றியாகக் கருதுகிற அர்த்தம் ஆளவந்தாரால் ப்ரஸ்தாவிக்கப்பட்டு தேசிகனால் ஸுஷ்டு ப்ரதிஷ்டாபிதமானது என்னுமிடத்தை நாம் உள்ளபடி யெடுத்துக் காட்டியாயிற்று. இப்படி ஒவ்வொரு விஷயத்திலும் இது வாயைத் திறந்து மூடுவதற்குள்ளே, எழுதின மசி உலருவதற்குள்ளே நாம் தேசிக திவ்யஸூக்தியைக் கொண்டே மறுபடியும் வாய் திறக்கவோ கைபேர்க்கவோ இடமில்லாதபடி செய்து வருகிறோமாகையால் இதனால் திக்கு முக்கலாடி நிற்குமிது நாம் நம்முடைய ஜீவிதத்தில் ஒவ்வொரு நிமேஷமும் தேசிகத்ரோஹமே செய்து வருவதாக எழுதாமல் வேறு என்ன எழுதும் பாவம்!

25. ரகுவம்சம் மேகஸந்தேசம் ராமோதந்தம் போஜ சரித்ரம் தவிர தேசிக திவ்யஸூக்தியில் ஓரெழுத்தாகிலும் கற்றதோ இது? ஒன்றிரண்டு தேசிகஸூக்திகள் இதன் கண்ணில் தப்பிப்பட்டுவிட்டால் “அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்” என்றெழுதுவது தவிர வேறில்லை. இதனால் தேசிக ஸ்ரீஸூக்தி இதுக்கு உண்மையான பொருளைத் தரவில்லை யென்பதே தேறி நிற்கிறதல்லவா?

26. இந்த ப்ரகரணத்தில் நாம் அவச்யம் தெரிவிக்க வேண்டிய விஷயங்களை ஸப்ரமாணமாகத் தெரிவிக்கிறோம். நம்முடைய நிரூபணங்களுக்கு நேர்நின்று விடைகூறமாட்டாதவிது தன் துக்கம் மறைவதற்காக தத்தக பித்தகவென்று எழுதிவிட்டால் உலகமறிந்திருக்கிறவுண்மை மாறிவிடுமோ? மாறாது. மாறாது.

27. நம்முடைய நூல்களைப் புகழ்ந்தவர்களில் ஸ்ரீதேசிக பக்தர்களே நூற்றுக்கணக்காகத் தேறுவர்கள். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, திருமலை திருப்பதி ஜீயர் ஸ்வாமிபோன்ற ஸ்ரீமத் வரவர முநீந்த்ர ஸம்ப்ரதாயஸ்தர்கள் மிகச் சிலரே புகழ்ந்தவர்கள். நெஞ்சால் நினைப்பரிய பெருமைவாய்ந்த மஹாமஹோபாத்யாய கபிஸ்தலம் ஸ்வாமி, லக்ஷ்மீபுரம் பண்டித ரத்னம் ஸ்வாமி, ஸ்ரீபரகால மடாஸ்தான வித்வத்வரேண்யர்கள் ஆகிய ப்ரபல வித்வான்கள் பலர் நம்முடைய க்ரந்தங்களைக் கடாக்ஷித்துத் தங்களுக்குண்டான ஸந்தோஷத்தை உலகமறிய விளக்கியுள்ளார்களென்றால் இதனில் மிக்க அதிசயமுண்டோ? மேற்கூறிய மஹா வித்வான்கள் புகழ்ந்தது நம்முடைய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களையே. மணிப்ரவாள பாஷையில் நாமெழுதிய ஸம்ப்ரதாயார்த்த தத்வபரங்களான க்ரந்தங்களை யுகந்து கொண்டாடினவர்கள் யாவரென்று உலகுக்கு நினைப்பூட்டவேண்டுவது இப்போது ஆவச்யகமாகிறது. ஸ்ரீமதஹோபில மடத்தின் ஸகலயோக க்ஷேம நிர்வாஹகராய் வேதாந்ததீபிகைக்குப் பலகாலம் ஸம்பாதகராய் ந்ருஸிம்ஹ ப்ரியா தோன்றின நாள்முதல் தாம் திருநாட்டுக்கெழுந்தருளுகிற க்ஷணம்வரையில் அதற்கும் ஸம்பாதகராய் எழுந்தருளியிருந்து பாமப்ராமாணிகரென்று பெரும் புகழ்பெற்ற மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி நம்முடைய ஸாம்ப்ரதாயிகார்த்த தத்வபரிசீலன பரங்களான க்ரந்தங்களைப் பெரும்பாலும் பராமர்சித்துப் புகழ்ந்தெழுதி வேதாந்த தீபிகையிலும் ந்ருஸிம்ஹ ப்ரியாவிலும் வெளியிட்டிருக்குமவற்றை உலகம் கண்டிருக்கிறது. அவர் திருநாட்டுக்கெழுந்தருளின பிறகுங்கூட ந்ருஸிம்ஹ ப்ரியாவில் நம்முடைய க்ரந்தங்களைப் பற்றின மதிப்புரைகள் வெளிவந்தவை பல. புதுக்கோட்டை ராஜஸம்ஸ்தானத்தில் தாநாதிகாரியாயிருந்த (கீர்த்திமூர்த்தி) ஸ்ரீ உவே. மதத்ரய நிரூபக மஹாபண்டிதரான காளி ரங்காசார்ய ஸ்வாமி ஸகல பூர்வாசார்ய ஸமுநாயாவதாரரென்று நமக்குப் பெயரிட்டு இந்த விருதைக்கொண்டே ஒவ்வொருவரும் வ்யவஹரிக்க வேணுமென்றுமெழுதியிருக்குமது தேசமறிந்தது.

28 கிம்பஹுநா? இந்த பூதிகந்தமே நம்மோடு ஸாக்ஷாத்தாக விவாதப்பட்டுப் பங்கமடையத்தொடங்கின பிறகு நிந்திக்கத் தலைப்பட்டிருக்கிறதே யொழிய அதற்குமுன் தனது கையாலெழுதி உத்யாந பத்திரிகையில் வெளியிட்டிருக்கிற மதிப்புரைகளைத் தானேயெடுத்து வாசித்துப் பார்க்கலாமே. ஆதிசேஷன் படமெடுத்தாடும்போது ஆனந்தமாகக் கண்டுகொண்டிருந்து, ஹாஹா என்ன தாண்டவம்! என்று புகழுகிறவர்கள், போராத தலைவிதியினால் சிறிது சேஷ்டை செய்து கடியுண்டு வையவுமடிக்கவும் முயல்வது போலவும், கண்ணபிரானிடத்தில் *யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசா: ப்ரதிபேதிரே* என்று மஹர்ஷி கூறினபடி பரவசர்களாய் மரியாதை காட்டிநின்ற துர்யோதநாதிகள் விதிவசத்தால் த்ரோஹிகளானுப்போலவும் *அலுப்த மூர்த்தஸ்ய லிபிக்ரமத்வத்தாலே பழைய நிலையை மறந்தும் மறைத்தும் தூஷிக்க முன்வந்து பங்கமடைகிறார்களென்றால் இதில் வியப்புண்டோ?

29. ஸ்ரீரங்கம் ஆண்டவனுஸ்தானத்தை யலங்கரித்தருளாநின்ற வர்த்தமான ஆண்டவன்ஸ்வாமியோடு அடியேனுக்குப் பரிசயமின்றிக்கே நேரில் ஸேவிக்கப்பெற்றது மின்றிக்கே பத்ரவ்யவஹார ப்ரஸக்தியுமின்றிக்கே யிருக்க அந்த ஸ்வாமி ஸந்நிதியிலிருந்து அசிந்திதமாக வொரு ஸ்ரீமுகம் கிடைத்தது.' "தேவரீருடைய க்ரந்தங்களையும் வாக்விலஸிதங்களையும் ஸ்ரீஸ்வாமி மடாக்ஷித்தும் கேட்டும் மிகவு முகந்தருளியாச்சுது. தேவரீருடைய க்ரந்தங்களை யெல்லாம் கடாக்ஷிக்க மிகுந்த குதூஹலமுண்டாகியிருக்கிறது, அப்போதப்போதனுப்பிக் கொண்டிருக்கும்படியாக நியமனம்" என்று ஸ்ரீகார்யதுரந்தரர் எழுதியிருந்தார். பிறகு அனுப்பின நூல்களை யெல்லாம் கடாக்ஷித்தருளி அநுக்ரஹித்த ஸ்ரீமுகம்.— (அஸ்மதேகலப்யம்)

“ ஸ்ரீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதீத்யாதி பிருதாலங்க்ருதாநாம் ப்ரதிவாதி மத்தகஜ பயங்கர கண்டீரவாணாம் ஸ்ரீமதாம் அண்ணங்கராசார்யாணாம்.........வாத ப்ரதிவாதக்ரந்தஜாலம் அதிகதம். ஸ்ரீமதாசார்யவர்யாணாம் கடாக்ஷபாத்ரஞ்ச அபவத்; ஸர்வம் ஆநுபூர்வ்யா கடாக்ஷிதவந்த: மஹாகுருவராஸ் தே ஆநந்ததுந்தில ஸ்வாந்தாஸ் ஸந்த ஏவம் ப்ரசசம்ஸு:—பஹு ஸுதர்க்க ஸச்சாஸ்த்ராநுஸாரி ப்ரமாண புஞ்ஜ மஞ்ஜுலாந் ஸஹ்ருதய ரஸிக ஸுஹ்ருத்ரஞ்ஜக நிரதிசயாச்சர்யசைலீப்ர கும்பித வசநமணிமாலாலங்க்ருதாந் தர்சநாவஸரேஷு நவம் நவம் அத்யுத்ஸாஹ ஜநகாந் விவித விசித்ர விஷய வர்க்காந் தர்சம்தர்சம் நிரவதிக துஷ்டிம் அலபந்த கிஞ்ச ஏவமேவ யுஷ்மாகம்சேஷபுரபி நித்யநிரவத்யகைங்கர்யோபயுக்ததே ஹாரோக்ய தனதாந்ய ஸம்ருத்திசாலி பூயாதிதி ஸ்ரீரங்கநாயிகாஸமேதம் ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்ம புந:புந: ப்ரார்த்தயே இதி.” என்பதாக.

30. இந்த ஸம்ஸ்க்ருத வாக்கியங்களின் கருத்துச் சுருக்கம்—தேவரீரெழுதியுள்ள வாத க்ரந்தங்களெல்லாம் சாஸ்த்ர ப்ரமாண உபபத்திகள் மலிந்தவை யென்றும் எத்தனை தடவை வாசித்தாலும் ஆராவமுதமாய் விளங்குகின்றனவென்றும் ஸகல ரஸிக பண்டிதர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றனவென்றும் ஆண்டவன் ஆனந்தம் பொங்கி ஸாதித்ததாக. நம்முடைய க்ரந்தங்களுக்கு ஒரு மதிப்புரை தந்தருளவேணுமென்று நாம் அபேக்ஷித்ததில்லை, எதிர் பார்த்ததுமில்லை. *துர்விஜ்ஞாதஸ்வஹ்ருதய மஹோ தைவமத்ர ப்ரமாணம்* (பாதுகாஸஹஸ்ரே.) என்று தேசிகனருளிச்செய்தபடி எம்பெருமானுடைய விலக்ஷண திவ்யஸங்கல்பமே அடியாகத் தோன்றிய ஸ்ரீமுகமிது என்பதில் ஸந்தேஹமுண்டோ?

31. இப்படிப்பட்ட ஸ்ரீமுகங்களையும் புகழுரைகளையும் பெறுதற்குக் கடல் சூழ்ந்த மண்ணுலகில் மற்றொருவர் பாக்கிய முடையரோ? *கோரமாதவஞ் செய்தனன்கொலறியேன்* *யானே தவஞ்செய்தேன்* *என்மதிக்கு விண்ணெல்லா முண்டோ விலை* மலக்கு நாவுடையேற்கு மாறுளதோ இம்மண்ணின் மிசையே* என்று ஆழ்வார்களும் *இல்லை யெனக்கெதிரில்லையெனக் கெதிரில்லையெனக்கெதிரே* *ப்ரபஞ்ச ப்ரஸித்த ப்ரபந்தப்ரவக்தா விரிஞ்சிப்ரபஞ்சே மதந்ய: கவி: க:?* என்று ஆசார்யர்களும் சில ஸமயங்களில தம்மையுமறியாமல் பேசியிருப்பனவுள. அப்படி நாமும் பேசி நிற்கும்படியாக பகவத் பாகவத மஹாக்ருபையைப் பெற்றிருக்கிறோமென்றால் வயிறுருகி மாள வேண்டுவது தவிர வேறுண்டோ இந்த பூதிகந்தத்திற்கு?

32. பலபல பெரியார்களின் ப்ரசம்ஸைகளால் நமக்கு அபூர்வமான வொரு பெருமையுண்டாய்விட்டதாக நாம் நினைப்போமல்லோம். ப்ராமாணிகர்களின் நிலை இப்படிப்பட்டதென்பதையும், உலகில் அவரவர்கள் எழுதும் க்ரந்தங்கள் போன்றவையல்ல நம்முடைய க்ரந்தங்கள்—என்பதையும், நாமெழுதும் விஷயங்களுக்கு மறுப்பெழுதத் தோன்றினால் வீணான அதிக்ஷேபபரிஹாஸ வார்த்தைகளை அறவே விட்டிட்டு விஷய விமர்சத்தளவிலே நிற்கவேண்டுமென்பதையும் இந்த பூதிகந்தத்தின் மனத்தில் ஊன்றவைக்கவே இவ்வளவு எழுத நேர்ந்தது.

33. இந்த பூதிகந்தி எழுதிற்று—“ இப்படி தென்னாசார்யர்களால் ஸத்ஸம்ப்ரதாயத்திற்கு விளைந்த மஹத்தான கெடுதலை ஸ்வாமி தேசிகன்கண்டு மிகவும் நொந்து ரக்ஷைகள் முதலான அனேக க்ரந்தங்களை யருளிச்செய்து ப்ராசீந பத்ததியை ப்ரதிஷ்டாபநம் செய்தருளினர்” என்று. கேண்மின்; அந்த ரக்ஷைகளில் ஒன்றாகிய கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷையினால் தேசிகன் செய்தருளின ப்ராசீந பத்ததி ப்ரதிஷ்டாபநத்தை மேலே விரிவாகக் காட்டினோம். பக்தி முதலானவற்றை உபாயமென்று நினைக்கவும் தகாதென்று தேசிகன் ஸ்தாபித்த ஸத்ஸம்ப்ரதாய பத்ததியை தூஷிக்கவன்றோ இந்த பூதிகந்தி யெழுந்தது. இதற்கு நேரான விடையிறுக்க

முடியாமல் அந்தந்த ஸமயங்களில் வாளாகிடப்பதும், பண்டிதர்கள் இதை மறந்திருக்கக்கூடுமென்று தோன்றும்போது அட்டஹாஸம்செய்வதும் இதற்குத் தொழிலாய் விட்டது. இரண்டொரு வாரத்திற்குள் இதற்கு மறுப்பு எழுதட்டும்.

34. தேசிகருடைய அவதாரம் காஞ்சீபுரியில் தீபப்ரகாசர் ஸன்னிதிவாசலில். அங்கு தேசிகருடைய ஆலயத்தில் ஆதிகாலத்திலிருந்து தென்கலைத் திருமண்தானிருந்தது. கி. பி 1874 வருஷத்தில் வடகலை வகுப்பினர் அத்திருமணை இடித்துத்தள்ளி வடகலைத்திருமண் போட்டார்களென்பது நியாயஸ்தான ரிகார்டுகளால் ஸ்பஷ்டமாகத் தெரிய வருகிறது. அதாவது இற்றைக்கு 86 வருஷங்களுக்குமுன்வரையில் தேசிகருடைய அவதாரஸ்தலத்தில் தென்கலைத் திருமண்தான் திகழ்ந்ததென்பது நிஸ்ஸந்தேஹமான விஷயம். ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாச்சியார் ஸன்னிதி யெதிரில் விளங்குகின்ற தேசிகர் ஸன்னிதி வாசலில் புராதனக்கட்டிடமான தென்கலைத் திருமண் நாளைக்கும் எப்படி பிரகாசிக்கின்றதோ அப்படியேதான் காஞ்சீபுரத்திலும் அவருடைய அவதாரஸ்தலத்தில் தென்கலைத் திருமணே கி. பி. 1874-ஆம் வருஷம் வரையில் பிரகாசித்துக்கொண்டிருந்தது; திருப்புட்குழியப்பாஸ்வாமி 1874-ஆம் வருஷத்தில் டிை தேசிகன் ஸன்னிதி முன்னணியில் இருந்த புராதன காரைக்கட்டிடமான தென்கலைத்திருமண் காப்பை சில வடகலையார்களைக்கொண்டு இடித்துவிட்டாரென்று ஸப்கலெக்டர் மிஸ்டர் குருல்துரை முன்னிலையில் தொடுக்கப்பட்டிருந்த தாவாவில் டிை திருப்புட்குழி ஸ்வாமியும் ஒரு எதிரியாக இருந்தார். அந்த தாவாவின் நம்பர் 72. அதில் டிை திருப்புட்குழி ஸ்வாமி கொடுத்த வாக்குமூலம் அப்படியே அச்சாகி வெளிவந்திருக்கிறது. 19—8—1874-ல் டிை ஸ்வாமி கொடுத்த அந்த ஸ்டேட்மெண்டில் விளங்குகின்ற வாசகங்கள்—

> "விளக்கொளிதேசிகன் ஸன்னிதி வாசலில் தென்கலைதிருமண்தான் இருந்தது........... 6, 7 மாதத்திற்குமுன் நான் வெளியூர் போயிருந்தபோது யாரோ வடகலையார் அதையிடித்து விட்டதாக கேள்விப்பட்டேன்........அந்த தேசிகன் ஸன்னிதியிலுங்கூடத் தென்கலையார்களே தென்கலைமந்திரம் சொல்லியே திவ்யப்ரபந்த ஸேவை செய்து வருகிறார்கள்; அங்கு வடகலையார் வடகலைமந்திரம் சொல்லி வரக்காணேம்.".........—என்பன.

> இதனால் வேதாந்ததேசிகனுடைய அவதார ஸ்தலமும் புராதனமாகத் தென்கலையாயிருந்ததென்பது நிஸ்ஸந்தேஹம்."

என்று நாம் எழுதியிருந்தோம். இது, நியாயஸ்தானங்களில் ஏறின ரிகார்டுகளைக் கொண்டு நாம் நிரூபித்த விஷயமாகையாலே நவீநர்களுக்கு இதன்மேல் வாயைக் கையைத் திறக்க முடியவில்லை. இதைத் தாங்கள் காணாததுபோலவே (அத்ருஷ்டிமபிநிய) கிடந்தார்கள். கடைசியாக ஏதாவதொன்றை பதிலாக எழுதித் தொலைக்க வேண்டி வந்தபடியாலே இந்த பூதிகந்தி யெழுதியதாவது.

"அநாதியாய் வடகலையாயிருந்த கோவில்களையெல்லாம் தென்கலையாக ஆக்கிரமித்துக்கொள்வதே தொழிலாயிருந்த தென்கலையார்களாலே நெடு நாளைக்கு முன்னமே ஆக்கிரமிக்கப்பட்டு அவைதிகங்களாய்க் கிடந்த கோவில்களை மறுபடியும் வடகலையாக்க வேண்டியது யுக்தமேயன்றோ. தூப்புல் ஸன்னிதியானது வெகுகாலமாக அவைதிகமாய்க் கிடந்தது. அதை வைதிகமாக்க ஸ்ரீமத்திருப்புட்குழி ஸ்வாமி கங்கணங்கட்டிக் கொண்டார். அவர் செய்த சூது பலித்துவிட்டது. லோக க்ஷேமத்திற்காக இப்படிப்பட்ட சூது செய்ய வேண்டியதுதானே. ஆஸ்திகர்களுக்கு இது கடமைதானே." என்று எழுதியுள்ளது.

35. இதற்கு நாம் எழுதியிருந்ததைக் கேண்மின். "தூப்புல் ஸன்னிதி ஒருநாளும் தென்கலையாயிருந்தது கிடையாது; முன்பும் வடகலைதான், இப்போதும் வடகலை

தான்; இங்கு தென்கலைத்திருமண் இருந்ததாகவும் அதை திருப்புட்குழிஸ்வாமி இடிக்கச் செய்ததாகவும் எழுதியிருப்பது பொய்" என்று இந்தபூதியெழுதியிருக்கலாம். எத்தனையோ பொய்களைக் கூசாமலெழுதிக் கொண்டிருக்கிற பூதிக்கு இந்தப் பொய்யுரையை யெழுதுவதில் என்ன கஷ்டம்? சில பாமரர்கள் இதையும் மெய்தானென்று சில நாட்களாவது மயங்கிக் கிடப்பர்களன்றோ. அவ்வளவுதானே இதுக்கு வேண்டுவது. இங்ஙனே எளியவழியை விட்டிட்டு, எல்லாக் கோவில்களுமே தென்கலையாயிருந்தது வாஸ்தவமென்பதை ஒப்புக்கொண்டும், திருப்புட்குழிஸ்வாமி தூப்புலில் சூது செய்ததும் வாஸ்தவமே யென்று ஒப்புக்கொண்டும் ஏதுக்கிது திண்டாடுகிறதென்று ஆலோசிக்க வேணும். விஷயம் இவ்வளவே; தூப்புல் ஸன்னிதிஸம்பந்தப்பட்டவரையில்அந்தகோவில் அநாதியாய்த் தென்கலையாயிருந்ததும் அங்கே திருப்புட்குழியப்பாஸ்வாமி சூது செய்தாரென்பதும் அசைக்கவும் மறைக்கவும் முடியாத நீதிப்ரமாணங்களில்ஏறி தாம்ரசாஸநமும் சிலாசாஸநமும் பெற்றிருக்கையாலே அதில் விபர்யயம் பேசுவது பெரிய அபாயமாய்த் தலைக்கட்டுமென்று தெரிந்து கொண்டது. ஆகவே இங்கு பச்சைப்பசும்பொய் பேசத் துணிவு உண்டாகவில்லை; அவைதிகமாயிருந்ததை வைதிகமாக்குவதற்காக இந்தச் சூது செய்தாரென்று எழுதி விட்டோமானால் துக்கம் தீர்ந்து விட்டதாம் என்று ஒருவாறு தேறி இங்ஙனே யெழுதி நவீனர்களின் கண்ணைத் துடைத்து விட்டதுபூதிகந்தி.

36. ஒரு தஸ்கரன் ஒரு வைதிகருடைய இல்லத்திலே புகுந்து களவு செய்து கையும் பொருளுமாகப் பிடியுண்டான்; ஏன் களவு செய்தாயென்று அதிகாரிகள் கேட்கையில் "மிண்டர்பாய்ந்துண்ணும் சோற்றைவிலக்கி நாய்க்கிடுமினீரே" என்று ஆழ்வார் சொல்லியிருக்கையாலே அநியாயமாய் அஸத்துக்களிடமிருக்கிற பொருளை வாங்கி ஸத்துக்களிடத்திலே சேர்ப்பிக்க வேண்டிக் களவு செய்தேன்" என்றானாம். அதுபோலவேயுள்ளது இந்தபூதிகந்தியின் பதில். அதே கதைதான்.

37. எது வைதிகம், எது அவைதிகம் என்ற விசாரத்தைப் பிறகு வைத்துக் கொள்வோம். ஒருவர் தென்கலை ஸம்பிரதாயத்தை அவைதிகமென்பதும், மற்றொருவர் வடகலை ஸம்பிரதாயத்தை அவைதிகமென்பதும், வேறொருவர் இவ்விரண்டு ஸம்பிரதாயங்களையுமே அவைதிகமென்று பழிப்பதும்..........= ஆக இப்படிப்பட்ட மதபேதங்கள் உலகில் மலிந்து கிடக்கின்றன. "அஸிநா தத்த்வ மஸிநா பரஜீவ ப்ரபேதிநா, வித்யாரண்யமஹாரண்யம் அக்ஷோப்யமுநிரச்சிநத்." என்கிற ச்லோகத்தை தேசிகனருளிச் செய்தும், சததூஷணிப்ரப்ருதிகளான வஜ்ரகுடாரக்ரந்தங்களை யருளிச்செய்துங்கூட பரமதங்கள் தொலையவில்லை. "தேவாலயங்களெல்லாம் நெடுநாளாகவே தென்கலையாயிருந்து அவைதிகங்களாய்க் கிடந்தன" என்று இந்தபூதி வெளியிடுகிற அர்த்தம் உண்மையாகவே யிருக்கட்டும். இந்த நவீனர்களுடைய முன்னோர்கள் திவ்யதேசங்களிலே காலை வைக்காமல் குளக்கரைகளிலேயே வாழ்ந்ததானது "கோவில்களெல்லாம் அவைதிகங்கள்" என்கிற எண்ணத்தினால்தான். 'கோவில்களில் ஜகந்யஜாதீயர்களான ஆழ்வார்களை ஸ்தாபித்தும், அவர்களது வாயில் வெளிவந்த நீசபாஷையான பிரபந்தங்களை உத்கோஷித்தும் தென்கலையார்கள் கோவில்களைக் கெடுத்து விட்டார்கள்" என்றுதான் இந்த நவீநர்களினுடைய முன்னோர்கள் கோவில்களை எட்டிப்பாராமலுமிருந்து விட்டார்கள்—என்று நாம் பலகாலுமெழுதி யிருந்த இதனையே இந்த பூதிகந்தி தன் கையால் எழுதிற்று.

38. ஒன்று பாருங்கள்; ஆங்காங்கு தேவதாந்தரக் கோவில்கள் பலபல கிடக்கின்றன. அவை அவைதிகங்களாகையாலே நமக்கு த்யாஜ்யங்கள் என்று கொண்டே வைதிகர்கள் விலகி நிற்கிறார்கள். இதுவரை அந்த கோவில்களுக்குப் போனவர்களுமல்லோம், இனி போக நினைப்போமுமல்லோம். அவைதிகங்களான விவற்றை வைதிகங்களாக்குவோ மென்கிற எண்ணம் வைதிகர்களுக்கு த்ரிகாலத்

திலும் அஸம்பவி. இவ்விதமாகவே, தென்கலைக் கோவில்களெல்லாம் அவைதிகங்களென்னு முறுதிகொண்டே நவீனர்களின் முன்னோர்கள் ஸூர்யசந்திரர்களேற்பட்ட காலம்முதல் கோவில்களில் விலகி வர்த்தித்தார்கள்; பரமவைதிக வ்ருத்தியைத் தாங்கள் பரிக்ரஹித்து பொங்கல்புளியோரைகளின் வாஸனையுமறியாமல், *ரேதஸ்ஸிஞ்சந், ப்ரஜாঃ ப்ரஜநயந், த்ரிம்சநஸ்யா ஜகநம் யோஜநாதி, இத்யாதி சிந்தனைகளோடும் அவற்றின் திவ்யார்த்த பரிசீலனங்களோடும் காலம் கடத்திவந்தார்கள். பிறகு, 'நாம் மாத்திரம் குளக்கரைகளிலே போது போக்கிக் கிடப்பதேன்? தென்கலையார் மாத்திரம் கோவில்களிலே மரியாதைகளையும் பஹுமானங்களையும் அநுபவிப்பதேன்? அவற்றை நாமும் அநுபவித்தாலென்ன?'' என்று தோன்றி, அக்காலத்திலே தென்கலையார்கள் வேதாந்ததேசிகனிடத்தில் அத்வேஷம் மாத்திரமே கொண்டவர்கள் சிலரும், ஸாதாரண பக்தி கொண்டவர்கள் சிலருமாயிருந்தது கண்டு தாங்கள் அவரிடத்திலே விசேஷ பக்தி கொண்டவர்களென்று காட்டத் தலைப்பட்டுக் கோவில்களிலே புகஆரம்பித்தார்கள். ஸாதுக்களாய்ப் புகுந்திருந்தால் நன்றே: ஆரம்பகாண்டமே யுத்தகாண்டமாயிற்று இவர்களுக்கு. ஆனால் எல்லாருமே புக ஆரம்பிக்கவில்லை. யாரோ சிலரே. பெரும்பான்மையான வடகலையார்கள், கோவில் நம்முடைய வைதிகாசாரத்திற்கு உற்றதன்று என்கிற கொள்கையையே கொண்டு விலகியேயிருந்தார்கள். அத்யாபி ஸ்மார்த்த மாத்வாதிகள் விஷ்ணுகோவில்களுக்கு வருவதுபோல அவர்களும் பிம்பதர்சனத்தை மாத்திரம் உத்தேசித்துக் கோவில்களுக்கு வந்து, ஆழ்வார்களை ஸேவிக்கக் கருதாமலும் திவ்யப்ரபந்த ஸேவைகளைக் காது கொடுத்துக் கேட்க விரும்பாமலும் ப்ரதக்ஷிண நமஸ்காரங்களை அபரிமிதமாகச் செய்து கொண்டு ப்ரஸாத விநியோக கோஷ்டிகளின் அருகுங்கூட வாராமலும் பவித்திர பாணிகளாகவே புறப்பட்டுப் போவர்கள். ஸன்னிதிகளில் உட்காரவே மாட்டார்கள். கதாசித் உட்கார நேர்ந்தாலும் கையை மூடிக்கொண்டு ஏதோ ஜபித்துப் போவர்கள். இவர்களிடத்திலே எல்லாருக்கும் அபரிமிதமான கௌரவ புத்தியுண்டு. 'இவர்கள் அத்யயநசீலர்கள், அநுஷ்டாநபரர்கள், பூர்வாபரம் பண்ணி வைக்கக் கூடியவர்கள். தீட்டு கீட்டு சொல்லுவதிலே நிபுணர்கள்' என்று தென்கலையாருட்பட மற்றெல்லாராலும் கொண்டாடப்பட்டிருப்பர்கள். அத்யாபி இப்படியிருப்பவர்களை ஸ்ரீரங்கம் முதலான அனேக திவ்யதேசங்களில் பார்த்து வருகிறோமல்லவா? இப்படிப்பட்ட சிறந்த கௌரவத்தையே இவர்கள் நிரந்தரமாகக் காப்பாற்றிக்கொண்டிருந்தார்களாகில் இவர்களுக்கு ஒருவிதமான அவத்யமும் வந்திராது; அந்தோ! வீணான பரிபவமடைந்தார்கள்; அடைந்துவருகிறார்கள். சோசநீயமான தலைவிதி!; அஸ்து! மேலே செல்லுவோம்.

39. இந்த பூதிகந்தி யெழுதிற்று—தென்கலையார்கள் தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் வெகு மிராசுகளைப் புதிதாக ஆக்ரமித்துக் கொண்டார்கள்; ஆனால் பூர்த்தியாக ஆக்ரமித்துக்கொள்ள முடியாமற் போய்விட்டது; அதனால் இங்கு வடகலைநாமமே இன்றைக்குமுள்ளது—என்று. கோவில்களை ஆக்ரமிக்க ஆசை கொண்டவர்கள் இன்னாரென்பதை உலகம் தெரிந்து கொண்டிருக்கிறது. ரிகார்டுகளே வேண்டாம்; இவர்களுடைய ஹிஸ்டரி உலகப்ரஸித்தமாகவன்றோவுள்ளது. தேவப்பெருமாள் ஸன்னிதியில் சுண்ணாம்பினால் போடுகிற நாமம் எது? கல்வெட்டான திருமண்காப்பு எது? அது எத்தனை? அவை இந்த தேவாலயத்தில் எப்படி ஏற்பட்டன? எப்போது ஏற்பட்டன? அவற்றை ஏன் இவர்கள் அழிக்க முயலவில்லை? இத்யாதிகளை ஆர அமர ஆராய்ச்சி செய்தால் ஆக்ரமண கர்த்தாக்களின் உண்மை உணரலாகும். வரதன் ஸன்னிதி வரலாற்றில் இவையெல்லாம் விசதம்.

40. இதற்குமேல் இந்த பூதிகந்தி எழுதிற்று;— "தேசிகபாத்ரத் தனியனைச்சொல்ல வடகலையார்க்கு ஹக்கு இருக்கத்தானிருக்கிறது; இல்லாமற்

போகவில்லை. ஆனாலும் வடகலையார்கள் பரமஸாத்விகர்களாகையாலே சாந்தியில் விருப்பினாலும் கலஹத்தில் வெறுப்பினாலும் அந்த பாத்திரத்தைச் சொல்ல முயற்சி செய்யவில்லை'' என்று. இதனுடைய சுவடியில் இதுதான் பரமஸாத்விகமான வார்த்தை. 'தேசிகபாத்ரத்தனியனைச் சொல்ல வடகலையார்க்கு ஹக்கு இருக்கத் தானிருக்கிறது' என்கிறதே; எந்த இடத்தில் சொல்ல ஹக்கு இருக்கிறது என்று கேட்க வேணுமிதை. இந்த ஹக்கை இல்லை செய்வாரார்? தம்தம் இல்லங்களிலே சொல்லலாம்; திருவிருத்த ப்ரஹ்மரத் கோஷ்டிகளில் சொல்லலாம். பஹிர்வீதிகளிலே புதிது புதிதாகக் கட்டிக்கொண்டிருக்கிற தேசிகாலயங்களிலே சொல்லலாம். தடை செய்வாரார்? மற்ற விடங்களில் பட்ட பரிபவம் ஒரு மஹா பாரதமிறே.

41. இதற்குமேல் பூதி ஒன்று எழுதிற்று கலியின் கொடுமையால் திவ்யதேசங்கள் அவைதிகர்களான ஏகதேசிகளின் ஆளுகையிலே யிருக்கின்றபடியால் அதனால் கெட்டுப்போன கோவில்களைக் கண்ணெடுத்தும் பாராமலிருப்பதுதான் ஸாத்விகர்களுக்கு உற்றது; ஆனாலும் ப்ரதிபக்ஷிகளான இந்த ஏகதேசிகள் கோவில்களில் அதிகமான மரியாதைகளை அநுபவித்து வருவதால் அதுகண்டு ஆறியிருக்கமாட்டாமல் கோவில்களிலே நாமும் புக்குக் கலஹம்பண்ண வேண்டியதாகிறது; இதைப்பற்றி நமக்கு வருத்தமே—என்று. இவை பூதிகந்தியின் வாசகங்கள்.

42. இது ஸத்யம்; வயிற்றினுள்ளே யிருப்பது வெளிவந்து விட்டது. 'கோவில்களெல்லாம் தென்கலையாருடைய ஆளுகையிலே யிருப்பதனாலே அங்கு நமக்குக் கார்யமில்லை' என்று கொண்டே இவர்களது முன்னோர்கள் நெடுங்காலம் ஒதுங்கி வர்த்தித்தார்கள். அப்படியே வர்த்தித்தவர்கள், கோவில்களில் தென்கலையாருடைய விஜ்ரும்பணங்களைக் கண்டு பொறுத்திருக்கமாட்டாமல்தான் எவ்விதமான அக்ருத்யத்தைச் செய்தாகிலும் தங்கள் பொறாமைக்குப் போக்குவீடு செய்து கொள்ளவே வேணுமென்று துணிந்து த்ருஷ்டர்களாய் விஷமங்கள் செய்து வருகிறார்கள். இதற்கு இந்தபூதி வருந்துவதாக எழுதுகிறது. இது உண்மையாயிருந்தால் குலிங்கசகுனி வருத்தியை இது கைப்பற்றாமலிருப்பதுதானுற்றது.

43. பூதியின் இந்தஹாஹாகாரத்தைப்பாருங்கள் "ரங்கநாதன்ஸன்னிதியில் ப்ரபத்தி பண்ணுவோமென்று புகுந்தால் அது செய்யக்கூடாதென்று அவ்விடத்து அதிகாரிகளான தென்கலையார்கள் தடை செய்கிறார்கள்! ஹாஹா! என்ன கஷ்டகாலம்! என்று; "ப்ரபத்தி பண்ணுவோமென்று புகுந்தால்" என்கிறவிதற்கு என்ன அர்த்தமேன்று. இதனையே கேட்போம். "த்ரௌபத்யா ஸஹிதாஸ்ஸர்வே நமச்சக்ருர் ஜநார்தநம்" என்கிற வசனத்தை தேசிகன் ப்ரபத்திக்குப்ரமாணமாக எடுத்திருப்பதால் 'நமஸ்காரம் பண்ணுவோமென்று புகுந்தால்' என்கிற பொருள் விவக்ஷிதமாயின், இது அங்கே சென்று எத்தனை நமஸ்காரங்கள் செய்தாலும் தடுப்பாரில்லையே; அஸக்ருந் நமஸ்காரத்தில் அர்ச்சகர்களுக்குத் தடையேயொழிய இது ஆயிரந்தடவை விழுந்தெழுந்தாலும் கேட்பாரில்லையே. அல்லது, த்வயோச் சாரணத்தைத் தடுக்கிறார்களென்கிறதா? அதையும் தடுப்பாரில்லையே. அசாஸ்த்ரீயமாக ஏதோ செய்யப் போனதாகவும், அதைத் தடை செய்ததாகவும் இதனுடைய அழுகையிலிருந்து தெரிய வருகிறது. அப்படிப்பட்ட தடை ஸகல ஸன்னிதிகளிலுமுண்டே. இவற்றினுடைய நவீந துஷ்க்ருத்யத்தை எந்த கோவிலிலும் அனுமதிக்கமாட்டார்களே. அந்தோ! அர்த்தமில்லாதபடி ஏதுக்கழுகிறது.

44. பூதிகந்தி ஆச்சரியமான விஷயமொன்று அத்புதமாக எழுதியது. இது எழுதியதை இதுவேதான் மெச்சிக் கொள்ளவேணும். இது நாம் பலகால் காட்டியதே. அதாவது; ஸ்ரீரங்கதேவஸ்தானம் முழுவதும் தென்கலையாகக் காணப்படுவதற்கு உண்மையான காரணமொன்று கண்டு பிடித்து விட்டது. அங்கு எல்லாம்

வடகலேயாகவேயிருந்ததாம்; ஒவ்வொருவரையும் கட்டாயப்படுத்தித் தென்கலேத் திருமண்காப்பு சாத்திக்கொள்ளும்படியாகச் செய்து விட்டார்களாம். இது எப்படி தெரிகிறதென்னில்; இந்த ஸ்ரீரங்கதேவஸ்தாநத்தின் ஸர்வாதிகாரமும் முற்காலத்தில் ஒருவரிடத்தில் இருக்கையில் அவர் செய்தவொரு ச்ராத்தத்தில் தென்கலே ஸ்வாமியொருவரை நிமந்த்ரிக்க நேர்ந்து விட்டதாம்; ச்ராத்த முடிவில் "ஸகலம் ஸம்பூர்ணம் த்ருப்தோஸ்மி" சொல்ல வேண்டிய ஸமயத்தில் "ஸந்நிதித் திறவுகோலேக் கொடுத்தாலொழிய த்ருப்தி சொல்லமாட்டேனென்று அந்த தென்கலே ஸ்வாமி சொல்லவே, அந்த ச்ராத்த கர்த்தாவானவர் ச்ராத்தம் கெட்டுப் போக வொண்ணதென்று கோவில் சாவிகளேக் கொடுத்து ச்ராத்தபூர்த்தி செய்து கொண்டார் என்று ஐதிஹ்யமிருப்பதால், இப்படிப்பட்ட நிர்ப்பந்தத்தினுலேயே தேவஸ்தான நிர்வாஹ அதிகாரத்தை இவர்கள் ஆக்ரமித்துக் கொண்டவர்கள்; ஆகையாலே ஸ்ரீரங்கதேவஸ்தான புருஷர்களே யெல்லாம் இவர்கள் கட்டாயப்படுத்தியே வடகலே நாமத்தை மாற்றித் தென்கலேயாக்கிக் கொண்டார்களென்பது எளிதாகத் தெரியவருகிறது என்று.

45. ப்ராமாணிக மஹாநுபாவர்களே! இந்த வொரு விஷயத்தோடு ப்ரக்ருத விவாதம் முற்றிலும் முடிவு பெற்று விட்டதென்பதில் என்ன ஸந்தேஹம். ஸ்ரீரங்க தேவஸ்தானத்தைப்பற்றின மேலேகண்ட ஐதிஹ்யம் பொய்யானது என்று பழித்து விடாமல் ப்ராமாணிகமேயென்று இசைந்து கொண்டதிது. "விததைதிஹ்ய ஸஹஸ்ரவர்ணநே" என்றதில் இதையும் சேர்த்துவிடாமல் இது உண்மையான ஐதிஹ்யமே யென்பதை யொப்புக்கொண்டுவிட்டது; ஸ்வாமி யெம்பெருமானுர் நியமனத்தினுல் கூரத்தாழ்வானே ச்ராத்த நிமந்த்ரணத்தில் எழுந்தருளியிருந்து ஸ்ரீரங்க தேவஸ்தானத் திறவுகோலே ஸதுபாயமாகக் கைப்பற்றி ஸ்வாமியிடம் கொணர்ந்து கொடுத்தார்; அன்று முதலாக ஸ்ரீரங்கநாத ஸந்நிதி ஸாம்ராஜ்யம் ஸ்வாமியின் கைப்பட்டது; அப்போதே தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்து ஸ்ரீரங்க ஸ்ரீயை அபிவிருத்தி செய்தருளினுர்—என்று கோயிலொழுகு முதலான பழைய நூல்களிலே விளங்குகின்ற ஐதிஹ்யத்தைத் தென்கலேயார் வடகலேயாரென்கிற வாசியில்லாமல் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் ஒருமிடறுகப் போற்றி வருகிருர்கள். வடகலேயாயிருந்த தேவஸ்தானத்தைத் தென்கலேயாக்குவதற்காகவே ஸ்ரீராமாநுஜரும் கூரத்தாழ்வானும் கூடி இப்படிப்பட்ட சூது செய்தார்களென்று இதனுடைய ஸித்தாந்தம் வெளிவந்துவிட்டது. இதை வடகலேஸமுதாயம் ஒப்புக்கொண்டுவிட்டது.

46. நெடுநாளாக நாமெல்லாரும் நினைத்திருந்தது என்னவென்ருல், ஸ்ரீரங்க தேவஸ்தானம் ஸ்வாமி திருக்கையாட்சியில் வந்து சேருவதற்கு முன்னே அங்கு ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ விசேஷமாகக் குடிகொள்ளாமலிருந்தது; ஆழ்வார்கள் பதின்மரும் ஆச்சரியமாக ஈடுபட்ட பூலோக வைகுண்டமான இந்த திவ்யதேசம் இப்படி ஸாமாந்யமாக இருக்கிறதே; இதை லோகோத்தரமாகத் திருத்த வேண்டாவா என்று ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளம்பற்றி ஸ்ரீரங்க நிர்வாஹ ஸாம்ராஜ்யமெல்லாம் தம் கைப்பட்டதாக ஆக்கிக்கொண்டு தம்முடைய சிஷ்யவர்க்கங்களே யெல்லாம் தேவஸ்தானத்தின் நாநா கைங்கர்ய நிர்வாஹத்திலே அமர்த்தி இப்போது உலகமெல்லாம் அநுபவித்து ஆனந்திக்கிறவகையை யுண்டாக்கியருளினுர்—என்று இவ்வளவே நெடுநாளாக க்ரஹித்திருந்தோம். ப்ரஹ்மஸ்ருஷ்டி காலந்தொடங்கி வடகலேயாயிருந்த இந்த தேவஸ்தானத்தைத் தென்கலேயாக்குவதற்கே ஸ்ரீராமாநுஜர் இப்பாடுபட்டார் என்று இந்த பூதிகந்தி தெரிவித்து விட்டது; பொய்யாயிராது. மிகவும் ப்ராமாணிகமாகவேதானிருக்கும். இதனுல், தென்கலே ஸம்பிரதாயத்திற்கு ஸ்ரீராமாநுஜரும் கூரத்தாழ்வானுமே தலேவர்களாக இருந்தவர்களென்றும், இவர்களே ஸ்ரீரங்கதேவஸ்தானத்தை இப்போது நாம் காண்கிற ரீதியிலே தென்கலே மயமாக ஆக்கினுர்களென்றும், ஸகல மிராசுகளிலும் தென்கலே

யாரையே நியமித்தருளினது இந்த உடையவரும் ஆழ்வானுமேயென்றும் இதனுடைய கையினாலேயே நன்கு தேறிவிட்டது. நாம் ராமாநுஜதயாபாத்ரபத்ய சரித்ர நூலிலே விரிவாக எழுதியிருந்த விஷயங்களுக்கு பூதி பதிலெழுதியிருப்பதன்றோவிது.

47. ஸ்ரீ பரகாலமடத்து ஸ்ரீகார்ய துரந்தரரான கஸ்தூரி ஸ்வாமி 1954 வருஷத்தில் நாலெட்டு ஏடுகளில் ஒரு பதிலுரையை வெளியிட்டு, உடனே திருநாராயணபுரம் வித்வான் ஸ்வாமியால் வெளியிடப்பட்டுள்ள மிக விரிவான பதிலுரைகளை (7—5—4ல்) பெற்று உண்மையைத் தெரிந்துகொண்டு, ஏதோ ப்ரமித்துத் தாம் வெளியிட்டதற்கு மிகவுமநுதபித்துத் திசைநோக்கித் தொழுதிறைஞ்சி நின்றார். அந்தச்செய்திகளை கூபகூர்மஸதர்மா சிறிது மறியாது பழம்பாட்டுக்களையே பாடவந்து உபாலம்பங்களாலே வெற்றிபெறப் பார்க்கிறது. "கஸ்தூரிஸ்வாமி பரமஸாதுவாய் உபாலம்பஸரணிக்கு வைதேசிகராயிருந்தபடியாலே வெற்றி பெற்றிலர்; அங்ஙனன்றிக்கே உபாலம்பஸமர்த்தரான நாம் வெற்றிபெறத் தடையுண்டோ?" என்று நினைத்துமெழுதுகிறதுபோலும். இங்கே ப்ராமாணிகமான விஷயங்களை விளக்கமாகத் தெரிவிக்கிறோம் கேளீர்.

48. கஸ்தூரி ஸ்வாமி தமது சுவடியில் (பக்கம் 6ல்) 1709 ஆம் வருஷத்தில் திருநாராயணபுரம் ஸந்நிதியில் ராமாநுஜதயாபாத்ரபத்யம் சொன்னதைப்பற்றி விவாதம் உண்டானதாகவும் அந்த விவாதம் ராஜ ஸ்தானத்திற்குச் சென்றதாகவும் சில விஷயங்களை ஸப்ரமாணமாகத் தெரிவித்தார். அது பாத்ரபத்ய சரித்ரத்தில் நாம் எழுதியிருந்த விஷயத்தை நன்கு நிலைநாட்டி நின்றது. பெரிய பரகால ஸ்வாமி யென்பவரே இந்தத் தனியனைச் செய்தவரென்றும், அவரே முதன் முதலாக இதைத் திருநாராயணபுரத்தில் சொல்லத் தொடங்கி விவாதத்தை யுண்டாக்கினாரென்றும், அந்த விவாதம் ராஜ ஸ்தானத்திற்குச் சென்றதென்றும், நாம் விரிவாக எழுதியிருந்ததெல்லாம் கஸ்தூரி ஸ்வாமியால் ப்ரதிஷ்டாபிதமாய் விட்டது. பெரிய பரகால ஸ்வாமி கி. பி. 1706-ல் (அதாவது இற்றைக்கு 285 வருடங்களுக்குமுன்பு மடாதிபதியாகி 1737-ல் திருநாடு அடைந்ததாக அவரே நிரூபித்தார். பாத்ரபத்ய விவாதமோ 1709-ல் உண்டானதாக அவரே சாஸனம் காட்டினார். இதனால் பெரிய பரகாலஸ்வாமி தாம் பரமபதமடைவதற்கு 28 வருஷங்களுக்கு முன்னே இந்த பாத்ரத் தனியன் விவாதத்தைக் கிளப்பினார் என்று பரகால மடத்தவர் கைவிளக்குக் காட்டினாராயிற்று. ஸ்ரீசைலேச தயாபாத்ரம் சொன்னதைப்பற்றி விவாதமுண்டானதாக அந்த ஸ்வாமி எழுதவில்லை. ராமாநுஜாபாத்ரம் சொன்னதைப் பற்றியே விவாதமுண்டானதாக எழுதினார். எதைப் புதிதாகச் சொல்லத் தொடங்குகிறார்களோ அதைப்பற்றித் தானே விவாதமுண்டாகும். ராமாநுஜாபாத்ரம் நூதனமென்பது கஸ்தூரி ஸ்வாமியின் கையினாலேயே ஸப்ரமாணமாக ஸ்தாபிக்கப்பட்டு விட்டது. இதில் ஸந்தேஹமுண்டோ? இதில் மாறுபாடுண்டானால் தாராளமாக எழுதலாம்.

49. இந்த பாத்ர விவாதம் தோன்றி ஏறக்குறைய 245 வருஷ காலமாகிறது; பத்தெட்டு திவ்யதேசங்களில் இந்த விவாதமுண்டாயிற்று. எந்த திவ்யதேசத்திலும், "ராமாநுஜாபாத்ரம் என்கிற புதிய ச்லோகத்தைப் புதிதாகச் சொல்ல ஆரம்பித்தார்களென்றும், இவர்களை தண்டிக்க வேணும்" என்றும் தென்கலையார்கள் வாதிகளாக நீதிமன்றங்களுக்குச் சென்று பரிஹாரமடைந்திருக்கிறார்களே தவிர ஸ்ரீசைலேசபாத்ரம் புதிதாகச் சொன்னார்களென்கிற பிராது ஏதத்க்ஷணபர்யந்தம் ஒரு திவ்யதேசத்திலும் உண்டானது கிடையாது. அவதாரஸ்தலமான தீபப்ரகாச ஸந்நிதியிலுங்கூட ராமாநுஜாபாத்ரம் சொல்ல ஆரம்பித்தார்களென்கிற பிராது ஏற்பட்டு புதிதாக அதைச் சொல்லக்கூடாதென்று தடை ஏற்பட்டதேயொழிய வேறில்லை. தடையுத்தரவுகளோ தண்டனைகளோ எல்லா ப்ரபாவங்களும் அந்தத் தனியனுக்குத்தான். திருநாராயணபுரத்திலும் இத்தனியன் விவாதமுண்டானது

அபலபிக்க முடியாமல் கஸ்தூரி ஸ்வாமி கையினாலேயே வெளிவந்து விட்டது. அங்கும் இதற்குத் தடையுத்தரவு பிறக்கவேண்டியது அவசியமாயிருக்க அது பிறவாமைக்கு என்ன காரணம் என்பதும் கஸ்தூரி ஸ்வாமியாலேயே ஸ்பஷ்டமாக வெளியிடப்பட்டு விட்டது. எங்ஙனே? மைஸூர் மஹாராஜ பரம்பரையானது பரகால மடத்து சிஷ்ய பரம்பரையென்பதை கஸ்தூரி ஸ்வாமி விரிவாக நிரூபித்தார். அதைப்பற்றி விவாதமே கிடையாது, ப்ரஸ்தாவமும் கிடையாது. அப்படியிருக்க எதற்காக அதைப்பற்றி ஸாக்ஷியங்கள் காட்டுகிறாரென்று திகைக்க வேண்டியிருந்தது; பெரியபரகால ஸ்வாமி திருநாரயணபுரத்தில் நூதநமந்த்ரத்தைச் சொல்லி விவாதத்தைக் கிளப்பினபோது அவருடைய சிஷ்யரே மைஸூர் ராஜாவாக இருந்தபடியால் ஸ்வாசார்யருடைய தப்புக்காரியத்தை தான் கண்டிக்க முடியாமல் தென்னாசார்யஸம்ப்ரதாயஸ்தர்களின் அர்ஜியைத்தள்ளுகடைசெய்துவிட்டாரென்கிற உண்மையைத் தெரிவிக்க வேண்டியே "மைஸூர் மஹாராஜ பரம்பரையானது பரகால மடத்து சிஷ்ய பரம்பரை காணும்' என்று அஸ்தாநேபி அநவஸரேபி ஆதாரங்களுடன் நிரூபித்தாராயிற்று. மைஸூர் ராஜ விருத்தாந்த வுண்மை.

50. திருநாராயணபுரத்தில் ராமாநுஜதயாபாத்ர விவாதம் ஏற்பட்டு அது ராஜ ஸ்தானத்திற்கும் எட்டியகாலத்தில் ராஜா ஒன்று செய்திருக்கலாம்; அதாவது, "அந்த ஸந்நிதியில் ராமாநுஜாபாத்ரந்தான் சொல்ல வேண்டியது. ஸ்ரீசைலேச பாத்ரம் சொல்லவே கூடாது" என்று கடுமையாகக் கட்டளையிட்டிருக்கலாம். ஆசார்யரான பரகால ஸ்வாமியிடத்தில் ராஜா தான்வைத்திருந்த பக்திக்கு இது மிகவும் தகும். ஆனால் அந்த ராஜா அப்படி கட்டளையிடவில்லை, ஏனென்றால், "புதிதாக ராமாநுஜாபாத்திரத்தைப் பரகால ஸ்வாமி முதலானவர்கள் சொல்லத் தொடங்கி எங்களுக்குத் த்யான விரோதம் செய்கிறார்கள்; இதைத் தடுக்கவேணும்" என்று தென்கலையார் ராஜ ஸகாசத்தில் கொடுத்த அர்ஜியில் ப்ரதிவாதிஸ்தானத்தில் பரகால ஸ்வாமி திருநாமம் இருந்தபடியால் ராஜா ஸ்வாமியை விசாரிக்க நேர்ந்தது. அப்போது ஸ்வாமி ராஜாவுக்கு என்ன சொன்னாரென்றால் "இதில் நீ எதற்குத் தலையிடுகிறாய்? என் தகப்பனார் தாதாக்கள் காலத்திலிருந்து நடந்து வருவதை நான் தடுக்கமுடியாது" என்று ஒரே வார்த்தையில் முடித்துவிடு" என்று சொன்னார். ராஜாவும் அப்படியே செய்துவிட்டார், 'நாம் நூதனமாக ஆரம்பித்த பாத்ரத்தனியனுக்கு ஒரு ஹானி நேராதபடி செய்து கொண்டோமாகில் அதுபோதும்; பிறர் ஏதையாவது சொல்லிக் கொள்ளட்டும்' என்று நினைத்தே அவர் ஸ்ரீசைலேச பாத்ரத்தைத் தடை செய்யும்படி சொல்லவில்லை. விஷயம் இவ்வளவே.

51. திருநாராயணபுரத்தில் புதிதாக வொருநாள் ராமாநுஜாபாத்ரம் சொல்லத் தொடங்கினதும் அதன்மேல் மைஸூர் மஹாராஜாவிடத்தில் தென்கலையார் முறையிட்டுக் கொண்டதுமாகிய இந்த சரிதை 200 இருநூறு வருஷங்களுக்கு மிகமுன்னே நடந்ததாகையால் அதைப்பற்றி இவர்களெழுதினாலும் ஸரி, நாமெழுதினாலும் ஸரி, யாரெழுதினாலும பயன்படாது- ரிகார்டுகளைக் கொண்டே இதனுண்மையை நாமறிய வேண்டும் திருநாராயணபுரம் ஸந்நிதியில் தோன்றிய இந்த குத்ஸிதபாத்ரத் தனியன்சண்டை அந்த கோவிலோடு நின்று விடவில்லையே. உடனே அந்த விவாதம் மைஸூர் ராஜஸன்னிதானத்தில் எட்டிற்று. அவ்வளவோடும் நில்லாமல் அந்நாள் தொடங்கியே தென்னாட்டிலும் தேவப்பெருமாள் ஸந்நிதி முதலான விடங்களில் தலைகாட்ட வாரம்பித்தது. அதற்கு நமது நாட்டில் கிடைத்த ஸத்காரங்கள் த்வீபாந்தர பர்யந்த ப்ரஸித்தி பெற்றிருக்கையாலும் சிறுவர்களுக்குங்கூட அவை விசதமாகத் தெரிந்திருக்கையாலும் இதைப்பற்றி இங்கு விரிவு வேண்டா. மைஸூர் ராஜ்யத்தில் என்னமுடிந்தது என்பதே ப்ரக்ருதம் நிஷ்கர்ஷிக்கப்படவேண்டிய விஷயம். அந்த முடிவை ஸாரமாக வெடுத்து உங்கள் கையில் தருகிறேனிங்கு,

52. (1) "திருநாராயணன் ஸன்னிதியில் வடகலையார் புதிதாக ராமாநுஜ பாத்ரம் சொல்லத் தொடங்கி சண்டையை உண்டு பண்ணினார்கள்; இதைத் தடுக்க வேணும்" என்பதாகத்தான் முதன்முதலாக விவாதாரம்பம். இது பரகாலமட ஸ்ரீகார்யதுரந்தரராலும் நிஸ்ஸந்தேஹமாக எழுதப்பட்டுள்ள விஷயம்.

(2) இந்த விவாதமானது மைஸூர் ப்ரபுக்களான ஒடையார்களுக்குள் எந்த ஒடையாரிடம் சென்றது? என்பதை அடுத்தபடியாக கவனிக்கவேண்டும். அதையும் பரகாலமடமே கல்வெட்டாக எழுதி வைத்திருக்கிறது. என்ன எழுதி வைத்திருக்கிறது தெரியுமா? இந்த ராமாநுஜாபாத்ரத்தனியன் உண்மையாய் எந்த காலத்தில் தோன்றினதாக ப்ராமாணிகர்கள் எழுதி வைத்திருக்கிறார்களோ சொல்லிவருகிறார்களோ; அந்த காலத்திலிருந்த ஒடையாரிடத்தில் தான் தென்கலையார் முறையிட்டுக் கொண்டிருக்கிறார்கள். (அதாவது) 1709ஸு. இதை மறைக்காமல் மாறுபடுத்தாமல் பரகாலமட ஸ்ரீகார்ய கர்த்தா ஒப்புக்கொண்டு விட்டார். இதனால் 250 வருஷங்களுக்கு முன்னே ராமாநுஜாபாத்ரத்தின் பேச்சே கிடையாதென்பது கல்வெட்டாக முடிந்து விட்டது. இது தோன்றினவன்றே தொடங்கிச் சண்டை; சண்டை தொடங்கின நாளே பிடித்து இதற்கு வாசா மகோசரமான பங்கம். இதையும் மத்யஸ்தர்கள் திடமாக ஞாபகத்தில் கொள்ள வேணும்.

(3) கடைசியாக முக்கிய கவனிப்பு. எந்த ஒடையாரிடம் இந்த விவாதம் சென்றதோ அந்த வொடையார் இதைப்பற்றி ஸாக்ஷிவிசாரணையோ ரிகார்டு பரிசிலனையோ ஏதாவது செய்ததுண்டோ? எதுவும் செய்தது கிடையாது. அந்த விவாதத்தில் ப்ரதிவாதியாயிருந்தவரும் தனக்கு குருவாயிருந்தவருமான பரகால ஸ்வாமியின் சொற்படி நாலுவரி யெழுதி தென்கலையார் மனுவைத் தள்ளிவிட்டார். கர்ணாடராஜ்யச் செய்தியிது.

53. தென்னாடுகளில் தோன்றினபாத்ரத்தனியன் விவாதங்கள் ஒவ்வொன்றும் எப்படி முடிந்திருக்கிறது தெரியுமா? அனேக ரிகார்டுகளை சோதனை செய்தும், ரிகார்டு ஏற்படாத விடங்களில் பிரபல ஸாக்ஷிகளை விசாரித்தும், மற்றும் பலவகைகளாலே உண்மை கண்டறிந்தும் மத்யஸ்தர்களான ஜட்ஜ்கள் முடிவு செய்திருக்கிறார்களென்பது நிர்விவாதம். ஒடையார் இந்த ஜோலிக்குப் போகவேயில்லை. தன் குரு எழுதச் சொன்னபடி எழுதினார். ஒடையார் ஸ்ரீசைலேச பாத்ரமறிந்தாரா? ராமாநுஜாபாத்ரமறிந்தாரா? ஒன்று மறிந்தவரல்லர்.

54. உண்மையில் மைஸூர் ராஜாவோ மற்று எந்த ராஜாவோ கோவிலில் என்ன நடக்கிறது, யார் எது சொல்லுகிறார் என்பதை ஈஷத்தும் அறியகில்லார். அவர்களுக்கு ஸ்ரீசைலேச பாத்ரமும் தெரியாது. ராமாநுஜா பாத்ரமும் தெரியாது. ஸேவாகாலங்களில் கோவில்களுக்கு ராஜாக்கள் வருகிறவாகளேயல்லர் வந்தாலும் அங்கே காது கொடுப்பவர்களுமல்லர். காது கொடுத்தாலும் வாசி தெரிந்துகொள்ளக் கூடியவர்களுமல்லர். ஆங்காங்கு நீதி செலுத்தும் பிரபுக்கள் ஸாக்ஷி விசாரணைகளைச் செய்து உண்மையைப் பல முகமாகத் தெரிந்து கொண்டு தீர்ப்பு செய்கிறார்கள். மைஸூர் ராஜா ராமாநுஜாபாத்ர விவாதமுண்டானபோது ரிகார்டுகளைப் பார்ப்பதோ ஸாக்ஷி விசாரணைகள் செய்வதோ எதிலும் செல்லவில்லை. கோவிலில் சண்டை செய்பவர்களைச் சுட்டுவிடும்படி கட்டளையிடுவேன்' என்று நேரில் சொன்னதாக ஜகத்ப்ரஸித்தமான கர்ண பரம்பரை. அந்த விவாதத்திற்கு மூலகந்த பூத

ரென்றும் பீஜபூதரென்றும் ப்ரஸித்தரான பெரிய பரகால ஸ்வாமி கட்டளையிட்டபடி எழுதிப்படித்த ராஜாவின் காகிதத்தை யெடுத்துக் காட்டுவதனுல் என்ன பலன் கிடைக்கும்? முக்கியமாக ஒரு பலன் கிடைத்தது; அதாவது, 245 வருஷங்களுக்கு முன் ஒரு பரகால ஸ்வாமி இந்த பாத்ரபத்யத்தை ஸ்ருஷ்டித்துத் திருநாராயணபுரம் ஸன்னிதியில் சொல்ல ஆரம்பித்து விவாதத்தை விளைத்தாரென்பது ஸத்யமானது தான்—என்று ஸ்தாபித்துக் கொடுக்கையாகிற பலனே கைகண்ட பலன். 'பொதுவாகத் தனியன் விஷயமான விவாதம் ஏற்பட்டது' என்று கஸ்தூரி ஸ்வாமி எழுதியிருக்கலாம். அப்படி எழுதாமல் ராமாநுஜாபாத்ரம் சொன்னதற்காக விவாத மேற்பட்டதென்றே தம் திருக்கையாலெழுதிவிட்டார். உண்மையில் இவர் எழுத வில்லை, உலகுக்கு ஸத்யத்தைக் கைகொள் கனியாகக் காட்ட நினைத்த தெய்வம் எழுதுவித்தது. இதில் என்ன ஸந்தேஹம்?

55. திருநாராயணபுரத்தில் நாளைக்கும் பார்க்கலாம். அங்கு தென்னுசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களே விசேஷமாக திவ்யப்ரபந்தம் ஸேவிப்பவர்கள்; ராமாநுஜாபாத்ரம் கூசலிடுவதற்கென்று திவ்யப்ரபந்த கந்தமேயறியாதவொரு வடகலை வைஷ்ணவரை பரகால ஸ்வாமி வேதநம் கொடுத்து நியமித்திருக்கிருர். தவிர, திருநாராயணபுரத்தில் உடையவர் எழுந்தருளியிருந்து செங்கோல் செலுத்தின காலத்திலே 'ஐம்பத்திருவர்' என்று ஸங்கேதமான ஒரு ஸமுதாயத்தை ஏற்படுத்தினர். அவர்களே ஸ்தானிகர்கள். அவர்களத்தனைபேரும் தென்கலை ஸம்பிரதாயஸ்தர்களே யென்பதை ப்ரத்யக்ஷமாகக் காணலாம். அப்படிப்பட்ட மஹான்கள் மலிந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தனியனின் அநுஸந்தானம் குறையற்றிருந்ததென்பதில் யாருக்கு என்ன விவாதமிருக்கும். அங்கே ராமாநுஜா பாத்ரம் நெடுங்காலமாக இருந்து வந்ததென்ருல் இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ?

56. "திருநாராயணபுரத்தில் ராமாநுஜாபாத்ரம் 330 வருடங்களுக்கு முன்னே செங்கோல் செலுத்தின ராஜ வொடையார் காலத்திலேயே சொல்லப்பட்டு வந்ததென்று தெரிகிறது" என்கிற அபத்தம் இனித் தலைகாட்டமாட்டாது. "என்னுடைய தகப்பனுருடைய உபநயநத்தில் குமாரபோஜநஸ்தானம் எனக்கே ப்ராப்தமாயிற்று; அப்போது கிடைத்த உத்தரீயந்தான் இதோ கட்டிக் கொண்டிருக்கிறேன் காண்மின்; பிதாமஹியின் பும்ஸவநஸீமந்தோந்நயந கர்மணி கிடைத்த ஸம்பாவனையைக் கொண்டே இந்த மோதிரம் செய்வித்து அணிந்து கொண்டிருக்கிறேன் பாருங்கள்" என்று இங்ஙனே பல வார்த்தைகளை ஒரு வாயாடி பேசிக் கொண்டிருப்பனும்: அது கேட்டுப் பலரும் இது நல்ல விநோதவார்த்தையென்று உகந்திருப்பர்களாம். ராமாநுஜாபாத்ரத்தைப்பற்றி இவர்கள் சொல்லுவதும் அந்த பாலிச பாஷிதத்தையேயொத்ததாயினும் விவேகிகள் இதற்கு உகவார்கள்; அசட்டு வர்த்தையென்று வெறுத்திருப்பர்களத்தனை.

57. உலகமெல்லாம் பரிக்ரஹித்து ஓரிடத்திலும் ஒரு பங்கமுமடையாமலிருக்கிற *ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியனுக்கு ஒரு வியாக்கியானமும் தோன்ருமலிருப்பது; அது அவதரித்த நாள் இன்னதென்று காட்டாமலிருப்பது, எங்கும் பாதுகா ஸஹஸ்ரம் பெற்று வருகிற பொனெக்கலப் பாத்திரத்திற்குப் பலபல வியாக்கியானங்கள் மிக விரிவாக உண்டாயிருப்பது, இது பிறந்ததற்கு வருஷ மாஸதிதி வாரநக்ஷத்ர லக்னகரண ஹோரைகளையும் தெரிவித்துப் பலர் ச்லோகங்களெழுதுவது, வெட்கமின்றி இதற்கு உத்ஸவங் கொண்டாடுவது, அந்த ஸ்ரீமான் வேங்கட தனியன் கேட்பாரற்றிருப்பது—ஆகிய இவ்விஷயங்களைச் சற்று விமர்சித்தாலே இதன் பண்டவாளங்கள் கையிலங்கு நெல்லிக்கனி யாகுமே. அந்தோ! இந்த அற்பவிஷயத்தை ஆராய்ச்சி செய்ய இவர்கள் கூட்டத்தில் ஆளில்லையா?

58. இந்த பாத்ரத்தனியனுக்கு வாத்ஸ்ய அஹோபிலாசாரியர் வியாக்கியான மெழுதியிருக்கிறாராம். அவர் நானூறு வருஷங்களுக்கு முற்பட்டவரென்று சாஸனம் காட்டியிருக்கிறார்களாம். அதற்கு நேர்நின்று நாம் விடை கூறமாட்டாமல் அந்த நிரூபணங்களைப் பாராதது போலவே அபிநயிக்கிறோமாம். ஐயோ! இப்படியும் ஒரு பாமர ப்ரதாரணமா? அந்த வாத்ஸ்ய அஹோபிலாசார்யரைப்பற்றி நாம் ஒவ்வொரு நூலிலும் விடையிறுத்து வருகிறோம். நமது ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் சரித்திரத்தில் (பக்கம்39-ல்) 55-ஆம் பாராவையே மறுபடியும் இங்கெடுத்துக் காட்டுகிறோம்;—

"பாத்ரத்தனியன் நவீனமன்று, புராதனமேயென்று இந்த நவீந வகுப்பினர் வாதிக்கும்போது ஒருகாரணம் வெளியிட்டார்கள்; அதாவது, இந்தத் தனியனுக்கு வாத்ஸ்ய அஹோபிலாசாரியர் என்பவர் வியாக்கியானம் செய்திருப்பதாகவும், அவர் ஐந்நூறு வருஷங்களுக்கு முற்பட்டவரென்றும் எழுதினார்கள். இதிலிருந்து ஒருபாணம் வெடித்தது. அந்த வாத்ஸ்ய அஹோபிலாசாரியர் செய்த வியாக்கியானம் அச்சிடப் பட்டிருக்கிறது. அதில் அவருடைய அழுகை ஸ்பஷ்டமாகக் காண்கிறது. அதாவது, இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியனைத்தான் கோவில்களிலெல்லாம் சொல்லவேண்டும்; ஆனால் இதைச் சொல்லாமல் வேறு தனியனை (ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனை) எங்கும் வெற்றி பெற்றிருப்பதான து கலியின் கோலாஹலம்; பொறாமைக் காரர்களின் துஷ்ட சேஷ்டை—என்று நிந்தித்திருக்கிறார். இதனால் இந்தத் தனியனுடைய பங்கமே அவராலும் வெளியிடப்பட்டதாயிற்று. உண்மையில் அந்த அஹோபிலாசாரியார் நவீநரேயொழிய புராதனரல்ல ராமாநுஜ தயாபாத்ரத் தனியனைப் புராதனமென்று காட்டிக் கொள்வதற்கு இவர்கள் படுகிறபாடு வாசாம கோசரம். எப்பாடு பட்டாலும் அது நவீனமென்பதே கல்வெட்டாகி நிற்கிறது"— என்றிவ்வளவுமெழுதியிருக்கிறோம்.

59. பாத்ரபத்யசரித்ர ப்ரதிஷ்டாக்ரந்த வாக்யங்களையும் கேளீர்;—

"ராமாநுஜா பாத்ரம் ஓரிடத்திலும் செல்லுபடியாகவில்லை யென்றும் எங்கும் ஸ்ரீசைலேச தாயாபாத்ரமே ஓங்கிவருகிறதென்றும் ஸ்பஷ்டமாக வெடுத்துக் காட்டி, தென்கலையார்களை எம்பெருமான் தீவ்ரமாக தண்டிக்க வேணுமென்று பெருங்குரலிட்டு அழுதிருக்கிற வாத்ஸ்ய அஹோபிலாசார்யருடைய வியாக்கியானத்தைக் கண்டபாடம் செய்து ஸதா அநுஸந்திப்பதுதான் இவர்களுக்குத் தஞ்சமாகக் கடவது. அந்த வாத்ஸ்ய அஹோபிலாசார்யர் பரகாலமடத்துப் பதினைந்தாவது பட்டக்காரரிடத்தில் காலக்ஷேபம் செய்தவர் என்றெழுதியிருக்கிறார்கள். அதனால் மைஸூர் சீமையில் வாழ்ந்தவராக ஏற்படுகிற அந்த அஹோபிலாசார் காலத்தில் திருநாராயணபுரத்திலுங்கூட ராமாநுஜா பாத்ரம் பங்கப்பட்டதேயொழியப் பரிசு பெறவில்லை யென்பதுதான் அவருடைய விபுலநிந்தோக்திகளால் விசதமாகிறது. அத்யந்த நவீநரான அவரை ப்ராசீநராகக் காட்டுவதனால் கிடைக்கும் பலன் இதுவே." என்று பல பாஷைகளிலும் எழுதப்பட்டிருக்கிறது.

60. ஒரு தடவைக்குப் பலதடவை நாமெழுதி வெளியிடும் விஷயங்களைப் பாரா ததுபோல அபிநயிப்பவர்கள் இந்த பூதிகந்திகளேயொழிய, இவர்களெழுதுகிற அஸம்பத்தங்களைப் பாராதது போல் காட்டிக்கொள்ளுகிற கள்வம் நமக்கு எந்த நாளிலுமில்லை. நாம் ருஜு மார்க்கத்தைப் பற்றினவர்களாகையாலே நம்முடைய ருஜுவான வாதங்களைப் பொய்யாக்க இவர்கள் ஏழேழ்பிறவி தவம்புரிந்தாலுமாகாது. "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளிலே" என்கிற பழமொழியின்படி இவர்களின் புளுகுகள் ஒவ்வொன்றாக க்ஷணேக்ஷணே அலசியலசிக் காட்டப்பட்டு வருகின்றன வென்பதை உலகமெல்லாமறிந்திருக்கிறது. இவர்கள் நூற்றுவர்கூடி எத்தனை யெழுதினாலும் அத்தனையும் அத்புதமேயாகையாலே அடுத்தடுத்த க்ஷணத்திலேயே நம்மால் அடியறுக்கப்பட்டு வருகின்றனவென்பது மறக்கற்பாலதன்று.

61. வந்த்யாஸுதன் மாண்டபோதே அவனுக்கு சிரோபூஷணமாயிருந்த ககநாரவிந்தமும், அவன் கையில் ஏந்தியிருந்த சசவிஷாணசார்ங்கமும், அவனுக்கு நித்யஸ்நாநார்ஹமாயிருந்த மரீசிகாபயஸ்ஸும் அவனோடு கூடவே மாண்ட கணக்கிலே, வாத்ஸ்ய அஹோபிலாசார்யரோடு கூடவே ப்ரபந்த நிர்வாஹமும் பன்னீராயிரப்படி குருபரம்பரையும் மாண்டொழிந்தனவென்பதைத் திடமாகக் கொள்க.

62. அவ்யபதேச்யத்தனியனை யுத்தேசித்தே ஸ்ரீசைலேசாஷ்டகத்தில் எட்டாவது ச்லோகம் அவதரித்ததென்றும், ஸ்ரீசைலேசத்தனியனை முன்னே சொல்லி, அதற்கடுத்தபடி அவ்யபதேச்யத்தனியனைச் சொல்லி, அதற்குப்பிறகு *லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் சொல்லுகிற வழக்கமிருந்ததென்றும் வெள்காமலெழுதிற்று. அந்த அவ்யபதேச்யம் ஓரிடத்திலாவது பங்கமடையாமலிருந்தால் எதையும் எழுதலாம். அது புக்கவிடந்தோறும் பாதுகாஸஹரம் பெற்றுவரும் பரிசை நெஞ்சார அறிந்து வைத்தும் ஏதுக்கு அஸம்பத்தங்களை யெழுதி அபஹாஸ்யமாவது! அந்த அவ்யபதேச்யத்திற்கு 250 வருடங்களுக்கு முன்பு ஜீவிதமிருந்ததில்லை யென்பதை எத்தனை தட்வை பன்னிப்பன்னி யுரைக்கலாம்.!!

63. தேசிகனுடைய க்ரந்தங்களையும் அவருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களையும் நாம் நிச்சலும் சிந்தனை செய்து கொண்டிருக்கிறோமென்று பூதி எழுதுவது ஸத்யம் ஸத்யம். தேசிகக்ரந்த மாலைகளைப் பதிப்பித்தலும் அவற்றுக்கு வ்யாக்கியானங்களெழுதுதலும் அவற்றை ப்ரவசனம் செய்தலுமாகிய நமது நித்யகாலக்ஷேபம் நாடறிந்ததன்றோ. இவை ஒரு நொடிப்பொழுதும் நம் மனத்தைவிட்டகல்வதில்லை யென்றதும் ஸத்யமே. "தேசிகனுடைய சிஷ்ய பரம்பரை" என்றதுதான் ககநாரவிந்தம். தேசிகனுக்கு இருவரே சிஷ்யர்கள். அவர்களில் திருக்குமாரர்க்கு சிஷ்ய பரம்பரையுமில்லை, புத்ரபௌத்ர பரம்பரையுமில்லை. ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமியோ ஸந்ந்யாஸி. அவர் அவரோடு விச்ராந்தர். ஸ்ரீபரகால ஸ்வாமி (வர்த்தமானர்) தம்முடைய மடத்தின் வரலாறுகளை உள்ளது உள்ளபடி ஸாதிப்பர். ஒன்றான ப்ரஹ்மதந்த்ரயதிகளிடமிருந்து ஒரு தொடர்பும் கிடையாது. ஆக தேசிகனுக்கு சிஷ்ய பரம்பரையென்பது வ்ருதாபிமானம். இப்போது சிலரோ பலரோ தங்களை தேசிகாபிமானிகளாகச்சொல்லிக் கொள்ளுவதை நாம் அபலாபம் செய்யவில்லை. அவர்களனைவரும் நமக்கு உயிர் போன்றவர்கள். ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பந்நர்கள் எந்த வகுப்பிலிருந்தாலும் "அவரெம்மையாள்வாரே" "அவரெங்கள் குலதெய்வமே" என்றிருப்போம் நாம். அஸூயையென்கிற சொல்லுக்கு அர்த்தமே தெரியாமல் ப்ரலபிக்கின்றதிது. தவறான விஷயங்களை யார் கைப்பற்றினாலும் தகர்ப்போம் யாம். இதில் நாம் தென்கலை வடகலை முதலான எந்த பேதமும் நோக்குவதில்லை யென்பதை இந்தப் பூதியே தெரிந்துகொண்டு அதை எழுதியுமுள்ளது.

64. ஆத்மஸ்துதி பரநிந்தை யென்கிற பேச்சு முதன் முதலாக கீதைக்குத் தோன்றியது. ஒரு நாள் கீதை கேட்டு வந்தவன் "கீதையில் என்ன இருக்கிறது? ஆத்மஸ்துதி ஆறத்யாயம்; பரநிந்தை பத்தத்யாயம். இரண்டத்யாயங்களில் ஏதாவதிருக்கும்" என்றானும். அப்படியே இதுவும் எழுதி ஆறுதலடைகின்றது. "வயம் வா வயமேவ வா" என்று ஒரு மஹாகவியைச் சொல்லப்பண்ணின நாவீறு யாரையும் சொல்லப்பண்ணும். "எந்த விஷயமும் புத்தியில் கோணலாகவே படுகின்றது" என்கிற வார்த்தையை நம்மை நோக்கி இதுவும், இதை நோக்கி நாமும் தாராளமாகப் பொழிந்துவிடலாம். மத்யஸ்தர்களான மஹநீயர்களன்றோ உண்மை தெளிந்து நிர்ணயிக்கக் கடமைப்பட்டவர்கள். இதுவரை எத்தனை துறைகளில் நாம் இறங்கி நூல்களை எழுதி வெளியிட்டிருக்கிறோமோ, அத்தனை துறைகளிலும் பேரறிவாளர்கள் ப்ரவசராகப் போற்றியுள்ளார்களென்பது சர்வித சாவணமாயினும் ஸமயே ப்ராப்தே சொல்லித்தீரவேண்டியதே யாகிறது. அங்ஙனம் போற்றினவர்கள் பெரும்பாலும் வடகலை ஸம்பிரதாய நிஷ்டர்களான மஹாமஹா சிஷ்டர்களே யென்பது

ப்ரஸித்தம். அத்தகைய போற்றுதல் தனக்கு லவலேசமும் கிடைக்கவில்லையே யென்கிற பரிதாபம் 'ஸம்தாபயதி ஸ்வம் தேஹமாபாததலமஸ்தகம்.' போற்றினவர்களை அபலபிக்க முடியாமையால் அவர்கள் ஏதோ மயங்கிப் போற்றிவிட்டார்களென்கிறது. "கிம்பரஜநே க்ராமே ஹாஸ்யஃ கௌபீநவாந் நரஃ" என்கிற கணக்கிலே தானும் அப்படி மயங்கவேண்டியது தலைவிதியென்று தெரிந்து கொள்ளவில்லை யந்தோ! புநரபி ஸத்யம் சபாமஹே. நமது புத்தியில் அயுக்தமான விஷயம் தோன்றவே மாட்டாது. தோன்றுவது பிறர்க்கு ப்ரயாஸ சதங்களாலும் சலிப்பிக்க வொண்ணாதாகவேயிருக்கும். இதை இன்றளவும் உலகம் பார்த்துவருகிறது. மேலுள்ள காலமும் இங்ஙனமே பார்த்து வருமென்பதில் என்ன ஸந்தேஹம். "வாதேஷு நஃ கோவா சகஷுருதஞ்சயேதபி" என்கிற தேசிக திவ்ய ஸூக்தியநுஸந்தானம் "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள்செய்யு" மெம்பெருமான் படியிலே செய்து வைக்கு மென்னதட்டுண்டோ?

65. "ஒன்று ஒருவாறு அடங்கினால்மற்றொன்று தோன்றுகிறது; நூல்சண்டை சச்சரவு எல்லாம் கிளம்புகின்றது; இப்படி ஓயாமல் காலம்கழிகிறது" என்கிறது. ஆம், இது மெய்யே, "அஸதாம் கர்வோபி நிர்வாபிதஃ" என்ற தேசிகனுடைய காலமும் இங்ஙனே தான் கழிந்தது. அக்காலத்தில் அந்த மஹானும் வீண்வம்புச் சண்டைக் காரரென்றே சில பேதையர்களால் பழிக்கப்பட்டு வந்தார். ஸச்சரித்ரரக்ஷையின் தொடக்கத்தில் "தைரேவ........தர்க்காத்மநா பரிணதைஃ ப்ரஹராமி மூர்க்காந்" என்று துணிந்து ஸாதித்து ப்ரஹரணம் பண்ணியுங்கூட மூர்க்கஜந கோலாஹலம் இன்னமும் ஒழிந்த பாடில்லை. அவ்வண்ணமாகவே நம்முடைய ப்ரஹரணங்களாலும் பூதிகந்தி ஸஹோதர மூர்க்க ஜனங்களின் மூர்க்கத்தனம் ஒழிந்ததில்லையென்றால் இதில் என்ன வியப்பு? "மூர்க்காந் ப்ரஹராமி" என்றும் "சிரஸ்ஸு நிஹிதம் மயா பதமதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்றும் இப்படி கூடவா எழுதிவைப்பது! என்று பழிப்பார் அக்காலந் தொட்டு இக்காலத்தளவும் மலிந்தேயுள்ளார்கள். "பரிமித குணே ஸ்பஷ்டாவத்யே முதா கிமுதாஸதே" என்று தேசிகன் ஸாதித்த கணக்கிலே நம்மைப்பற்றி இதுநிந்திப்பதில் என்னவியப்பு! இந்த ஸ்ரீராமாநுஜ ஸஞ்சிகையிலேயே "லோகாபிராம நல்வார்த்தைத்திரள்" என்ற வகுப்பிலுள்ள வார்த்தைகளத்தனையும் இந்த பூதிக்கு உபதேச ரூபமாகவேயன்றோ அவதரித்தன. "பலன் ஏதாவது உண்டா?" என்று கேட்கிறது. "தேசிகனுடைய தத்வடீகா ஸூக்தியில் பஹு அஸாமஞ்ஜஸ்யமஸ்தி" என்று கூசாமல் அஞ்சாமல் எழுதி வைத்திருக்கிற இந்த வ்ருச்சிக தஷ்டமலிம்லுசன் கண்ட பலன் நாம் எப்படி காணமுடியும்?

66. தேசிகனால் ந்யாஸவிம்சதி பெரியவாச்சான் பிள்ளைக்காகவே ஸாதிக்கப் பட்டது; (அதாவது) அவருடைய வேண்டுகோளுக்கிரங்கி வகுக்கப்பட்டது என்றால் இதை யார் மறுக்கவருவார்? தேசிகன் மஹாஜ்ஞானநிதி; அத்விதீய அநுஷ்டான சேவதி; ஸகலவித்யா வாஹிநீ ஜன்ம சைலர், ஸகல குமதித்வாந்த பாஸ்கரர்....... என்றிப்படி எத்தனை விசேஷணங்களடுக்கிக்கொண்டு போனாலும் ஏற்கும் ஏற்கும் ஏற்கும் என்றல்லது சொல்லுவாரில்லை ஸ்ரீவைஷ்ணவவுலகில். இவற்றால் இந்த பூதிக்கோ இதன் அநுயாயிகளுக்கோ என்னாயிற்று? என்கிற கேள்விக்கு வர்ஷசதமானாலும் விடை வெளிவராதன்றோ. நம்முடைய ஆசார்ய ஸமூஹத்தில் விளங்குகின்ற ஆசாரியர்களைப்பற்றி எத்தனை புகழுரைகள் பேசினாலும் அதில் அல்லாதார் பொறாமைப்பட வேண்டியவர்களேயொழிய, ஸத்துக்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருவரும் ஒருநாளும் அஸூயை கொள்ளார்கள். உடையவர் சரித்திரம் சொல்லுகிறேன், ஆளவந்தார் சரித்திரம் பேசுகிறேன் என்றாரம்பித்து தத்தக பித்தக வென்று ஒருவன் பேசினால் அவனை முகம் சிதறப்புடைப்பர்கள் பெரியோர்; அதுகொண்டு அவர்களை 'உடையவர் பெருமை பொறாதார், ஆளவந்தார் பெருமை பொறாதார்' என்று தூஷிப்பவர்கள் விவேகிகளாவர்களோ?

67. நஞ்சீயருக்குப் பின்பட்ட திருவாய்மொழி யுரைகளில் ஸ்ரீபாஷ்யாதி விரோதமேயன்றி மற்றும் எல்லாவிதக் குற்றங்களும் யாரும் அபலபிக்க முடியாத படி மலிந்திருப்பது கண்டாகுஷ்டமென்கிறது பூதிகந்தி. இதுவும் பழம்பாட்டு. நமது ஸஜ்ஜநாராதன ஸமீக்ஷா. ஸத்புருஷ ஸமாராதனம் முதலிய நூல்களில் அன்றே மறுக்கப்பட்டு முடிந்து போன விஷயம். ஸ்ரீபாஷ்யமென்று வாயால் சொல்லவும் அநதிகாரியானவிது ஸ்ரீபாஷ்ய விருத்தமென்று எழுதுவதானது துருஷ்கயவ நாதிகள் "இது வேத விருத்தம்" என்பது போலவே யாகுமத்தனை. ப்ரதி ப்ரச்நம் என்று மகுடமிட்டு இந்த பூதிகந்தி ஈட்டில் சில துராக்ஷேபங்கள் செய்திருந்தது. அதற்கு நாம் நமது ஸத்புருஷ ஸமாராதனத்தில் (பக்கம் 36-ல்) "ப்ரதிப்ரசச்நப்ரதி க்ஷேபம்" என்று மகுடமிட்டு எழுதியிருப்பதை யெடுத்துப் பார்த்துத் தலைகுனிந்து நிற்கட்டுமிது. ஈட்டில் எங்கெந்த இடங்களை இது ஆக்ஷேபித்ததோ அந்த இடங்களை யெல்லாம் தசோப நிஷத்பாஷ்யகாரரான ரங்கராமாநுஜ ஸ்வாமி கையாண்டு அப்படி யப்படியேஎழுதியுள்ளாரென்பதை எடுத்துக் காட்டி இதை நாம் வாய்மாளப்பண்ணி னோம். வடகலைமதத்தில் தோன்றியுள்ள வியாக்கியானங்கள் எல்லாம் ஈட்டிையே கொண்டு எழுதப்பட்டவை யாதலால் ஈட்டில் விருத்தமென்று இந்த பூதிகந்தி நினைக் கிறவை யாவும் அந்த வியாக்கியானங்களில் ஏறிக்கிடக்கின்றன. ஸாக்ஷாத் ஸ்வாமி யென்கிற அக்கிலிபிக்கிலி கிடக்கட்டும். ஸம்ஸ்க்ருதத்தில் ஒன்பதினுயிரப்படி யெழு திய ரங்கராமாநுஜஸ்வாமி உண்மையில் சிறந்த வித்வான். அவர் ஈட்டை நிதியாகக் கொண்டவரென்பதை நாம் பல விடங்களைக்காட்டி மூதலித்திருக்கிறோம். இதெல்லாம் 1952ஷு மார்ச்சு மாதத்தில் வெளிவந்த பாரதமாதலால் வித்வான்களுக்கு மறந் திருக்குமென்று இப்போது மறுபடியும் கிளப்புகிறது பூதிகந்தி.

68. இந்த பூதிகந்திக்குமுக்கியமான வொருவார்த்தை; "சேஷாயுஷ்யபி சேஷிதம்பதி தயா தீக்ஷாமுதீக்ஷாமஹே" என்றிருக்கிற நாம் "நானேறப் பெறுகின்றேன் நரகத்தை நகு நெஞ்சே!" என்றநுஸந்திக்க வேண்டிய காலம் அணித்தென்றிருக்கிறோம். அதன் பிறகு இதுவோ இது போன்றவர்களோ எது எழுதினாலும் ப்ரதித்வனி கிளம்ப வழியேயிராது. அதற்குள்ளாகவே இது எழுதவேண்டியவற்றை யெல்லாமெழுதி எல்லாவற்றுக்கும் நம்முடைய மறுப்புரைகளை அவதரிப்பித்து ஸ்ரீவைஷ்ணவ வுலகுக்கு அபரிமித நன்மைகளை அமோகமாகச் செய்து வைக்கட்டும். "தஸ்மிந்ஸ்த மிதே பீஷ்மே... ஜ்ஞாநாங்யல் பீபவிஷ்யந்தி ததஸ் த்வாம் சோதயாம்யஹம்" என் னும்போலே D. R. போன்ற சுபாசம்ஸிகள் இது போன்ற அஜ்ஞான அந்ததாஜ் ஞானக் குடுக்கைகளைக் கிளப்பிவிடாமல் நம் கண்ணன் போன்ற விவேகிகளைக் கிளப்பிவிட்டால் ஜகத்துக்கு இன்னமும் ச்ரேயஸ்ஸுகள் விளையும்.

69. நாம் ஒரு பக்கத்தில் தேசிகனையும் மற்றொரு பக்கத்தில் நம்பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளை முதலான ஆசாரியர்களையும் எண்ணியெண்ணிப்பார்த்து, அனேக க்ரந்தங்களுக்குக் கர்த்தாவாயிருக்கையும் அநேக பிருதாவளீ பூஷிதராயிருக்கையு மாகிற பெருமைகள் தேசிகனுக்குப் போல மற்ற ஆசாரியர்களுக்குச் சிறிதுமில்லையே யென்று பொருமைப்படுகிறோமாக இந்த பூதிகந்தி எழுதுகின்றது. இது சோசநீய மான மூடத்தனம். *அடங்கெழில் சம்பத்தடங்கக் கண்டு, ஈசனடங்கெழிலஃதென்று அடங்குகவுள்ளே* என்று ஆழ்வாரருளிச் செய்தகணக்கிலே நம்முடைய ஸ்ரீவைஷ்ண வஸம்பிரதாயத்திற்கு ஒவ்வோ ராசார்யராலும் ஒவ்வொரு விதமான பெருமை விளைந் திருக்கின்றதேயென்ற நாம் உள்ளம் பூரித்திருக்கின்றவர்களேயென்பதை நமது நூல்களினல் உலகமுணர்ந்திருக்கின்றது. தேசிகனை பகவத் ராமாநுஜ தரிசனத் தில் வேறுபட்டவராக இந்த பூதிகந்தி நினைப்பதுபோல நாம் நினைத்திலோம். இதர மதஸ்தர்கள் ஆதிசங்கராசாரியர் அளவற்ற நூல்களைச் செய்திருப்பதாகவும், பகவத் ராமாநுஜர் ஸ்வல்பக்ரந்தங்களையே செய்ததாகவுஞ் சொல்லி ஏசிவருகிறார்கள். இதற்கு ஸப்ததியில் தேசிகன் "விகடமுரபித்வக்ஷ:பீடபரிஷ்கரணோசித: குலகிரி துலாரோஹே பாவீ கியாநிவ கௌஸ்துப:". என்று உண்மையான ஸமாதான முரைத்தனர். உலகத்திலுள்ள ஸகல க்ரந்தங்களையும் ஒரு தட்டில் வைத்து மற்

ரொரு தட்டில் ஆசார்யஹ்ருதயத்தை மட்டும் வைத்தால் இதற்கு எத்தனை கூடியுமீடாகாதென்கிற தத்துவம் பூதிகந்தி ஸதர்மாக்களுக்குத் தெரிய வழியில்லை. நான்கு வேதங்களுக்கும் பாஷ்யங்கள் செய்தவர்களோ, தர்க்க வ்யாகரண மீமாம்ஸாதி சாஸ்த்ரங்களில் உத்க்ரந்தங்களை யெழுதிவைத்தவர்களோ இன்னுமெத்தனை செய்தவர்களும் ஸ்ரீவைஷ்ண வேதர மதஸ்தர்களேயொழிய ஸ்ரீவைஷ்ணவர்களில் ஸர்வலோகோப ஜீவ்யங்களான க்ரந்தங்களையெழுதி வைத்தவர் ஒருவருளரோவென்று ஏசுகின்றவர்களுக்கு இந்த பூதிகந்தி விடைகூறியாகட்டும்.

70. நான்கு பாஷைகளிலும் ஐந்நூறுக்கு மேற்பட்ட நூல்களை உலகமெல்லாம் சிரமேற்கொள்ளும்படி யெழுதிப் பிரசுரம் செய்திருக்கின்ற—இனிமேலும் நூற்றுக்கணக்கான நூல்களையெழுதிப் பிரசுரம் செய்யவிருக்கின்ற நம்மைநோக்கி இந்த பூதிகந்தி போல்வார் பொறாமைப்பட்டுச் சாகவேணுமேயொழிய நாம் பொறாமைப்பட வேண்டும்படி பெருமைபெற்ற வ்யக்தி பூதிகந்தி கொண்டாடும் வகுப்பில் எங்காளிலுமொருவரு மிலரென்னு முண்மையை யறிந்தவர்கள் நாற்றிசைகளிலும் நிரம்பியுள்ளார்கள்.

71. இந்தப் பூதிக்கு நூலெழுதும் முறை அடியோடு தெரியாது. (பூதிகந்தி புஷ்பம் பக்கம் 23ல்) "இங்கு ஒரு அசட்டு ஆக்ஷேபம் செய்யப்படுகிறது" என்று தொடங்கி * பூதம் ஸரச்சேத்யாதி பட்டருடையதான சுலோகத்திற்கு நாமிட்ட விவரணத்தை உதாஹரித்திருக்கின்றது. எதுவும் இதுக்கு ஆக்ஷேபமாகவே புலப்படுகிறது. "காளிதாஸன் * மந்தஃ கவியசஃ ப்ரார்த்தீ * என்கிற ச்லோகத்திலும் * க்வஸூர்ய ப்ரபவோ வம்சஃ * என்கிற சுலோகத்திலும் தான் ரகுவம்சம் செய்யக்கூடாதென்பதைத் தானே ஆக்ஷேபித்திருக்கிறான்" என்றவனுக்குத் தம்பியேயிது. அல்லது தமையனாகவுமிருக்கலாம். ஆழ்வார்களைத் தொட்டுப்பேச இதற்கு என்ன அதிகாரம். சிலவாண்டுகட்கு முன்னே பூந்தமல்லியில் வைகாநஸர்கள் ஒரு மகாநாடு நடத்த நிச்சயித்து அதற்காக விளம்பர மச்சிட்டார்கள். "நம்முடைய ஆழ்வார்களில் தலைவரான பகவத்ராமாநுஜருக்கு ஆறு ஸம்ஸ்காரங்கள் ஸாதித்தவரும் உத்தம ஆழ்வாருமான திருக்கச்சநம்பி யவதாரஸ்தலத்தில் மகாநாடு கூடப்படும்" என்று அச்சிட்டுப் பிரசுரம் செய்தார்கள். அவர்களை அநாயாஸேந வெல்லவல்ல இந்த பூதிகந்தி பிரபந்தசாரப் பாட்டுக்களுக்கு விசேஷார்த்த வியாக்கியானம் பண்ணுவதைப் பார்க்கும்போது * உமாஸுதம் வியாக்கியானமும் * பம்போபவன வியாக்கியானமுமே நினைவுக்கு வருகிறது. (அவையாவன—)

[உமாஸுதம்] முக்கண்ணன் பெண்டாட்டி மூத்தபிள்ளையென்கை. மாஸுதனை வியாவர்த்திக்க உமாஸுதனென்றது. இல்லையானால் ரமாஸுதமென்னவேணுமிறே. (சோ) இதுக்கர்த்தம் அண்ணு ஸாய்ப்பர். சோற்றுக்கு வழியில்லையேயென்று சோகிக்கிறபடியென்பர். (கவிநாச காரணம்) கவிகளுக்கெல்லாம் நாசத்தைப் பண்ணுகிறவர். (ந—மாமி) நித்ய ப்ரம்மசாரியாகையால் மாமியாரில்லையாம், (விக்நேச்வரபாதமும் கஜம்) முகந்தான் யானைமுகமென்றால் காலும் யானைக்காலாம். பாதபங்கஜமென்று பாடமானால் அது உமாஸுதமென்றத்தோடு சேரமாட்டாதாகையாலே இப்படியேதான் அய்யாநிர்வஹிக்கும்படி. இனி பம்போபவந வியாக்கியானமாவது, (பம்போ!) பம்பாஸரஸ்ஸைப் பார்த்தவாறே ஓவென்றழுகிறார் ராமர். கோதண்டராமன், ஸீதாராமன், ஜானகிராமன், தசரதராமன் என்னுமாபோலே அழூஞ்சிராமனென்றும் சொல்லக்கடவதிறே. (பவனமாருதம்) பவனமென்றாலும் மாருதமென்றாலும் காற்றுக்குப் பேராயிருக்க இரண்டையும் சேர்த்துச் சொல்லுகிறது அலைமேலலை, மலைமேல்மலை, காற்றுமேல் காற்று குட்டிக்காற்றென்னுமாபோலே. அபிராமபுரத்தில் ஆச்சரியமான திருப்பாவை வியாக்கியான ப்ரசங்கம் செய்தவிதுக்குச் சொல்லத்தான்வேணுமோ?

பூதிகந்தி புஷ்பப்ரஹார ஸப்ததி முற்றிற்று.

இனி பூதிகந்த நிராஸ சதகம் அடுத்த இதழில் வெளிவரும்.

---

கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்.

(2) கராலபாடி ராதாகிருஷ்ணய்யா,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2
(இவர் சென்னையில் ப்ரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)



If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.




202
146 Sri. Vangeepuram,
Raghavacharya Swami,
MELAKOTE; (Mysore Distt.)




Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.